# PARANAR



BY

V. VENKATARAJULU REDDIAR,

Junior Lecturer in Tamil,

Oriental Research Institute,

University of Madras.





UNIVERSITY OF MADRAS

1933

[Price Rs. 2—8—0

# பரணர்




சென்னைச் சருவகலாசாலை
ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட்
தமிழ் ஜூனியர் லெக்சரர்,
வித்வான்
வே. வேங்கடராஜுலு ரெட்டியார்

எழுதியது

மதராஸ் யூநிவர்ஸிடி

1933

[விலை ரூபாய் 2—8—0

## முன்னுரை

யான், தெலுங்குமொழியைப் பயின்ற காலத்தில், '[1]ஆந்த்ர கவுல சரித்திரமு' என்னும் புலவர்வரலாற்று நூலைப் படித்தேன். அது, சதகம் என்னுஞ் சிறுநூலொன்றனைமட்டுமே செய்த கவிக ளொழிய, மற்றைப்புலவரனைவரது வரலாற்றையும் தெள்ளிதின் தெரிப்பது. அதனை யறிந்தபோது, 'இதுவேபோல், தமிழ்மொழி யினும் பெரும்புலவர் வரலாறுகளை முறைப்பட எழுதி வெளி யிடுதல் நன்று' என்னும் எண்ணம் என் உள்ளத்தில் உண்டாயிற்று. பின்னர், கன்னடமொழியிலுள்ள [2]'கர்ணாடக கவிசரிதெ' என்னும் புத்தகத்தைப் படித்தபோது அவ்வெண்ணம் மிகுவதாயிற்று. ஆயினும், தமிழ்மொழியில், பண்டைக்காலத்துப் புலவர்களே சுமார் ஐந்நூற்றுவரிருத்தலானும், அவர்க்குப் பிற்பட்டோர் மிகப் பலராக லானும் அவர்களனைவரது வரலாற்றையும் ஒருங்கே எழுதிமுகிப்பது அரிதாகுமாதலின், பண்டைப் புலவர் வரலாற்றையாதல் எழுதுதல் வேண்டும் என்னும் எண்ணம் என் மனத்தில் எழுந்தது; அதன் பயனே, **பரணர்** என்னும் இவ்வாராய்ச்சிநூலாகும்.

சென்னைச் சருவகலாசாலையாரால் யான் நியமனஞ் செய்யப் பெற்ற சில காலத்தில், பண்டைப்புலவர் வரலாறுகளை எழுதத் தொடங்கி, அப் புலவர்களின் பெயர்களை அகராதியாக அமைத்துக் கொண்டு, அவர்கள் இயற்றிய செய்யுட்களினின்றே அவர்கள் வர லாற்றுக்குவேண்டிய குறிப்புக்களைக் குறித்துக்கொண்டு வந்தேன். அம்முறையில், உயிர்வருக்கம் முடிய நடைபெற்றது. அவ்வாறே புலவரனைவரது வரலாற்றுக்கும் குறிப்பு எழுதிக்கொண்டு, பின்னர் வரலாறு எழுதுவதாயின் காலம் நீளும் என அறிந்து, அம்முறையை விடுத்து, பெரும்புலவரொருவர் வரலாற்றை முதலில் எழுதி வெளி யிடுதல் நன்று எனக் கருதி, தமிழ்நாட்டுப் பழைய வரலாறுகள் பல வற்றைத் தம் செய்யுளுள் அறிவித்துள்ளவராகிய பரணர் வரலாற்றை முதற்கண் எழுதலாயினேன். இவ்வாறே, பெரும்புலவர் வரலாறு களைத் தனித்தனிப் புத்தகமாகவும், ஏனையோர் வரலாறுகளுள் பல வற்றை ஒருங்குசேர்த்து ஒவ்வொரு புத்தகமாகவும் வெளியிடுதல்

---

1. ராவ்பஹதூர். K. வீரேசலிங்கம் பந்துலுகாரு எழுதியது.
2. ராவ்பஹதூர். R. நரசிம்மாசார்யாரவர்கள், எம். ஏ. எழுதியது.

வேண்டும் என்பது என் கருத்து. அதனால், பரணர் வரலாற்றை எழுதி முடித்தபின், அப் பரணரோடு தொடர்புடையவராய கபிலரது வரலாற்றையும் எழுதினேன். இம்முறையில், நக்கீரர், அவ்வையார், கல்லாடர், மாமூலர் முதலியோர் வரலாறுகளை எழுதுதல் வேண்டும் என்னுங் கருத்துடையேன். ஆயினும், இலக்கண நூலில் எனக்குள்ள ஆர்வமிகுதியால், தொல்காப்பியத்திற்கு ஓர் உரை எழுதக் கருதி, அதில் எழுத்ததிகாரத்திற்கு இப்போது உரை எழுதி முகித்திருக்கின்றேன்.

## நூற்பொருள்

## I

பரணர் வரலாறாக, பழைய திருவிளையாடல் முதலிய புராணங்களிற் காண்பனவற்றை அச் செய்யுட்களை யொட்டி இந்நூலின் முதற்கண் எழுதியுள்ளேன். அவற்றை யடுத்து, ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் என்னும் வடமொழி நூலிற் கூறப்பட்டுள்ள வரலாற்றைத் தமிழ்மக்கள் நன்கு அறிந்துகொள்ளுதற்பொருட்டுச் சிறிது விரிவாக எழுதியிருக்கின்றேன். அதனை எழுதுதற்கு, இவ்வாராய்ச்சிக்கழகத்தில் தமிழ் ஆராய்ச்சி மாணவரா யிருந்த வித்வான் K. V. சேஷாசல சர்மா அவர்கள உதவிசெய்தார்கள்.

## II

பரணர் இயற்றிய செய்யுட்களாலும், பிறசெய்யுட்களாலும் அவர் வரலாறாக அறியப்படுபவற்றைத் தொகுத்து, பரணர் வரலாறு என்னுந் தலைப்பின்கீழ் எழுதியிருக்கின்றேன்.

## III

பரணர் செய்யுட்களிற் காணும் தவறான பாடங்களைக் குறிப்பிட்டு, இயன்றவளவில் அவற்றின் சரியான பாடங்களை ஆராய்ந்து எழுதியுள்ளேன். பதிப்பிக்கப்பட்டுள்ள பாடங்களையும் பாடாந்தரங்களையும் ஆழ்ந்து நோக்கித் திருத்தங்கள் செய்யப்பட்டன; சிலவற்றிற்கு, வேறு ஏடுகளையும், வேறு நூல்களையும் ஆராய்ந்து உண்மை காணப்பட்டன. சிலவற்றின் உண்மையான பாடங்கள் இன்னும் விளங்கவில்லை. உண்மையான பாடங்களை அறிய ஆராயும்பொழுது, பண்டிதர், இ. வை. அனந்தராம ஐயரவர்கள் (Late fellow in Tamil, Oriental Research Institute, Madras University) உடனிருந்து துணைபுரிந்தார்கள். இப்புத்தகம் அச்சாகி வெளிவருதற்குமுன் அவர்கள் இவ்வுலகவாழ்வினை நீத்தது எனக்குப் பெரிதும் வருத்தத்தைத் தந்தது.

பண்டை நூல்களைப் பதிப்பிக்கும்போழ்து பிழைபாடுகள் நேர்தல் இயல்பே. அவை, மறுபதிப்புக்களில் திருத்தம் அடைதல் வழக்கம். இவ்வுண்மை,

‘இந்தப் பிரதிகளாலும், அப்பால் செய்துவந்த பழைய இலக்கண இலக்கிய ஆராய்ச்சிகளாலும், பழைய உரைகளிற்கண்ட மேற்கோட்காட்சிகளாலும், புறத்திரட்டு என்னுந் தொகை நூலாலும் இந்நூல் மூலமும் உரை முதலியனவும் அடைந்த திருத்தங்கள பல. .........சில பாடல்களின் முதற்பாகங்களும், சிலவற்றின் இறுதிகளும், இடையிடையே விடப்பட்டிருந்த தொடர்மொழிகள் பலவும், சொற்கள் பலவும் இப்போது தெரியவந்தன......... குழறுபடையாக இருந்த பகுதிகளுட் சில, செப்பஞ் செய்யப்பெற்றும...... உள்ளன.’

—புறநானூற்று இரண்டாம் பதிப்பின் முகவுரை.

‘கையெழுத்து மூலப்பிரதியாலும், நாளடைவிற் கிடைத்த சில உரைப்பிரதிகளாலும், பலவகையான ஆராய்ச்சிகளாலும் இவை சில சில திருத்தங்களை யடைந்தன. முன்பு விளங்காமலிருந்தவற்றுட் சில சில விளங்கின.’

—பத்துப்பாட்டு இரண்டாம் பதிப்பின் முகவுரை.

என்று, மஹாமஹோபாத்யாய டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்கள் எழுதியிருப்பவற்றானும் அறியப்படும். பழைய நூல்களிற் காணும் தவறான பாடங்களை நமது கருத்திற் கேற்பத் திருத்திவிடுதல் தகாது. அவற்றைப் பலபிரதிகளில் நோக்கி, பலமுறையாராயந்து, உண்மையான பாடம் இஃது எனக் கண்டறிதலே அறிஞர் கடனாகும்.

## IV

சிறந்த புலவர்கள் இயற்றாத நூல்களையும் அவர்கள்மேல் ஏற்றிக்கூறும் வழக்கம், நமது நாட்டில் மட்டுமே அன்று, எல்லா நாடுகளிலும் உளது. அவற்றை அறிஞர்கள் ஆராய்ந்து உண்மை காண்கின்றனர். நமது மொழியில், புகழேந்திப்புலவர் இயற்றியன என்று எத்தனையோ நூல்கள் வழங்குகின்றன. கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவனாகிய தேசிங்குமன்னன் வரலாற்றையும் புகழேந்திப்புலவர் செய்தனர் என்று, சிறிதும் அஞ்சாமல் அவர் தலையில் சுமத்திவைத்திருக்கின்றனரே! இவ்வாறே, பரணர் பேரிலும் சில சிறு நூல்களை ஏற்றிவைத்திருக்கின்றனர். அவை, அவரால் செய்யப்பட்டன அல்ல என்பது, அகச்சான்று கொண்டே ஆராய்ந்து அறுதியிடப்பட்டுளது.

## V

பரணாற் பாடப்பட்ட அரசர், தலைவர், வள்ளல்கள் இவர் பலராவர். அவர்களுள் பரணர்காலத்தில் வாழ்ந்திருந்தவர் என்று துணிந்து கூறப்படுபவர் சிலரே. அவராவார் — சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி, சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி, சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், மோகூர் மன்னன், அறுகை, வையாவிக்கோப் பெரும் பேகன் என்பவர். இவர்களேயல்லாமல், ஏனையோருள்ளும் பலர், பரணர்காலத்தில் வாழ்ந்திருந்திருத்தல் கூடும். ஆயினும், அவர்கள், இவர் இவர் என்று உறுதியாகக் கூறுதல் அரிது. ஆகலின், அவர்களைத் தொடர்பு நோக்கிப் பல பிரிவினராக வகுத்துக்கொண்டு, அவர்கள் வரலாற்றை ஆராய்ந்திருக்கின்றேன். சில செய்திகள், தொடர்புடைய பலர் வரலாறுகளிலும் குறிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொருவர் வரலாற்றையும் தனித்தனியே நோக்குவோர்க்கு விளங்குதற்பொருட்டு, அவ்வாறு குறிக்கப்பட்டனவாகலின், அவற்றைக் 'கூறியது கூறல்' எனக் கொள்ளுதல் ஆகாது. மலைகள் ஊர்கள் முதலியவற்றுள்ளும் இவ்வாறே கொள்க.

## VI

பரணர்செய்யுட்களில் வந்துள்ள ஊர்கள் விலங்குகள் பறவைகள் முதலியவை இவை இவை என எளிதின் அறிந்துகொள்ளுதற் பொருட்டு அவற்றின் பெயர்களை, அகரம் முதலாக வரிசைப்படுத்தி, அவற்றைப் பற்றிய செய்திகளையும் ஆராய்ந்து எழுதியுள்ளேன்.

## VII

ஒருகாலத்தில் உயர்வான வழக்கங்கள், மற்றொரு காலத்தில் இழிவானவையாகவும், ஒரு நாட்டில் சிறப்பான கொள்கைகள், மற்றொரு நாட்டில் இழிவான கொள்கைகளாகவும், ஒரு குலத்தினர்க்குத் தகுதியான செயல்கள், மற்றொரு குலத்தினர்க்கு இழிவான செயல்களாகவும் கொள்ளப்படுதல் இயல்பே. ஆகலின், பண்டைக்காலத்திற் சிறப்பான வழக்கங்களுட் சில, இக் காலத்தில் நமக்கு இழிவானவையாகத் தோன்றுதல் கூடும். ஆயினும் அக் காலத்து வழக்க ஒழுக்கங்கள் இவை யென அறிந்துகொள்ளுதல் வேண்டற்பாலதே யாகும். அது கருதி, பரணர் செய்யுட்களிற் காணும் வழக்க ஒழுக்கங்களையும் எழுதியுள்ளேன். அகப்பொருட் பாட்டுக்களிற் கூறப்படுஞ் செய்தி அனைத்தும் புனைந்துரைகளே என்பது இக்காலத்தவர் சிலர் கொள்கை. நூல்களில், புனைந்துரை வகையாகக் கூறப்படுவன ஒரு சில உண்டு; ஆயினும், உலகியலான வழக்கங்களே பல.

'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்' (தொல். அகத். 56)

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தான், நூல்களில் புனைந்துரையும் உலகியலும் ஆகிய இரண்டும் காணப்படும் என்பது போதரும். இன்ன திணையில் இன்ன ஒழுக்கத்தைக் கூறுதல் தகும் என்று உணர்ந்து, அவ்வாறு நியமஞ் செய்திருப்பது, புலனெறி வழக்காகும். பாலைத்திணையில் 'ஊடலை'யும், மருதத்திணையில் 'இருத்தலை'யும் கூறின், அவை எவ்வாறு சிறக்கும்? நீரும் நிழலுமற்ற பெருமணல் வெளியில்—தறுகண்மையும் கொலைத் தொழிலும் வாய்ந்த ஆறலைகள்வர் ஆள் நோக்கி நிற்கும் அருஞ்சுரத்தில்—வெப்பம் மிக்க வேனிற்காலத்தில்—காய்கதிர் தெறலுறுங் கடும்பகலில்—தலைவன் நடந்து சென்றான் எனின், அவற்றைக் கருதித் தலைவி வருந்துதல் அமையும்; தலைவனுக்குப் பொருள்மேலுள்ள வேட்கையுஞ் சிறக்கும். ஆகலின், பிரிதற் பொருளை பாலைத்திணைக்கு உரியது என்று நியமஞ் செய்துள்ளனர். இவ்வாறே ஒவ்வொரு நிலத்தின் இயல்பிற்கேற்பவே அவ்வற்றிற்கு உரிப்பொருளை உரிமைப்படுத்தியிருப்பது அறிந்துகொள்ளத்தக்கது. இத்தகைய புலனெறி வழக்கம் வடமொழி நூல்களிலும் உண்டு. அதனை, 'கவிஸமயம்' என்பர். சந்தனமரத்தைக் குறித்துக் கூறல் வேண்டுமாயின், பொதியில் மலையைக் கூறுதல் வேண்டும், யானைகளைக் குறித்துக் கூறல்வேண்டுமாயின், களிங்கதேசத்தைக் கூறுதல் வேண்டும் என்பன போன்ற நியமங்கள் வடமொழியில் பல உள. இவ்வாறே தமிழ்மொழியிலும் புலனெறிவழக்காகக் காணுஞ் சிலவற்றைக் கொண்டு, அகப்பொருட் பாக்களிற் கூறப்பட்டுள்ளவையெல்லாம் புனைந்துரைகளே என்றல் பொருந்துவ தன்று. ஆசிரியர் நச்சினார்க்கினியர், தொல்காப்பியம் அகத்திணையியல் 2-ஆம் சூத்திரத்தின் உரையிலும், 53-ஆம் சூத்திரத்தின் உரையிலும் இதனைக் குறித்து எழுதியிருப்பவை ஈண்டைக்கு அறியத்தக்கன.

## VIII

பரணர் பாட்டுக்களில் வந்துள்ள உந்தீற்றுச் சொல்லைக் குறித்து ஆராய்ச்சி செய்யுமிடத்து, அச்சொல்லைக் குறித்துத் தொல்காப்பியனார் கொண்ட கருத்தினை, யான் ஆராய்ந்தறிந்தவாறு எழுதியுள்ளேன். அதுவேயன்றி, 'புறநானூற்றின் பழைமை' என்னும் நூலிற் கூறியிருப்பன சிலவற்றையும் ஆராய்ந்துள்ளேன்.

மிகப்பழமையான காலத்தில் தென்னாட்டில் ஒரே மொழியே வழங்கி வந்தது என்பதும், பிற்காலத்தில் அது கன்னடம், தெலுங்குமுதலிய பலமொழிகளாகப் பிரிந்தது என்பதும் மொழிநூ

லாராய்ச்சியாளர் அறுதியிட்டுள்ள செய்திகளே. நம் நாட்டில், பண்டைக் காலத்தில் வழங்கி வந்த மொழியைப் 'பழந்தமிழ்' என்னலாம். பழந்தமிழைப் பல வழிகளில் சீர்திருத்தி யமைத்த மொழியே செந்தமிழ் என வழங்குவது. இவ்வுண்மையைத் தொல்காப்பியத்தை ஆழ்ந்து கற்றறிந்து, அதன் பொருள்களைக் கன்னடம் மலையாளம் முதலிய மொழிகளோடு சீர்தூக்கிப் பார்க்கின் நன்கு விளங்கும். செந்தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் என்னும் மொழிகளெல்லாம் ஒரு மொழியின் பிரிவுகளே என்னும் உண்மை விளங்குதல்வேண்டி, ஒப்புமை யுள்ள சொற்கள் சிலவற்றை எடுத்துக் காட்டாகக் குறித்திருக்கின்றேன்.

## பரணர் பாட்டுக்கள்

பரணர் இயற்றிய செய்யுட்கள், வெவ்வேறான ஐந்து நூல்களில் இருத்தலின், அவை இவ் வாராய்ச்சிநூலைப் படிப்போருக்கு உதவியாதற்பொருட்டு, அவற்றை பிற்சேர்பாகப் பதிப்பித்துள்ளேன். நற்றிணை, குறுந்தொகை, பரிபாடல், புறநானூறு என்னும் நூல்களுள் செய்யுட்கள், யாதேனும் ஒரு முறையில் தொகுக்கப்பட்டன அல்ல; அகநானூறு, திணைகளை நோக்கித் தொகுக்கப்பட்டுள்ளதாயினும், அதுவும் சிறந்த முறைமையாதல் இன்று. தொகைநூற் செய்யுட்களுள், புலவரொவ்வொருவருடைய செய்யுட்களையும் ஒருசேரத் தொகுத்து, அவற்றையும் முறைப்படுத்திப் பதிப்பிக்கின், கற்போருக்கும் ஆராய்ச்சி செய்வோர்க்கும் மிக்க நன்மை பயக்கும் என்பது எனது கருத்து. அதனால், பரணர் செய்யுட்களை, பாடப்பட்டோரை நோக்கி முறைப்படுத்தியுள்ளேன்; தலைவர்கள் பெயரே வந்திலாத செய்யுட்களை ஈற்றில் நிறுத்தி, அவற்றுள்ளும் அடியளவிற் குறைந்தனவாகிய குறுந்தொகைச்செய்யுட்களை முதலிலும், நற்றிணைச்செய்யுட்களை இடையிலும், அடியளவில் நீண்டனவாகிய அகநானூற்றுச்செய்யுட்களை இறுதியிலும் அமைத்துள்ளேன்.

பரணர் என்னும் இவ் வாராய்ச்சிநூற்கு, சொல்லகராதி எழுதி, அதனை இப்புத்தகத்தின் ஈற்றில் சேர்த்துள்ளேன். பரணர் செய்யுட்களில் வந்துள்ள சொற்கள் அனைத்தையும் அகராதியாகச் சேர்ப்பின் மிக்க நலனாகும் என்னுங் கருத்துடையேனாய் அவற்றை எழுதினேனாயினும், அதனைச் சேர்ப்பின் புத்தகம் பெருகிவிடும் என்னும் அச்சத்தால், அவற்றை இப்புத்தகத்திற் சேர்த்திலேன். இது நிற்க.

வடமொழியெழுத்துக்களைக் குறித்துப் பாணினீயசிக்ஷையிற் கூறியுள்ள விஷயத்தை, ப்ரஹ்மஸ்ரீ. வஜ்ஜல. சின்னஸீதாராம

ஸ்வாமி சாஸ்திரிகள் (Junior Lecturer in Telugu, Oriental Research Institute) தெரிவித்தார்கள். யான், ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தினின்று எழுதிய பரணர் வாலாற்றையும், பரணர் செய்யுட்களிற் காணும் அணிகள் மெய்ப்பாடு இவற்றைக் குறித்து எழுதியவற்றையும் ஸ்ரீமத், H. சேஷையங்காரவர்கள் (Junior Lecturer in Canarese) நன்கு நோக்கித் தங்கள் கருத்தினைத் தெரிவித்தார்கள். ஸ்ரீமத். மு. ராகவையங்காரவர்கள், (Cheif Pandit, Tamil Lexicon Office) இப்புத்தகம் அச்சாகும் போது அன்புடன் ஒரு முறை நோக்கிச் சிலவிடங்களில் தங்கள் கருத்துக்களைக் கூறினார்கள். இவர்க ளனைவருக்கும் யான் என்றும் நன்றி யறிதலை யுடையேன்.

தமிழ்மொழியைப் பலவாற்றானும் நன்னிலைக்குக் கொண்டு வருபவர்களும், தமிழ்ப்புலவர்களுக் கொரு பெருநிதியாய் விளங்கு பவர்களும் ஆகிய, ம-ா-ா-ஸ்ரீ கா. நமச்சிவாய முதலியாரவர்கள் (Chairman, Board of Studies in Tamil, University of Madras), இபுத்தகம் கையெழுத்துப்பிரதியா யிருந்தபோது முழுவதும் படிதது, இன்றியமையாத திருத்தங்களைச் செய்துதவி யதனோடு, புத்தகம் அச்சாகி வரும்பொழுதும் பலமுறை நோக்கிப் பல்லாற்றானுந் திருத்தஞ்செய்தருளினார்கள். அவர்களை எழுமை எழு பிறப்பும் உள்ளுத லன்றி, அவர்கட்கு யான் செய்யுங் கைம்மாறு யாதுளது? 'மாரிமாட் டென்னாற்றுங் கொல்லோ உலகு!'

இவ் வாராய்ச்சிக்கழகத்தை நிறுவியதற்கு முதல்வரா யிருந்த வரும், என்னை இங்குத்தருதற்குப் பெரிதும் முயன்றவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ திவான்பஹதூர். ஸர். ஆர். வேங்கடரத்னம் நாயடு காரு Kt. LL. D.க்கு (Formerly Vice-Chancellor, University of Madras.) என்றும் நன்றியறிதலுடையேன்.

நம்நாட்டு மொழிகளின் வளர்ச்சியைக் கருதிப் பெருஞ்செயல் ஆற்றிவருஞ் சென்னைச் சருவகலாசாலையார்க்கு நம் நாடு நன்றி பாராட்டுங் கடப்பா டுடையதாகும்.

விம்ப்டி கார்டென்ஸ்,<br>ராயப்பேட்டை,<br>8—3—1933.

வே. வேங்கடராஜுலு

---

# உள்ளுறை

எழுத்து மாறி வந்த சொற்கள்.

ஒளிறு = ஒளிர்—ஈழ்க்கும் = ஈர்க்கும்—
பேர்வாய் = பேழ்வாய்.

அசைநிலைச் சொற்கள் முதலியன.

மதி—கொல்—தில்—ஆர்—நின்மே, சென்மே,
களைமே—இகாம்—சின்—மோ.

உந்தீற்றுச் சொல்.

சொற்கள்.

பழைய சொற்கள்—பொருள் வேறுபட்ட சொற்கள்—
கன்னடம், தெலுங்கு, மலையாளம் இம்மொழிச் சொற்
களோடு ஒப்புமையுடைய சொற்கள்.
சூரரமகளிர்.

வடசொற்கள்.

சீர்த்தி—குருதி—குருசில்.

---

# பரணர்

---

இவ்வுலகத்தில் ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு காலத்தில் உயர்நிலை யடைந்து விளங்குதல் இயல்பு. எந்தக் காலத்தில் எந்த நாடு உயர்நிலையை யடையுமோ அந்தக் காலத்தில் அந்த நாட்டில் வழங்கும் மொழியும் உயர்நிலையை யடைந்து ஒளிரும். ஒரு நாடு உயர்நிலை எய்தி விளங்குங் காலத்தில், அந் நாட்டில் பெரும் புலவர் பலர் சிறப்புற்று விளங்கி, தம் மொழியணங்கிற்குப் பற்பல காப்பியக் கலன்கள் செய்து புனைந்து அழகுறுத்துவர். இவ்வாறே, நமது தமிழ்நாடு, தமிழரசு படைத்து மேம்பாடடைந்து விளங்கிய காலத்தில், புலவர் பலர் பல்வேறிடங்களில் வாழ்ந்து, பல பாமாலைகளைச் சூட்டித் தம் தமிழ்த்தாயைப் போற்றி வளர்த்து வந்தனர். அவர்கள், தம்மை அன்புடன் புரந்த முடிவேந்தர்கள் அரசர்கள் வள்ளல்கள் வீரர்கள் ஆகியவர்களைக் குறித்தும், தம் காலத்தில் நாட்டில் நிகழ்ந்த வரலாறு, வாழ்க்கைத்திறன், போர்முறை, வாணிகம், கைத்தொழில், உணவு முதலான பலவற்றைக் குறித்தும் இயற்றிவைத்த பெறலருஞ் செய்யுட்டொகுதிகள் இல்லாவிடின், சரித்திர ஆராய்ச்சியிற் பேரவாப் பிறந்துள்ள இக்காலத்தில், நம் நாட்டுச் சரித்திரம் எழுதுவோர், உண்மை காண்டற்குரிய கருவிக ளின்றித் தளர்வுறுவர் என்பது உண்மையே. இங்ஙனம், நமது நாட்டின் பழைய வரலாறுகள் பலவற்றை நாம் அறியுமாறு அருள்புரிந்த பெரும்புலவர்களின் வாழ்க்கை, புலமைத்திறன், மேன்பாடு முதலான பலவற்றை அறிவதில், நமக்கு ஊக்கமும் உவகையும் உண்டாதல் இயல்பே. அவ்வாராய்ச்சி, நமக்குச் சரித்திரஞானமாகிய ஒளியைத் தந்து, மேன்மையையும் சிறப்பையும் பயக்கும் என்பதில் ஐயமின்று. ஆகலின், அத்தகைய பல வரலாறுகளை நாம் அறியுமாறு உதவிய பெருவள்ளலும் பண்டைப்புலவர்களுள் ஒருவரும் ஆகிய பரணர் என்னும் பெரும் புலவர் வரலாற்றை ஈண்டு ஆராய்வாம்:

தோற்றுவாய்.

பரணரைப்பற்றிய உண்மை வரலாறுகளை அறிவிக்கும் நூல் ஒன்றுமே இல்லை என்னலாம். ஆயினும், அவரைப் பற்றிக் கூறும் புராணங்களோ பல. அவையாவன: திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற்

பரணரைப்பற்றிக் கூறும் நூல்கள்

புராணம், கடம்பவன புராணம் என்பனவும், ஹாலாஸ்ய மாஹாத்ம்யமும் ஆகும். இவை, நம் பழம்புலவரின் வாழ்க்கை வாலாறுகளில் ஒன்றனையும் உண்மையாக அறிவிப்பன அல்ல என்பது ஆராய்ச்சியாளர் அறிந்ததே. ஆயினும், இந்நூல்கள் கூறுவனவற்றை அறிந்து ஆராய்தலும் வேண்டற்பால தொன்றாக லின், அவ்வரலாறுகளை ஈண்டு எழுதுகின்றேன். முதற்கண், திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறுவதை அறிவாம்:

**திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமும் பரணரும்.**

இப்புராணம், செல்விநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி என்பவரால் இயற்றப்பட்டது. இது, பழைய திருவிளையாடல் எனவும் வழங்கும். இப் புராணத்தில் பரணரைப்பற்றிக் கூறப்பட்டுள்ள பகுதிகள் வருமாறு:

---

## (15) சங்கப்பலகை கொடுத்த திருவிளையாடல்.

முன்னொரு காலத்தில், சங்கப்புலவர் சங்கமண்டபத்தில் தாங்கள் முறையின் இருத்தற்கு இயைந்து, [1]பெரிதாகிய ஆசன மொன்றனைப்பெற விரும்பினர். அதனால், கபிலர், நக்கீரர், பரணர் முதல்வராகப் புலவர் அனைவரும் சொக்கநாதர் கோயிலை யடைந்து, 'தேவதேவ, யாம் எல்லேமும் நெருக்கமின்றி இருக்கத்தக்க ஆசனமொன்றனை யருள்வீர்' என்று வேண்டினர். சொக்கர், சம கோணங்களுள்ளதும் (சதுரமானதும்), ஒருமுழமுள்ளதும், ஒருவர் இருக்கத் தகுந்ததும், பாக்களை யறியும் பேரறிவுடையதும் ஆகிய பலகையொன்றனை யளித்தார். அதனைப் பெற்ற புலவர், 'யாம், அனை வரும் இருந்து ஆராய்வதற்கு ஏற்ற நெடியதோ ராசனம்விரும்பினே மாக, ஒருவரே இருக்கத்தக்க இப் பலகையை யருளியது என்னே!' என்று தளர்ந்தனர். அப்பொழுது, 'இது நல்லிசைப் புலவரை யறிந்து, அத்தகையோர் அனைவருக்கும் இடந்தரும்' என்று வானில் ஒரு வாக்கு உண்டாக, புலவர் வியந்து திரும்பினர்.

புலவர், அப் பலகையைக் கொண்டுபோய்ச் சங்கமண்டபத் தின் நடுவில் இட்டனர். முதலில் நக்கீரர் அதில் அமர்ந்தார். பின், அஃது ஒருவர் இருக்கத்தக்க அளவு வளர, அதில் கபிலர் இருந்தார். பின்னரும் அது, முன்போல் வளரவே, உலகத்தோர் மதிக்கும்படி பரணர் அதில் அமர்ந்திருந்தார். மேலும், அது வளர வளரப் புலவர் அனைவரும் அதன்கண் அமர்ந்தனர்.

---

1. 'பனுவற் காரணமாகி விளங்குபே ராசனம்' (பாட்டு. 1) என்றிருப் பதனால், நூல்களை அறிவதிற் சிறப்புடைய பலகையா யிருக்கவேண்டும் என்பதும் அவர்கள் விருப்பமாகும்.

புலவர்கள், நாடோறும் தம்மறிவால் தெளிந்து கோத்த (செய்த) செய்யுட்களைச் சங்கமண்டபத்தில் வைத்து வைத்துச் செல்ல, அவை, காலநீட்சியால் அளவின்றிப் பல்கி ஒன்றேடொன்று கலந்து உயர்ந்தன. பின்னொருகாலத்தில், புலவர் அனைவரும் ஒருங்குகூடி ஆங்கு அடைந்தனர். அவர்கள், தாங்கள் இயற்றிய செய்யுட்களின் [1]தகுதியை யறிவதில் மாறுபட்டு வாதித்து, ஒருவரை யொருவர் வெல்லமுடியாமையின், 'நாம், இவற்றுள் விளக்கம் இல்லாதவற்றை நீக்கி, நல்லவற்றைக் கொள்வாம்' என்று அறுதி யிட்டனர்; அவ்வாறே நூல்களை ஆராயும்பொருட்டுச் சங்கமண்ட பத்தில் ஆதனம் ஏறி யமர்ந்தனர்.

புலவர்கள், அங்கே குலைவுற்றுக் கலைந்துகிடந்த செய்யுட்களை எடுத்து ஆராயும்பொழுது, அவை முறை மயங்கிக் கிடந்தவாற்றுல் மனமழிந்து, 'என் செய்தும்' என்று வாடினர். அப்பொழுது, சிவபெருமானுர் ஒரு புலவராகி, அவர்கள்முன் சென்று, 'எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய நூல்களில் வல்லவாகிய நீவிர், முகம்வாட்டத்தோடு இருத்தற்குக் காரணம் யாது? அதனைக் கூறின், யாம் போக்குவேம்' என்றுர். அவர்கள், 'புலவரே, நீர் இச் செய்யுட்கொத்துக்களை முறைப்படக் கோத்துத் தருவீ ரேல், நும்மை, நாற்பத்தொன்பதாமவராக எம்மொடு சேர்க்கக் கடவேம்' என்று வேண்ட, அவரும், இமைப்பளவில் அவற்றைக் கோத்துக் கொடுத்தார். அதனைக் கண்ட புலவர், 'இவர் சொக்கர் போலும்', என்று கருதிப் பழிச்சினர். புதுப்புலவர் அங்கே அவர்களுடனிருந்து தமிழாராய்வாராயினர்.

ஒரு நாள், புலவர்கள் பொருளிலக்கணத்தின் தகுதியை யறிய மாட்டாமல் மயங்குகையில், புதுப்புலவர், 'அன்பினைந்திணை' [2]என்று தொடங்கும் பொருள்நூலைச் செய்து அதிலுரைத்த இலக்கணத்திற் கேற்பச்செய்யுட்களைப் பிரித்தார். புலவர்கள், அப் பொருளிலக்கணத் திற்குப் பொருந்திய தத்தம் செய்யுட்களை நோக்கி, 'இவை இவை நல்லவை' என்று சொல்லுகையில், நக்கீரர் பொறுமையினல், 'என் நூலுள் ஐந்தாம் பாட்டுக்கு ஒப்பான பாடல் ஒன்றுமே இல்லை' என்றுர். அப்பொழுது புதுப்புலவர், 'பேரவைக்கண் இவ்வாறு ஒருவன் தன்னை வியப்பதோ!' என்று கூறி, சிறந்த பொருளமைந்த கவிதை யொன்றனைச் செய்து, 'இதன் பொருளைக் கூறுமின்'

---

1. 'சொல்லின் தகுதியால்' (பா. 7) என்றிருப்பதனல், சொற் களின் தகுதியினல் எனவும் கூறலாம்.

2. 'அன்பின் ஐந்திணை' என்பது, இறையனர் களவியலின் முதற் சூத்திரம். ஆகவே, இங்குக் குறித்தது களவியல் நூலையே.

எனலும், புலவர்கள், அக் கவிதையைக் கேட்டு, ஒன்றும் சொல்லு தற்கின்றி அன்புடனிருந்தார்கள். அவ்வளவில் நக்கீரர், 'இக் கவிதை தீயது' என்றார். புதுப்புலவர் சிரித்து, 'இவன் பொறாமை யுடையவன் என்பது எல்லாரும் அறிந்ததே. ஆதலின், இவனை யன்றி, நம்முள் யாவரேனும் ஒருவர் இதற்குக் குற்றம் கூறின், இது குற்ற முடையதே' எனப் புலவர்கள் ஒன்றுங் கூறாது வாளாவிருந் தார்கள். அப்பொழுது, 'புலவர்களே, நுங்கள் வழக்கைத் தீர்க் கும்பொருட்டு இறைவன் நுங்களைப்போல் புலவனாய் வந்துளான்; ஆதலின், நுங்கள் அறிவின்மையை விட்டு அவனை வணங்குமின்' என்று வானில் ஒரு வாக்கு எழுந்தது. புலவர்கள் அதனைக் கேட்டு வியந்து அஞ்சி, வணங்குவதன் முன்னரே, நக்கீரர் வணங்கித் தமது பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினர். வேண்டலும், **மதுரைப் பேராலவாயர்** என்று தமது பெயரைக்கூறி, அதுகாறும் அவையிலிருந்த அப்புலவர் அவ்வளவில் மறைந்தார். புலவரனைவரும் அவரைப் போற்றினர். அவர் செய்தருளிய பொருளதிகாரம், **'இறையனர் பொருள்'** என வழங்கலாயிற்று.

---

இனி, மற்றொரு திருவிளையாடற் கதையைக் கவனிப்பாம்:

## (19) ஊமை தமிழறிந்த திருவிளையாடல்.

ஆலவாய் இறைவன் சொல்லியருளிய பொருட்சூத்திரங்களுக்குச் சங்கப்புலவர்கள் உரை எழுதி, தத்தம் உரையே சிறந்தது என்று வாதித்தார்கள். பின்னர் அவர்கள், 'நம் உரைகளை எல்லாம் சொக்கநாதர் திருமுன் படிப்பாம்; அவர், "நல்லது" என்று சொல்லும் உரையைக் கொள்வாம்' என்று ஒரு முடிவு செய்தார்கள். அவ்வாறே புலவர்கள், சொக்கநாதர் கோயிலுட் சென்று தொழுது, தம் உரைகளை உரைக்க, பெருமானர் ஒரு புலவராய் எழுந்தருளி, அவர்களை நோக்கி, 'இவ்வூரில் நம் பக்தனாகிய உப்பூர் கிழார் என்பவனுக்கு மகனாய் ஊமையொருவன் உளன்; அவன், **சரவணகுகன்** ஆவன். அந்த ஞானி, உருத்திரசன்மன் என்னும் பெயருடையன். நும் உரைகளை அவன்பால் உரைமின். அவன், எதை ஒப்புக்கொள்கின்றானோ அதுவே சிறந்தது; இதற்குக் கவல வேண்டா' என்று உரைத்தருளினர். புலவர்கள், 'பிறந்தநாள் தொடங்கி ஊமையாயிருப்பவன் எங்கனம் பேசுவான்?' என, 'அச்செட்டி, எந்தச் செய்யுளைக் கேட்கையில் புளகமுற்றுக் கண்ணீர் உகுப்பானோ அதனையே செய்யுளாகக் கொண்மின்; மாறுபடவேண்டா. நீவிர் அனைவரும் உடன்பட்டு, அவனை

[1]நம்மிடத்திருத்திக் கேண்மின்' என்று அருளி மறைந்தார். புலவர் மாறுபாடு தவிர்ந்து, அம் மூங்கைப்பிள்ளையைச் சங்கமண்டபத்திற்கு அழைத்துப்போய்ச் சிங்காதனத்தி லேற்றித் தூபதீபம் காட்டித் தம் உரைகளைப் படித்தனர். அப்பொழுது, நக்கீரர், கபிலர், குற்றமற்ற பரணர் ஆகிய இம் மூவருரைகளைக் கேட்கையில், ஊமை, மிக்க விருப்பங்கொண்டு, புளகமும் கண்ணீரும் உடையவனுயிருக்கக் கண்டு, புலவர் வியந்து, அப் பொருள்களைச் சிறந்தனவாகக் கொண்டனர். அங்கே வீற்றிருந்த செட்டியாகிய கந்தன், தன் சாபம் நீங்கி, ஆறுமுகங்களும் பன்னிருகைகளுங்கொண்டு மயில் மீதேறிப் போகவே, புலவர் அக் கடவுளை வணங்கி வாழ்த்தினர். பின்னர் அவர்கள், சொக்கநாதரைப் பாடிக்கொண்டு நெடுங்காலம் வாழ்ந்திருந்தார்கள்.

---

இனி, பரஞ்சோதி முனிவர் செய்த திருவிளையாடற்புராணத்துட் கூறப்பட்டுள்ளவற்றைக் காண்பாம்:

## (51) சங்கப்பலகை தந்த படலம்.

**பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலும் பரணரும்.**

பாண்டிய நாட்டில் வங்கியசேகரன் என்பவன் அரசுசெலுத்தி வந்த காலத்தில், காசியில், முன் பிரமன் பத்து அசுவமேதயாகங்கள் செய்து, அவப்ருத ஸ்நானம் செய்தற்பொருட்டு, சரசுவதி, சாவித்திரி, காயத்திரி என்னும் மனைவியர் மூவரோடு கங்கைக்குச் சென்றான். செல்கையில், வான்வழிபேகும் வித்யாதரமகளொருத்தி பாடிய இசையைக்கேட்டு, நாமகள் அங்கே தங்கி நிற்க, பிரமன் கங்கைக்கரையைச் சார்ந்தான். நாமகள் வரவு தாழ்ப்பவே, நான்முகன் மற்ற இருவருடன் கூடி மூழ்கிக் கரைசேர்ந்தான். கலைமகள் அவனைக்குறுகி, 'நீர், யானில்லாத போழ்து முழுகியவாறு என்?' என வெகுண்டு கூறினள். நான்முகன், அவளை நோக்கி, 'குற்றம் நின்மேலதாகவும் நீ என்னை முனிவது என்!; நீ [2]மாக்களாக நாற்பத்தெட்டுப்பிறவி பிறந்து இத்தீங்கை யொழிப்பாய்' என்று சாபமிட்டான். கலைமகள் கணவனை வணங்கி, 'நும் துணைவியாகிய யான் மானிடப்பிறவியில் பிறப்பதோ!' என்று புலம்ப, பிரமன், 'நின் உடலாகிய முதலெழுத்துக்கள் ஐம்பத்தொன்றில், ஆகாரம் முதலாக ஹகாரம் ஈறுகவுள்ள நாற்பத்தெட் டெழுத்துக்களும் நாற்பத்தெட்டுப் புலவர்களாகி

---

1. 'நும்மிடத்திருத்திக் கேண்மின்' என்றிருப்பின் சிறக்கும்.

2. மாக்கள் என்பது, மனவுணர்வில்லாதவரைக் குறிக்கும். 'மாவும் மாக்களும் ஐயறி வினவே' (தொல். மரபு. 32.) என்பது காண்க.

உலகத்திற் பிறப்பனவாக; அகாரமுதல்வராகிய ஆலவாய்ப் பெருமானர், தாமும் ஒரு புலவருருத் தரித்துச் சங்கப்பலகையில் நாற்பத்தொன்பதாமவராய் அமர்ந்து, அவர்களுக்கு அறிவையுண்டாக்கிப் புலமை காத்தருள்வார்' என்று நாமகளுக்கு வரம் நல்கினன்.

அவ்வாறே நாற்பத்தெட்டு எழுத்துக்களும் வேறு வேறு மக்களாகப் பிறந்தன. அம்மக்கள், பல கலைகளும் தேர்ந்து, ஆரியமொழியும் ஏனைய பதினெட்டு மொழிகளும் ஆராய்ந்து, தமிழ்ப்புலமையில் தலைமை படைத்துச் சிவபெருமானைப் பாடிச் சிவபூசனை செய்து கொண்டிருந்தார்கள்; பின்னர் பல்வேறு இடங்களுக்கும் போய் ஆங்காங்கிருந்த புலவர்களை வென்று, பொருநைநாட்டிற்போய், அவணின்று மீண்டு, மதுரையைக் குறுகினர். அப்பொழுது ஆலவாயடிகள் ஒரு புலவருருக்கொடு போய், 'நீவிர் யாவிர்? எங்கிருந்து வருகின்றனிர்?' என, அவர்கள், 'யாம் புலவரேம்; பொருநை காட்டில் நின்று வருகின்றேம்' எனலும், 'ஆயின், நீவிர் ஆலவாயடிகளை வணங்கவேண்டும்' என்று கூற, அவர்கள், 'எமக்கு நீரே சோமசுந்தரர்' என்றார்கள். பின்னர், புலவர் வடிவாய் வந்த பெருமானர், அவர்களைக் கூட்டிக்கொண்டுபோய்ச் சுந்தரேசரைத் தொழுவித்து மறைந்தருளினர். அதைக்கண்ட புலவர் வியப்புற்று, வெவ்வேறு செய்யுட்களால் அவரைப் பரவித் துதித்து, பின்னர், பாண்டியனை அடைந்தனர்.

அரசன், புலவர்களின் கல்வி கேள்வி ஒழுக்கம் ஆகியவற்றையறிந்து, சுந்தரேசர் கோயிலில் வடமேற்கு மூலையில் சங்கமண்டபம் அமைத்து அதில் இருக்குமாறு அவர்களை இரந்து வேண்டிப் பல சிறப்புக்களும் செய்தான். இவ்வாறு அரசன் புதுப்புலவர்களுக்கு வரிசை நல்கியதைக் கண்ட பழம்புலவர், மனம் புழுங்கி அவருடன் வாது செய்து, அறிவிழந்து தோற்றுப் போயினர். வேறிடங்களில் வாழ்ந்த புலவரும் அவரேபோல் வாது செய்து தோற்றனர். அவர்களையெல்லாம் வென்ற சங்கப்புலவர்கள், அடிக்கடி வாதம் செய்யத் துயருற்றுக் கோயிலையடைந்து, சோமசுந்தரரை வணங்கி, 'எவரும் வந்து எம்மோடு வாதுசெய்கின்றனர். அவருடைய புலமையை அளந்தறிவதற்காகச் சங்கப்பலகையைத் தந்தருள்வீர்' என்று இறைஞ்சினர். அப்பொழுது சுந்தரர், புலவருருக்கொடு பலகையோடு தோன்றி, 'இப்பலகை இரண்டுசாண் சதுரமுள்ளது; மதியிற் சிறந்தது; மந்திரத்தில் வலியது; நும்போல்வார் எல்லாருக்கும், ஒவ்வொரு முழம் வளர்ந்து இருப்பிடம் தரும். ஆதலின் இதுவே அளவுகோலாயிருக்கும்' என்றுகூறி, அப்பலகையைப் புலவர்களுக் கீந்தார். புலவர்கள், அதனைப் பெற்றுக் கோயிலைச் சுற்றித் தம் அவையிற் புக்கு, பூ, புகை முதலியவற்றால் பலகையைப் பூசித்தார்கள்.

அவர்களுள் நக்கீரர் முதன்முதலில் அதில் ஏறினர். பின்னர், கபிலரோடு பரணர் ஏறினர். இவ்வாறே புலவரனைவரும் பலகையில் ஏறி அமர்ந்தனர். அவர்கள், தம்முள் எடுத்துக்கூறும் பொருள்களைக்கேட்ட கிளி பூவை ஆகியவைகளும் வாதுசெய்பவர் வந்தால் அவர்கள் வாதங்களை மறுப்பனவாயின.

புலவர்கள் நாற்பத்தெண்மரும் அப் பலகையிலமர்ந்து செய்யுட் செய்தனர். அவை சொல்லாலும் பொருளாலும் ஒப்புமையுடையனவாய்த் தலைமயங்கிக் கிடந்தவாற்றால், தாம் தாம் செய்த செய்யுட்கள் இவை இவை என அறியமுடியாமல் சங்கப்புலவர் மாறுபட்டனர். அப்பொழுது சுந்தரேசர் புலவருருக்கொடு அவர் முன் தோன்றி 'நும்மை மயக்கும் பாவைக் கொணர்க' என, புலவர்கள் அவற்றை அவர்முன் இட்டார்கள்; அவர், அவற்றைப் பிரித்து எடுத்துக் கொடுக்கவே, புலவர்கள் மகிழ்ந்து 'நீர் எம்முடன் ஒருவராய் இருக்கவேண்டும்' என்று வேண்டி, அவரை அப் பலகையில் அமர்வித்தார்கள். அவரும் புலவருள் நடுநாயகராய் விளங்கினர். புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் பின்னரும் செய்யுள் செய்துகொண்டிருந்தார்கள்.

---

## (55) சங்கத்தார் கலகந் தீர்த்த படலம்.

புலவர் நாற்பத்தெண்மரும் வேறு வேறு செய்யுட் செய்தனர். அவர்கள் தாந்தாம் செய்தனவே சிறந்தவை என்று மாறுபட்டதனால், சுந்தரேசரிடம் செல்லலானார்கள்; சென்று சுந்தரேசரைத் தொழுது, 'யாங்கள் பாடிய பாடல்களுள், "சிறந்தது இது, இழிந்தது இது" என்று எடுத்துக் காட்டி, எங்கள் ஐயத்தைப் போக்க வேண்டும்' என்று வணங்க, சுந்தரேசர், மூலலிங்கத்தினின்றும் காண்டற்கரிய புலவனாகித்தோன்றி, 'இவ்வூரில் தனபதி என்னும் வணிகனொருவன் உளன். அவன் மனைவி, குணசாலினி யென்பவள். அவர்கள் தவத்தால் ஒரு தேவன் அவதரித்துள்ளான். அவன் ஊமையன். அவனிடம் நுங்கள் செய்யுட்களை யெல்லாம் பாடுங்கள்; அவனறிவுக்கு இசைந்தவை சிறந்தவையாகும்' என்று அருளிச்செய்தார். இவ்வாறு, அருளக்கேட்ட புலவர், 'ஊமையாயிருப்பவன், எங்கள் பாடலுள் நல்லவும் தீயவும் ஆராய்ந்து உரைப்பது எங்ஙனம்?' என, 'அவன், தன் கருத்துக்கிசையச் சொல்லாழம், பொருளாழம் உடைய செய்யுட்களைக் கேட்பின், புளகங்கொண்டு முடிதுளக்கி மனம் மகிழ்வான்' என்று இறைவர் அருளிச்செய்து, ஆலயத்துட் புகுந்தார்.

பின்னர், புலவர் அனைவரும் அவ்வணிகமணியை அழைத்துக் கொண்டுபோய், அவையின்கண் இருத்தி, மலரால் அருச்சித்து,

அவன்முன்னர்த் தங்கள் செய்யுட்களைப் பாடினர். மூகன், சிலர் செய்யுட்களில் சொல்லாழத்தை யறிந்து மகிழ்ந்தான்; சிலர் செய்யுட்களில் பொருளாழத்திற்கு மகிழ்ந்தான்; சிலர் பாடல்களில் சொன்முறையை இகழ்ந்தான்; சிலர் செய்யுட்களில் பொருளை இகழ்ந்தான்; சிலர் செய்யுட்களில் சொல், பொருள் இரண்டிற்கும் இன்பங்கொண்டான். இவ்வாறு புலவர்களின் செய்யுட்களைத் தெளிந்த வணிகன் நக்கீரர், கபிலர், பரணர் ஆகிய இம்மூவர் செய்யுட்களை அறியுந்தோறும் அறியுந்தோறும் இன்பங்கொண்டு விளங்கினன்; தலையசைத்தான்; இன்பக்கண்ணீருள் மூழ்கினன்.

இவ்வாறு வணிக குமரன் சொல்லாழமும் பொருளாழமும் ஆராய்ந்து தெரிந்தபோது, புலவர் தம் பகைமை விடுத்து ஒருவரோடொருவர் நட்புக்கொள்ளலாயினர். நக்கீரர் முதலான மூவர் பாடல்களும் திலகம்போல் விளங்கின. பின்னர் புலவர், பனுவல்களை ஆராய்ந்துகொண்டு பொலிவுற்றிருந்தனர்.

---

இனி, **கடம்பவன புராணத்தில்** கூறப்பட்டுள்ள வாலாற்றை நோக்குவாம்:

**கடம்பவன புராணமும் பரணரும்.**

இது **வீமநாத பண்டிதர்** என்பவரால் செய்யபபட்டது. இதில், இலீலாசங்கிரக அத்தியாயத்துள், ஒவ்வொரு திருவிளையாடற்செய்தியும் ஒவ்வொரு கவியில் அமைத்துப்பாடப்பட்டுள்ளது. இத்திருவிளையாடல்களின் முறையும் வரலாறும் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தை ஒத்துக் காணப்படுகின்றன. ஆயினும், அவற்றுள் பரணரைக் குறித்துக் கூறப்பட்டிருப்பவற்றை ஈண்டுக் குறிக்கின்றேன்.

**15-ஆம் பாட்டு.**

சங்கப்புலவர் தங்களுக்கு ஒரு தவிசு வேண்டிச் சொக்கநாதர் கோயிலை யடைந்து விண்ணப்பம் செய்து, அவரருளிய பலகையைக்கொண்டு போய் மண்டபத்தில் அமைத்தனர். அவ் வாதனத்தில் முதலில் நக்கீரர், கபிலர், பரணர் ஆகியவர் ஏறியமர்ந்தனர். பின்னர் ஏனைய புலவர் அமர்ந்தனர். அவர்கள், அதிலமர்ந்திருந்து பாடிய செய்யுட்கள் கால நீட்சியினுல் தம்மில் மயங்கிக்கிடந்தன. பின்னொருகால், அவர்கள் அச்செய்யுட்களின்பொருட்டு மலைவுற்றிருக்கையில், சொக்கர் ஒரு புலவராய்ச்சென்று, அவற்றிற்குப் பொருந்த வுரை கூறி, அவர்களோடு கூடி நாற்பத்தொன்பதாமவராய் விளங்கினர்.

**19-ஆம் பாட்டு.**

ஒரு காலத்தில், சங்கப்புலவர் இறையனுர் செய்த பொருளிலக்கணச் சூத்திரங்களுக்கு உரை செய்து, அவற்றுட் சிறந்தவுரை யாது என்னும் திறத்தில் மாறுபட்டுச் சொக்கரிடம்போ யுரைப்ப, அவர், ‘உருத்திர சன்மன்

என்னும் வணிகச்சிறுவனுல் தெளிமின்' என்று அருள்செய்தார். அவ்வண்ணமே, அவனுல், நக்கீரர் முதலிய மூவர்செய்த வுரைகள் சிறந்தவை என்றறிந்து, புலவர் அமைதிகொண்டனர்.

ஈண்டுக் குறித்த புலவர் மூவருள் பரணரும் ஒருவர் என அறிக.

---

**பரணரும், ஹாலாஸ்ய மாஹாத்ம்யமும்:**

இனி, பரணரைக் குறித்து ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில் கூறப்பட்டுள்ளவற்றைச் சிறிது நோக்குவாம்:

இந்நூலில், 'சங்கத்தவர்களுக்குச் சங்கப்பலகை தந்தது' என்றுள்ள 57-ஆம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருப்பதாவது :

**அகஸ்தியர் கூற்று:**

முனிசிரேஷ்டர்களே, ஹாலாஸ்யநாயகன் சங்கத்தவர்க்குச் சங்கப்பலகையைத் தந்த திருவிளையாடலை உங்களுக்குச் சொல்லுகின்றேன்:

பிரமன் உலகமெல்லாம் படைத்துத் திருவிளையாடல் புரிகின்ருன். அவன், பெரிய யாகத்தைச் செய்யும்பொருட்டு, காயத்ரி, ஸாவித்ரி, சரசுவதி ஆகிய இவர்களுடன் வாராணவஸியை அடைந்தான் ; முதலில், சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, அவ்விலிங்கத்தின் முன்னர், ஒப்பில்லாததாகிய தஶாஸ்வமேதிக தீர்த்தம் ஒன்றனை உண்டாக்கினுன்; பின்னர், அந்தச் சங்கரரது சந்நிதியில் ஒன்பது அசுவமேதயாகங்களைச் செய்து, மூன்று சக்தி(தேவியர்)களோடும் அந்தத் தீர்த்தத்தில் [1]அவப்ருதஸ்நானம் செய்தான். பத்தாம் அச்வமேதயாகம் முடிந்த பின்பு, அவன், முனிவர்களோடும் கூடி அவப்ருதஸ்நானம்செய்ய முயல்கையில், கந்தருவ மாதர்களின் இன்னிசையைக் கேட்டு மோகித்திருந்த சரசுவதி, அவனேடு செல்லாமல், வழியில் நின்றுவிட்டாள். காயத்ரி, ஸாவித்ரி இவர்களோடு பிரமன், அவப்ருதஸ்நானம் செய்துமுடித்து, ஆனந்தகானனத்தில் (வாராணவஸியில்) இருந்தான். பின்னர், சரசுவதி அங்குச் சேர்ந்து, சக்திகளிருவரோடு கூடியிருந்த கணவனை நோக்கிக் கோபத்தோடு அதட்டிக்கூறினுள். அதைக்கேட்ட மலரவன் முனிவுகொண்டு சரசுவதியை நோக்கி, 'நீ அனுசிதமான கோபம் கொண்டதனுல், இவ்வுலகில் மனிதராக நாற்பத்தெட்டுப் பிறவி பிறப்பாய்; இதில் ஐயமில்லை' என்று சாபமிட்டுச் சினம் தணிந்தான். பின்பு, நாமகள் கணவனடிகளில் வணங்கி, 'அறியாமையினுல் யான் அதட்டிக் கூறியவற்றைப் பொறுத்துக் கடைக்கணித்தருள்க' என்று வேண்டினுள். மீண்டும்

1. அவப்ருதஸ்நானமாவது, யாகம் முற்றிய பின்னர் நீராடுதலாம்.

பன்முறை வேண்டி யிரக்க, கலைமகள்பால் அவன் அருள்கூர்ந்து, 'நின் உறுப்புக்களினின்று உண்டாகிய, [1]அகாரம் முதல் ஸகாரம் ஈறாகவுள்ள எழுத்துக்கள், புவியில் வேறு வேறு உருவினையுடைய புலவர்களாகப் பிறப்பனவாக; ஹகாரரூபியாகிய ஸதாசிவனார், அப் புலவர்களுக்கு நடுவே ஒரு புலவரா யிருப்பார்; நின் உறுப்புக்களில் தோன்றிய புலவர் அவரோடுகூடி நாற்பத்தொன்பதின்மராவர். அப்புலவர்கள், திராவிட கவீஸ்வரர்களாகி, பூமியில் உள்ள சிவ ஸ்தலங்களுக்குள் தலைமை வாய்ந்ததும், பிரமனுக்குப் (பிரமரந்திரத் துக்குப்) பன்னிரண்டாம் அந்தஸ்தில் உள்ளதும், பிரமன், விஷ்ணு முதலானவர்களால் வணங்கப்பட்டதும் ஆகிய ஹாலாஸ்யத்தில் ஒருங்குகூடி, அங்குள்ள திராவிடர்கள் வியக்குமாறு, தங்கள் கவி களால் சுந்தரேசுரரைத் துதித்து, அவரருளைப்பெற்று, எல்லா நலன் களையும் நுகர்ந்து, பலவகையான பிரபந்தங்களைச் செய்து, வேந்தன் மதிப்பையும் அடைந்து, முடிவில் முக்தராவார்களாக. நீ, முன் போலவே எங்களோடுகூடி, எல்லா இன்பங்களையும் துய்த்துக் கொண்டு, என் முகத்தில் (வாயில்) வாழ்ந்திரு' என்று சாப விமோ சனம் செய்து, மூன்று சக்திகளோடும் கூடி, சத்தியலோகத்தை அடைந்தான்.

சரசுவதியின் அமிசமான எழுத்துக்கள், பிரமன் சாபத்தின் படி, நாற்பத்தெட்டுப் புலவர்களாகப் பிறந்தன. கங்காப்ரவாஹம் போல் தெளிவாய்த் தடையின்றிச் செல்லும் சொல்வன்மையுள்ள [2]நக்கீரர், கபிலர், பரணர் முதலான அச்சங்கத்தார்கள், அரசர்களை வருணித்து, பொருளையும் வெற்றியையும் அடைந்து, எல்லாவிடங் களிலும் [3]சஞ்சரிக்கின்றார்கள். எல்லா மொழிகளிலும் வல்லவர்களா யும், சகல கலைகளையும் கரைகண்டவர்களாயும், [4]திராமிட பாஷை

---

1. அகாரம் முதல் ஸகாரம் ஈறாகவுள்ள எழுத்துக்களாவன :
உயிர்—16.
ஐந்து வருக்கங்கள்—25.
அந்தஸ்தம்—4.
ஊஷ்மாக்களில்—3. (ஹகாரம் ஒன்று நீங்க)

2. நந்கீரர் என்பது, நற்கீரர் என வழங்கிய சொல்லின் திரிபாகலாம் எனத் தோன்றுகின்றது.

3. முன்வரும் வாக்கியங்களில் உள்ள வினைமுற்றுக்கள் இறந்தகாலங் காட்டுவனவா யிருத்தலின், இதுவும் இறந்தகால வினைச்சொல்லாயிருக்க வேண்டும். 'ஸஞ்சரந்தி' (சுலோ. 28) என்பது நிகழ்காலவினையாதல் அறிக. வடமொழியில் இங்கனம் வருதல் உண்டு என்பது அறியப்படுகின்றது; இவ்வாறே முன்னும் வருதல் காண்க.

4. நூலில் உள்ளவாறே 'தீராமிடபாஷை' என எழுதப்பட்டது.

யில் மிகுந்த தேர்ச்சியுடையவர்களாயும் இருந்த அவர்களனைவரும் ஒருகாலத்தில் ஒருங்குகூடி, இந்திரனால் பூசனை செய்யப்பட்டவ ராகிய மீனாட்சிசுந்தரேசுரரைத் தரிசனம் செய்தற்காக மதுரையை அடைந்தனர். பார்த்த மாத்திரத்தில் முக்தியை நல்குவதும், பொற் குடத்தால் விளங்குவதும் ஆகிய விமானத்தைக் கண்டு, அவர்கள் வணங்கி நின்றனர். அப்பொழுது, சுந்தரேசர் புலவருருக்கொண்டு அவர்கள்முன் தோன்றினர். அவர், புலவர்களை நோக்கி, 'நீவிர் யாவிர்? எங்கிருந்து வருகின்றனிர்? நுமக்கு விருப்பமான பொருள்கள் யாவை? நீவிர் அறிந்துள்ள வித்தை யாது? எதன் பொருட்டு இங்கு வந்திருக்கின்றனிர்?' என்று வினவினர். சங்கத் தார்கள், பிரத்யக்ஷமான சிவ வடிவத்தையுடைய அவருக்கு, 'யாம் நாமகளின் உடலினின்று தோன்றிய எழுத்துக்களின் வடிவத்தேம்; மிக்க தூய்மையுடைய தாமிரவர்ணிநதிக்கரையி லிருந்து வந்திருக் கின்றேம்; எமக்கு, அறம் பொருள் இன்பம் வீடு ஆகியவற்றில் விருப்பமுளது; யாம், ஒரு நாழிகையில் நூறு கவி சொல்ல வல்லேம்; ஆலவாயடிகளை வணங்குதற்காக, ஈங்கு வந்திருக்கின்றேம்; நும்மைக் கண்டதும், ஆலவாய்ப்பெருமானைக் கண்டாற்போல் உவந்தேம்; இதற்குமுன் யாம் சுந்தரேசரைத் தரிசனம் செய்ததில்லை; யாம் விரும்பியது நுமது தரிசனத்தால் உண்டாகப் போகின்றது; எமக்கு நண்பரான நீர் எம்முள் ஒருவரே என்பதில் ஐயமில்லை; அதனால், யாம் சுந்தரேசரைச் சேவித்தற்கு நீர் உதவி புரியவேண்டும்' எனக் கூறி வேண்டினர். அவற்றைக் கேட்ட சுந்தரர், தம் கவிகளால் அவர்களை மகிழ்வித்து, மூலலிங்கதரிசனமும் செய்வித்து மறைந்தார்.

நக்கீரர் முதலான சங்கத்தார், சிவபிரானை மகிழ்வுடன் பாடித் துதித்து, தம் பாடல்களால் மாந்தரை மகிழ்வித்துக் கொண்டு மதுரையில் வாழ்ந்திருந்தனர்.

அக்காலத்தில், **கவிஸார்வபௌமன்** என்று பெயர்பெற்ற வமிசசேகர பாண்டியன் அரசு செலுத்திவந்தான். அவன், சங்கத்தார் இயற்றிய இன்சுவை நிரம்பிய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து, அவர்களுக்குப் பெரும்பொருள் அளித்து, அவர்கள் சிவதரிசனம் செய்தபின் தங்கியிருப்பதற்காகக் கோயிலின் நடுவே ஒரு சங்கமண்டபமும் அமைத்துக் கொடுத்தான். புலவர், அந்தச் சங்கமண்டபத்தில் அமர்ந்து, தம்முள் உரையாடிக்கொண்டிருக் கின்றனர்.

அந்நாட்களில் புன்புலவர் சிலர், சபையில், சங்கத்தார் கவிகளைப் பழித்து, தம் கவிகளைப் புகழ்ந்துகொண் டிருக்கின்றனர். அவர்கள் வரலாற்றை யறிந்த சங்கப்புலவர், தம்முடைய புலமையை

வெளிப்படுத்த விரும்பி, சோமவாரத்தில், சோமசுந்தரக்கடவுளைத் துதித்து, 'யாம், நாடோறும் நுமது திருவடியைத் தொழுதற்காகவே நும்பக்கத்திலிருக்கின்றேம். எம்முடைய புலமையை வெளிப்படுத்தத்தக்க, சிறந்த பலகையைப் பெற்றிலேம். யாம், இனிதின் இருத்தற்கு, அகலமான தெய்வப்பலகை யொன்று நல்கியருள்க' என்று வேண்டினர். சுந்தரேசர், அஞ்ஞானத்தை ஒழிப்பதும், மெய்ஞானத்தை அளிப்பதும், தூய்மையாயதும், மாத்ருகாமயமானதும் ஆகிய தமது வித்யாபீடத்தினின்று மற்றோர் ஆசனத்தை உண்டாக்கி, மூலலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, புலவருருவொடு கருப்பக்கிருகத்தின் வெளியிற் போந்து, 'இதில் நீவிர் இருமின்' என்று ஈந்தருளினார். அப் பீடமானது, அகாரமுதல் ஹகாரம்வரை யுள்ள மூலாக்ஷரங்களால் அலங்கரிக்கப்பட்டதும், சதுரவடிவினதும், வெண்ணிறமுடையதும், மிக்க ஒளியுள்ளதும், [1]அரத்நி அளவுள்ளதுமா யிருந்தது. புலவர்கள் இன்பக்கடலுள் மூழ்கினவர்களாய், அப் பீடத்தைக் கொண்டுபோனார்கள். அதனை முனிவரெல்லாரும் 'வித்யா பீடம்' என்றனர்; புலவரிற் சிலர், 'வியாக்யா பீடம்' என்றனர்; சிலர், 'ஞான பீடம்' என்றனர்; சிலர், 'ஸரஸ்வதீ பீடம்' என்றனர்; சிலர், 'மாத்ருகா பீடம்' என்றனர். இவ்வாறு ஏற்ற பெயர்களால் அதனை வழங்கினர். பின்னர், சங்கப்புலவர்களனைவரும் அதற்குச் 'சங்கபீடம்' என்று பெயரிட்டனர். அஃது, உலகத்தில் **சங்கப் பலகை** எனப் பெயர் பெற்றது.

நக்கீரர் முதலான புலவர், அந்தப் பலகையைச் சங்கமண்டபத்திற் கொண்டுபோய், வெண்மையான ஆடையை விரித்து, அதன் மேல் அப் பலகையை வைத்து, சந்தனம் முதலியவற்றால் பூசனை புரிந்தனர். பின்னர், முதலில் நக்கீரர் அதில் அமர்ந்தார். அவ்வொருமுழப் பலகை கடவுளாணையால் வளர, அதில் முற்றுணர் வினையுடைய கவீச்வரராகிய கபிலர் ஏறி யிருந்தார். பின்னும் பலகை முன்போல் வளரவே, **கவிச்ரேஷ்டராகிய பரணர்** அதில் ஏறி மிகவும் விளங்கினர். சிவபெருமானருளால் அப்பலகை மேலும் மேலும் வளர்ந்து, மற்றவருக்கும் இடங்கொடுத்தது.

இறைவனால் அருளப்பட்ட அந்தப் பலகையை அனைவரும் துதித்தனர். புலவர்கள் அதில் அமர்ந்து எப்பொழுதும் கலைகளைக் குறித்து உரையாடிக்கொண் டிருந்தார்கள். அவர்கள், தாங்கள்

---

1. அரத்நியாவது, முழங்கை முதல் சுண்டுவிரலின் நுனிவரை யுள்ள அளவு. 'அரத்நிஸ்து நிஷ்கநிஷ்டேந முஷ்டிநா' என்பது அமரம். இதற்கு, 'சிறுவிரல் மாத்திரம் நிமிர்த்து மற்றைய விரல்களெல்லாம் மடக்கிப் பிடித்த முஷ்டியோடுகூடிய கையினளவு' என்பது பொருள்.

நாடோறும் இயற்றிய நூல்களை அந்தச் சங்கமண்டபத்தின் நடுவே வைத்திருந்தார்கள். நாளடைவில், அந்நூல்களெல்லாம் ஒன்றோடொன்று கலந்துபோயின. அதனால், தத்தம் நூல்களை அறியலாகாமையின், ஒருகாலத்தில் அவர்களுக்குள் விவாதம் உண்டாயிற்று. ஒவ்வொருவரும், 'நின்னுடைய பிரபந்தத்தினும் என்னுடையது சிறந்தது; யான் வல்லேன்; நீ இழிவிற்கு உரியை' என்று செருக்குடன் வாதித்தனர். பின்னர், அவர்கள், 'நாம் நம்முடைய பிரபந்தங்களை ஆராய்ந்து, ஏற்றத்தாழ்வுகளை யறிந்து, நல்ல நூல்களைக் கைக்கொள்ளுதும்; அல்லனவற்றைத் தள்ளிவிடுதும்' என்று முடிவுசெய்தார்கள்.

அகந்தையாற் பீடிக்கப்பட்ட மனமும், மோஹமும் உள்ள சங்கப்புலவர் அனைவரும், சங்கமண்டபத்தின் நடுவிலிருந்து பிரபந்தங்கள் எல்லாவற்றையும் ஆராய்கையில், அவை மேலும் கீழும் பக்கங்களிலும் விழுந்து, விரவிக் கிடந்தமையின், வருத்தத்துடன் தலைதாழ்த்தி யிருந்தனர்.

அப்பொழுது, ஹகாரரூபியான ஆலவாயடிகள், ஒரு புலவருருக்கொண்டு, பொற்கலன் அணிந்து, வெள்ளைத்தலைப்பாகை சூடி, மேலாடை தரித்து, உடலில் குங்குமச்சாந்து பூசி, இளஞ் சூரியன் போன்ற ஒளியுடன் அவையின் நடுவில் தோன்றினர். அவர், புலவர்களை நோக்கி, 'நீவிர் வாடிய முகத்துடன் இருத்தற்கு நேர்ந்த துன்பம் யாது? எமக்குத் தெரிவித்தால் யாம் அதனைப் போக்குவேம்' என்றார். சங்கப்புலவர் அவரை நோக்கி, 'நண்பராகிய நீர், எமக்குத் தலைவருமாகின்றீர். யாம் செய்த நூல்களெல்லாம் விரவி, மேலுங் கீழுமாய்க் கிடக்கின்றன; இவற்றைத் தனித்தனியே எடுத்துச்சேர்த்து விரைவில் தரவேண்டும். யாம் நாற்பத்தெண்மர் இருக்கின்றோம்; நீர் எமக்குத் தலைவராவீர்' என்று கூறினர். புலவராகிய சுந்தரேசர், 'ஆகட்டும்' என்று கூறி, அவற்றைத் தனித்தனியே தெரிந்தெடுத்து, அவர்களிடம் கொடுத்தார். புலவர்கள் அவருடைய திறமையை வியந்து, 'நீர், எம்முடன் சங்கப்பலகையிலமர்ந்து, எங்கள் நூல்களை நோக்கியருளவேண்டும்' என்று வேண்டிக்கொள்ள, அவர், மாத்ருகாமயமான பலகையின் நடுவே யமர்ந்து, வான்மீன்களின் நடுவே விளங்கும் மதியம்போலவும், தேவதைகளுக்கு நடுவே விளங்கும் தக்ஷிணாமூர்த்திபோலவும் திகழ்ந்து, அவர்கள் அஞ்ஞானத்தைப் போக்கிப் பொலிவுற்றிருந்தார். புலவர்களனைவரும், 'இவர் கடவுளோ, அன்றி, மானிடர்தாமோ!' என்று அவரைக் குறித்து உள்ளத்தில் ஐயமுற்றனர்.

இறைவர், தாமும் அவருட னொருவரா யமர்ந்திருந்து, அந்நூல்களை யாராய்ந்து, அவற்றில் குற்றமும் குற்றமின்மையும் வெளிப்

படுத்திக்கொண்டிருந்தார்; 'அர்த்தாதிகாரம்' என்னும் பெயருடைய சாஸ்திரமொன்றனையும் தமது நுண்ணறிவாற் செய்தார்.

சங்கப்புலவர் ஒவ்வொருவரும் தத்தம் நூல்களைப்பார்த்து, பிறர்பால் பொறாமை கொண்டு, தமது நூல்களிலுள்ள சொற்பொருள்களின் குணங்களையும், பிறர் நூல்களிலுள்ள குற்றங்களையும் வருணிக்கலாயினர். அவர்களின் நடுவே, மிக்க பொறாமையுடைய நக்கீரர் எழுந்துநின்று, 'என் பிரபந்தத்தில் [1]ஐந்தாம் பாடலுக்குச் சமமான அழகுடைய பாடல், நுங்கள் நூல்களில் ஒன்றுமேயில்லை' என்றார். அதைக்கேட்ட இறைவர், க்ஷணநேரத்தில் பாடலைச்செய்து, 'இலக்கிய இலக்கணங்களோடு பொருந்தியுள்ள எனது கவித்துவத்துக்கு உன்பாடல் சமமாவதில்லை. சிறந்தபாடல் என்னுடையதோ, அன்றி, நின்னுடையதோ; அதைப் புலவர்கள் சொல்வார்களாக' என்று புன்சிரிப்புடன் உரையாடினார். இறைவரது இனிய பாடலைக் கேட்டு, அனைவரும் மனமகிழ்ந்து தலையசைத்தனர். ஆயினும், அவர்கள், ஆசுகவியின் திறமையால் இறுமாந்து பொறாமைக்கடலா யிருக்கும் நக்கீரருக்கு எதிரே, அச் செய்யுள் மிகச்சிறந்தது என்று சொல்லுதற்கு அஞ்சி வாளாவிருந்தார்கள். அப்பொழுது நக்கீரர், இறைவர் பாடலில் குற்றம் கூற, இறைவர், 'நீ பொறாமையுடையை என்பது உலகமெல்லாம் அறிந்ததே; ஆதலின், நின் சொற்கள் உண்மையானவை எனக் கொள்ளப்படமாட்டா; பிறர் எவரேனும் என் பாடலில் குற்றம் கூறுவராயின், உண்மையாகும்' என்றார். அவர் பாடலில் எவருமே குற்றம் கூறவில்லை.

அப்பொழுது நக்கீரரின் மயக்க வுணர்வைப் போக்குதற்கு, ஆகாயத்தில், 'உங்களுடைய விவாதத்தைப் போக்குதற்பொருட்டுச் சுந்தரேசரே புலவரொருவராய் உங்களுக்கு நடுவே விளங்கியிருக்கின்றார்; அவரைத் தொழுமின்' என்று அசரீரியாகக் கூறிய சிவ வாக்யத்தைக் கேட்டுப் புலவர்கள் அஞ்சித் தம்பொறாமையை விடுத்து, தம்முன் புலவராயிருந்த சிவபெருமானை வணங்கி வாழ்த்தினார்கள். இறைவர், கருணையோடு கடைக்கணித்து அருள்புரிந்தார். அதனால், புலவர்கள் எல்லா இன்பங்களையும் நுகர்ந்து நெடுங்காலம் வாழ்ந்தார்கள்.

இறைவன் திருவிளையாடல்களில் ஐம்பத்தொன்றும் திருவிளையாடல் என்னால் (அகஸ்தியரால்) சொல்லப்பட்டது; இது, பாவம் முதலியவற்றைப் போக்கி, இன்பமும் வீடும் தருவதாதலின், இதை யாவரும் கேட்கவேண்டும்; படிக்கவேண்டும்.

---

1. இஃது, இன்னபாட்டு என விளங்கவில்லை.

இனி, அறுபத்தொன்றும் அத்யாயத்திற் கூறப்பட்டுள்ள மற்றொரு திருவிளையாடற் கதையை நோக்குவாம் :

## 61-ஆம் அத்யாயம்.

அகஸ்தியர் கூற்று.

சூத்திரவிருத்தி செய்து, தாம் தாமே வெற்றியடைய விரும்பிய சங்கப்புலவர்களின் கலகத்தைச் சிவபெருமான் தீர்த்தருளிய திருவிளையாடலை உங்களுக்குச் சொல்லுகின்றேன்:

வியாக்யானஞ் செய்வதில் வல்லவர்களாகிய சங்கத்தவர்களனைவரும் தனித்தனியே தெளிவான சூத்திரவிருத்தியைச் செய்தனர். அவர்கள் ஒவ்வொருவரும், 'என்னுடைய நூல் அழகானது'; 'என்னுடைய நூல் சிறந்தது' என்று விவாதம் தொடங்கினர்; பின்னர், 'சுந்தரேசரை வணங்கி, அவரிடத்தில் பிரபந்தங்களைக் காட்டி, அவர், "சிறந்தது" என்று சொல்வதைக் கைக்கொள்வோம்' என்று முடிவு செய்தனர். அவ்வாறே நக்கீரர் முதலான புலவர் அனைவரும் சுந்தரேசர் சந்நிதியில், புத்தகங்களை வைத்து, 'திராமிட சூத்திரத்திற்கு யாம் ஒவ்வொருவரும் தனித்தனியே விருத்தி செய்தேம்; அவற்றால் எமக்குள் விவாதம் உண்டாயிருக்கின்றது; அவற்றின் ஏற்றத் தாழ்வை அறிய வல்லீர் நீரே ; ஆதலின், அவற்றின் உண்மையைத் தெரிவிக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டனர்.

அப்பொழுது, சுந்தரேசர் சுயம்புலிங்கத்தினின்று வெளிப்பட்டு, உடம்பில் உருத்திராக்கமாலை பூண்டு, நெற்றியில் திருநீறு சாத்தி, தலைப்பாகை தரித்து, வெள்ளையங்கி யணிந்து, ஒரு புலவராய்த் தோன்றி, 'இவ்வூரில் சிவபக்தனாகிய வணிகனொருவன் தன் மனையாளுடன் புதல்வனை வேண்டித் தவஞ்செய்தான் ; அவனுக்கு ஊமைப் பிள்ளை பிறந்திருக்கின்றது ; அது, ஸ்கந்தனுடைய அம்சமாகும்; சாபத்தினால் அங்கனம் தோன்றியிருக்கின்றது ; அவனிடம் போய்க் கேண்மின் ; சிறந்த பிரபந்தமா யிருப்பதை அவன் ஒப்புக்கொள்வான். இதில் ஐயமில்லை' என்று திருவாய்மலர்ந்தருளினர். சங்கப் புலவர்கள், 'ஊமை எங்ஙனம் பேசுவான்?' என்று வினவ, உக்கிர (பாண்டிய)னுக்குத் தந்தையான சுந்தரேசர் நகைமுகத்துடன் அவர்களை நோக்கி, 'நுங்கள் நூல்களுள் எவர் செய்ததைக் கேட்கையில், அவ் வணிகன் கண்ணீரரும்ப உடல் புளகங் கொள்வானோ அதைச் சிறந்தது என்று ஏற்று, நுங்கள் பகையை ஒழியுங்கள்' என்று உரைத்து, அவர்களை யனுப்பி மறைந்தார்.

சங்கப்புலவர்கள் அனைவரும் சென்று, அவ் வூமைப்பிள்ளையை மண்டபத்துக்குக் கொண்டுபோய், ஆசனத்தமர்த்தி, அலங்காரம்

செய்து, பட்டுச்சாத்தி, மலர்தூவி, அவன்முன் தங்கள் பிரபந்தங் களைப் படித்தனர். அவற்றைக்கேட்டு வாளாவிருந்த ஊமை, நக்கீரர், கபிலர், பரணர் இவர்களுடைய பிரபந்தங்களைக் கேட்கை யில், ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, மெய்ப்புளகங்கொண்டு, இன்பக்கடலில் மூழ்கிக் கற்பக விருக்ஷம்போல் இருந்தது. ஊமை யின் கருத்தை யறிந்தும், சிவபெருமானருளியதை நினைந்தும் சங்கப் புலவர்கள் தங்கள் பகையை விடுத்து, அந்தப் பிரபந்தங்களை ஏற்று எடுத்து, அவற்றைத் திராமிடர்களின் மகிழ்ச்சியின்பொருட்டு வெளிப்படுத்தினர்.

---

இதுகாறும் புராணங்களில் பரணரைப்பற்றி வெளிப்படை யாகக் கூறப்பட்டுள்ள கதைகளைக் குறித்தேன்; புராணங்களில், பொதுவாகப் 'புலவர்கள்' (சங்கப்புலவர்கள்) என்று கூறப்பட் டிருக்கும் கதைகளை ஈண்டு எழுதுதல் பொருந்தாதென்று கருதி அவற்றை விடுத்தேன்.

---

## புராணக்கதைகளின் வளர்ச்சி

பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய புராணம், பழைய திரு விளையாடல் என வழங்குகின்றது. அதனுட் சங்கப்புலவர்களின் பழைய வரலாறு ஒன்றும் கூறப்படவில்லை. ஹாலாஸ்ய மாஹாத்மியத் தில், அப் புலவர்கள், கலைமகளின் கூறுகிய எழுத்துக்கள் என்றும், அவ்வெழுத்துக்கள், சாபத்தால் பிறந்தன என்றும் கூறப்பட்டுள்ள செய்தி, பிற்காலத்தில் புகுத்தப்பட்டதாகும்.

சங்கப்புலவர்களோடு புலவர்பிறர் வாதம் செய்தனர் எனவும், அதனால் சலிப்படைந்த புலவர்கள் சோமசுந்தரக் கடவுளிடம் பலகை யருளுமாறு வேண்டினர்கள் எனவும் ஹாலாஸ்ய மாஹாத்மியத்திற் காணும் செய்தியும் பழைய திருவிளையாடற் புராணத்துட் காணப்படவில்லை. ஆதலின், இதுவும் பின்னால் நுழைக்கப்பட்டதேயாகும்.

இவ்வாறு கதைகள் வளர்ந்து பெருகியன வொழிய, மாறு பட்டனவும் உள்ளன. அவற்றை இனிக் காண்பாம்.

---

பரஞ்ஜோதியார் பற்றிய புராணக்கதைகளின் ஆராய்ச்சி :

இனி, இப்புராணங்களிற் காணப்படும் மாறுபாடுகளுட் சிறந்தவற்றை இங்கே எழுதுகின்றேன் : கடம்பவன புராணம், திருவாலவாயுடையார் திருவிளையாடலைப் பின்பற்றிச் செல்வதாகலின், அத்திருவிளையாடற் செய்தியை ஆராயுந்துணையானே, இப்புராணத்தின் (கடம்பவன புராணத்தின்) செய்தியும் ஆராயப்பட்டதாகும். ஆதலின், கடம்பவன புராணத்திலுள்ள மாறுபாடுகள் வேறு எடுத்து எழுதுதல்வேண்டா.

I. பிரமன், யாகம் செய்தது, சரசுவதிக்குச் சாபமிட்டது, சரசுவதியின் கூறுகிய எழுத்துக்கள் புலவராகப் பிறந்தது, அவர்கள் வெவ்வேறிடங்களிலிருந்து மதுரைக்குச் சென்றது ஆகிய இவை பழைய திருவிளையாடற்புராணத்தில் கூறப்படவில்லை ; ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்திலும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடலிலும் கூறப்பட்டுள்ளன ; ஆயினும், இவற்றுள்ளும் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன ; அவையாவன :

1. பிரமன் காசியில் லிங்கப்ரதிஷ்டை செய்தது.

2. ஒரு தீர்த்தத்தை உண்டாக்கியது.

இவ்விரண்டும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடலில் கூறப்படவில்லை.

3 (*a*) கந்தர்வ மாதர்கள் பாடிய இசையைக் கேட்டுச் சரசுவதி வழியில் தங்கியிருந்தாள் என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் கூறவும் ; (*b*) அவள், விஞ்சை மாது ஒருத்தி பாடிய இசையைக் கேட்டு ஆண்டுத் தங்கியிருந்தாள் என்று பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் கூறுகின்றது.

4 (*a*) முதலெழுத்துக்கள் [1] ஐம்பத்தொன்று என்னும் வரையறை, பரஞ்சோதியார் திருவிளையாடலில் காணப்படுகின்றது ; (*b*) ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில் இவ்வரையறை காணப்படவில்லை.

---

1-2. ஹாலாஸ்யமாஹாத்ம்யம். அத். 57: சு. 4.

3. (*a*) 'ததா ஸாஸ்வதீதேவீ கானம் கந்தர்வ யோஷிதாம், ஶ்ருண்வதீ மோஹிதா'. ஹாலாஸ்யம். அத். 57: சு. 7.

(*b*) 'நாவின் செல்வி, வானவா றியங்கும் விஞ்சை மாதரா ளொருத்தி பாடும், கானவா றுள்ளம் போக்கி நின்றனள்'. பரஞ்சோதிதிருவிளை. 51: 4.

4. (*a*) 'முதலெழுத் தைம்பத் தோன்றில்'. பரஞ்சோதிதிருவிளை. 51: 8.

1. வடமொழியில் சிறந்த இலக்கணமாகிய பாணினீயத்தில் எழுத்துக்களின் தொகை கூறப்படவில்லை. அதிலுள்ள மாஹேஶ்வர ஸூத்திரங்களால் உயிர் 13, மெய் 33 ஆக 46 எழுத்துக்கள் பெறப்படும். அவற்றோடு, அநுஸ்வாரம், விஸர்க்கம், ஜிஹ்வாமூலீயம், உபத்மாநீயம் ஆகிய நான்கு எழுத்துக்

5 (*a*) அகாரம் முதல் ஸகாரம் ஈருகவுள்ள எழுத்துக்கள் நாற்பத் தெட்டும் புலவர்களாகப் பிறப்பனவாகுக; ஹகாரரூபியான பகவான் ஹாலாஸ்ய நாதர், தாமும் ஒரு புலவராய் அவர்களுடன் கூடியிருப் பார் என்று பிரமன் கூறினன் என்பது ஹாலாஸ்ய மாஹாத்ம்யத் தின் கூற்று. (*b*) ஆகாரம் முதல் ஹகாரம் ஈருகவுள்ள நாற்பத் தெட்டு எழுத்துக்களும் புலவராகப் பிறப்பனவாகுக; அகர முதல்வ ராகிய இறைவர் ஒரு புலவராய் வருவார் என்று நான்முகன் கூறினன் என்பது பரஞ்சோதி முனிவர் கூற்று.

---

களைக்கூட்டின் 50 ஆகும். வரருசி வசனமாகிய, 'த்விதாக ஏசோதுஸ்வாரோ விஸர்க்க: ஷோடஶஸ்வரா:| ஸ்பர்ஶா அந்தஸ்த ஊஷ்மாணஶ் சதுஸ் த்ரிம்ஶத்தலஸ்ம்ருதா: ||' என்னும் சுலோகத்தினுலும் 50 எழுத்துக்களே பெறப்படுகின்றன. (தெலுங்கு அப்ப கவீயம். 2: 48.) தெலுங்கு மொழியில் இருக்கிற ஆந்த்ரஶப்தசிந்தாமணியிலும் 'ஆத்யாயா: பஞ்சாஶத் வர்ணா:' என்று 50 எழுத்துக்களே கூறப்பட்டிருக்கின்றன. ஷட்பாஷா சந்த்ரிகா என்னும் ப்ராக்ருத பாஷை இலக்கண வுரையில், 'ஸித்திஸ் ஸம்ஸ்க்ருத ஶப்தாநாம் பவேத் பஞ்சாஶதக்ஷரை:' என 50 எழுத்துக்களே சொல்லப் பட்டுள்ளன. பாணினியஶிக்ஷையில், 'த்ரிஷஷ்டிஶ்ச சதுஷ்ஷஷ்டி: வர்ணா: சம்புமதே மதா:' என்றிருப்பதனுல், சிவபெருமான் மதத்தின்படி எழுத்துக்கள் 63, அல்லது 64 ஆகும். நன்னூலாசிரியர் கூறியவாறு 53 எழுத்துக்கள் ஆகின்றன. இவற்ருல், 51 என்னும் வரையறை இன்மை யறிக.

எழுத்துக்கள் 51 என்பவர்,
உயிர் எழுத்துக்கள்—16
க, ச, ட, த, ப, வருக்கங்கள்—25
இடையினம்—4
ஊஷ்மாக்கள்—4
ஜிஹ்வாமூலீயம், அல்லது ள—1
உபத்மாநீயம், அல்லது க்ஷ—1
எனக்கொள்வர்போலும்.

உயிரெழுத்துக்களுள், 'அலு' (஌) நீக்கி, அதற்கு ஈடாக ளகர மெய்யைக் கூட்டுதலும் ஆம்.

(*b*) 'த்வதங்க ஸம்பவா வர்ணா:' என்பது மட்டுமே யுளது. ஹாலாஸ்யம். 57: சு. 16.

5. (*a*) 'ஆதி ஸாந்தாஶ்ச வாங்மயா:' ஹாலாஸ்யம். 57: சு. 16.
'ஹகாரரூபீ பகவான் ஸர்வவ்யாபீ ஸதாஶிவ:'
ஹாலாஸ்யம். 57: சு. 17.

(*b*) 'திகழ்தரும் ஆகா ராதி ஹாகார மீருச் செப்பிப்
புகழ்தரு நாற்பத் தெட்டும்'. பரஞ்சோதிதிருவிளை. 51: 8.

'உய்த்திடும் அகாரத் திற்கு முதன்மையா யொழுகு நாதர்'. பரஞ்சோதி திருவிளை. 51: 9.

6 (*a*) மதுரையைப்பற்றி ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில் கூறப்பட்டிருப்பவையெல்லாம் பரஞ்சோதி முனிவர் இங்குக் கூறவில்லை. (அவற்றுட் சில, தலவிசேடப்படலத்துக் கூறப்பட்டுள்ளன.)

7. புலவர், திராமிடர்கள் வியக்குமாறு பலபாடல்களால் சுந்தரேசரைத் துதித்து, வேந்தரையும் வருணித்து, அவ்வேந்தரின் நன்மதிப்பைப் பெறுவர் என்று பிரமன் கூறினன் என ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்திற் காணும் செய்தி, பரஞ்சோதி முனிவர் புராணத்தில் காணவில்லை.

8. (பிரமனருளியவாறே) புலவர் அரசர்களை வருணித்துச் சஞ்சரித்தனர் என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில் காணும் செய்தியும் பரஞ்சோதியார் புராணத்தில் இல்லை.

9. சொக்கநாதர் புலவருருக்கொண்டு, புலவர் நாற்பத்தெண்மரோடு உரையாடியபோது, அப்புலவர் அவரை நோக்கி, 'யாம், கலைமகளின் உறுப்புக்களாகிய எழுத்துக்களேம்; ஒரு நாழிகையில் நூறுகவிகள் செய்யவல்லேம்' என்றனர் என்பது, ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில் காணப்படுகின்றது; இதுவும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடலிற் காணப்படவில்லை.

10. வமிசசேகர பாண்டியனைக் கவிசார்வபௌமன் என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் கூறுகின்றது; இச்செய்தி பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலிற் கூறப்படவில்லை.

11. (*a*) பாண்டியன், சங்கத்தார்களுக்குக் கோயிலின் நடுவே மண்டபம் அமைத்துக் கொடுத்தான் என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் கூறுகின்றது; (*b*) அவன், கோயிலின் வடமேற்கு மூலையில் மண்டபம் அமைத்துக் கொடுத்தான் என்று பரஞ்சோதியார் கூறுகின்றார்.

---

6. (*a*) ஹாலாஸ்யம். அத். 57. சுலோகம் 19-20; முன்னர் 31 முதல் 34 வரை.

'செழியன் செங்கோல், நலந்தரு மதுரை நோக்கி நண்ணுவார்' என்னும் இத்துணையே பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலில் (51: 13.) காண்கின்றது.

7. ஹாலாஸ்யம். 57: சு. 21-22.

8. ஹாலாஸ்யம். 57: சு. 28.

9. ஹாலாஸ்யம். 57: சு. 40, 41.

10. ஹாலாஸ்யம். 57: சு. 51.

11. (*a*) ஹாலாஸ்யம். 57: சு. 52-53.

(*b*) 'கோயில் வடதட புலத்தின் மாடோர், சங்க மண்டபம் உண்டாக்கி'. பரஞ்சோதிதிருவிளை. 51: 20.

II. (a) புலவர், தாம் முறைமையின் இருத்தற்குத் தக்க தொரு பெரிய ஆசனத்தை விரும்பிச் சொக்கநாதரிடம் வேண்டினர் என்று பழைய திருவிளையாடல் கூறுகின்றது.

(b) புன்புலவர் வாது செய்ததனல், சங்கப்புலவர்கள் சோம வாரத்தில் சோமசுந்தரரிடம் போய்ப் பீடம் வேண்டினர் என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் கூறுகின்றது.

(c) பழைய புலவர் சங்கப்புலவரோடு வாதித்துத் தோற்றனர்; பின்னும் வெவ்வேறிடங்களிலிருந்து புலவர் வந்து வாதித்தனர்; அதனல் புலமையை அளந்தறியத்தக்க பலகை ஒன்றனைச் சங்கப் புலவர் வேண்டினர் என்று, பரஞ்சோதிமுனிவர் விரிவாகக் கூறி யுள்ளார்; சோமவாரத்தில் வேண்டிக்கொண்டனர் எனக் கூறவில்லை. சோமசுந்தரர் தமது பீடத்தினின்று பிறிதொன்றனை உண்டாக்கிக் கொடுத்தார் என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் கூறும் விவரமும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலில் இல்லை.

III. சங்கப்புலவர்கள் வாதம் செய்கையில் எடுத்துக்காட்டும் நியாயம் முதலியவற்றைக் கற்று, கிளி, பூவை ஆகியவையும், புலவர் களை வாதத்தில் வெல்வன வாயின என்று பரஞ்சோதிமுனிவர் கூறும் பிரபாவம் வேறொன்றிலும் இல்லை.

IV. சங்கப்பலகையைக் குறித்து ஹாலாஸ்ய மாஹாத்ம்யத் திற் கூறப்பட்டுள்ள சிறப்புக்கள், வேறு புராணங்களில் காணப்பட வில்லை.

V. சங்கப்புலவர், தாம் செய்த செய்யுட்களைப் பிரிக்க முடியாமல் கவன்றபோது, சொக்கநாதர் புலவருருக்கொண்டு அவர்கள்முன் போய், 'எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி[1] என்னும் ஐந்திலும் வல்லீராகிய நீவிர் வருந்துவது எதுபற்றி ?' என்று அவர்களைச் சிறப்பித்துக் கூறினர் எனப் பழைய திருவிளை யாடலிற் கூறப்பட்டிருக்கின்றது. இவ் விசேடணம் மற்றவற்றில் இல்லை.

---

II. (a) பழைய திருவிளை. 15: 1-2.
(b) ஹாலாஸ்யம். 57: சு. 54-62.
(c) பரஞ்சோதிதிருவிளை. 51: 21-23.
III. பரஞ்சோதிதிருவிளை. 51: 29.
IV. ஹாலாஸ்யம். 57: சு. 63-66.
V. பழைய திருவிளை. 15: 9.

1 சங்கப்புலவர் காலத்தில், அலங்கார சாஸ்திரங்கள் தமிழில் இல்லை. அதனல், இந்நூலாசிரியர் இங்கனம் கூறியது அமைவுடையதாகாது.

VI சங்கப்புலவர், 'நம் நூல்களுள் விளக்கமானவற்றைக் கைக்கொண்டு, மற்றவற்றை நீக்கி விடுதும்' என்று அறுதியிட்டுக் கொண்டு, மறுபடி ஆராயப் புகுந்தனர் என்று (1) பழைய திருவிளையாடலும் (2) ஹாலாஸ்ய மாஹாத்ம்யமும் கூறுகின்றன; பரஞ்சோதியார் புராணம் இதனைக் கூறாது செல்கின்றது.

VII. சங்கப்புலவரின் இயல்பைக்குறித்து ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில் இழிவாகக் கூறப்பட்டிருப்பவை, மற்றைப் புராணங்களிற் கூறப்படவில்லை.

VIII. சங்கப்புலவர் பொருளிலக்கணத்தின் தகவினை யறியாமல் மயங்குகையில், அவர்களுடன் புலவராயிருந்த சிவபெருமான், 'அன்பினைந்திணை' என்று தொடங்கும் பொருளிலக்கணம் செய்து, அதற்கேற்பச் செய்யுளைப் பிரித்தார் என்று [1]பழைய திருவிளையாடற்புராணம் பகர்கின்றது. இதனைப் பரஞ்சோதி முனிவர் கூறவே யில்லை. [2]ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் அர்த்தாதிகாரம் செய்தார் என்று கூறினும், செய்ததற்குக் காரணம் கூறவில்லை. இறைவன் பொருளிலக்கணம் செய்து கொடுத்ததும், அதன்பின் புலவர்களுள் நிகழ்ந்ததும், பரஞ்சோதி முனிவர் கூறவில்லை; மற்றைய நூல்களில் கூறப்பட்டுள்ளன. அவையாவன:

1. புதுப்புலவர் (சொக்கர்) செய்து தந்த பொருளிலக்கணத்தின்படி சங்கப்புலவர், தத்தம் நூல்களை ஆராய்ந்து, 'இவை இவை நல்லவை' எனச் சொல்கையில், நக்கீரர், 'என் பிரபந்தத்தில் 5-ஆம் பாட்டிற்கு ஒப்பானது ஒன்றும் இல்லை' என்றார்.

2. அப்பொழுது, புலவராயிருந்த சொக்கர் ஒரு பாட்டுப் பாடி, 'இந்தப் பாட்டிற்கு உன் பாட்டு ஒப்பாகாது' என்றார்.

3. நக்கீரர் அதில் குற்றங் கூறினர்.

---

VI. (1) பழைய திருவிளை. 15: 7.
(2) ஹாலாஸ்யம். 57: சு. 82-83.

VII. ஹாலாஸ்யம். 57: சு. 84.

VIII. 1. பழைய திருவிளை. 15: 12.
2. ஹாலாஸ்யம். 57: 105.

1. பழைய திருவிளை. 15: 13.
ஹாலாஸ்யம். 57: சு. 107-108.

2. ஹாலாஸ்யம். 57 சு. 108-110.
பழைய திருவிளை. 15: 14. 'இதன்பொருள்கண் டுரைமின்' என்றார் என்பதுவே இதிற்காண்பது.

3. பழைய திருவிளை. 15: 15.
ஹாலாஸ்யம். 57: சு. 114.

4. சொக்கர், 'நீ யன்றி மற்றையோர் குற்றங்கூறின் ஒப்புவேன்' என்றார்.

5. மற்றைப்புலவர்கள் வாளாவிருக்கையில், அசரீரி கூறிற்று.

இவையெல்லாம் ஹாலாஸ்யமாஹாத்ம்யத்திலும், பழைய திருவிளையாடலிலும் கூறப்பட்டுள்ளன. ஆயினும், சங்கப்புலவருடனிருந்து ஆராய்ந்த புலவர் பெயர் (a) மதுரைப்பேராலவாயர் என்றும், அவர் செய்த பொருளிலக்கணம் (b) 'இறையனுர் பொருள்' என விளங்கிற்று என்றும் பழைய திருவிளையாடல் கூறுஞ் செய்தி, ஹாலாஸ்யமாஹாத்ம்யத்தில் இல்லை.

இனி, சங்கத்தார் கலகம் தீர்த்த திருவிளையாடற் செய்தியிற் காணப்படும் மாறுபாடுகளை ஆராய்கின்றேன் :

I. சொக்கநாதர் செய்த பொருளிலக்கணத்துக்குச் சங்கப் புலவர் உரை செய்து, அவற்றுட் சிறந்தது யாது என அறிவதில் மாறுபட்டனர் என்று (a) பழைய திருவிளையாடல் கூறுகின்றது. (b) ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில், 'இறைவன் செய்த பொருளிலக்கணத்துக்கு' என்பது மட்டும் கூறப்படவில்லை; சூத்திரவிருத்தி செய்தனர் எனக் கூறப்பட்டுளது. ஆயின், (c) பரஞ்சோதி முனிவரோ, புலவர், வேறு வேறு செய்யுட்கள் செய்து மாறுபட்டனர் என்கின்றாரே யன்றி, இலக்கண நூலுக்கு உரைசெய்து மாறுபட்டனர் என்று கூறவில்லை.

II. சங்கப்புலவர் வேண்டுதலும், சொக்கநாதர் புலவர் வடிவொடு வந்து அருளிச்செய்கையில், 'உப்பூர்கிழார் என்னும் வணிகனுக்கு ஊமைப்பிள்ளை ஒருவன் உளன்; அவன் சரவண குகனே ; அவன் பெயர் உருத்திரசன்மன்' என்றார் என்பது (a) பழைய திருவிளையாடலிற் காணப்படும் செய்தி. (b) ஹாலாஸ்யமாஹாத்ம்யத்தில், வணிகன் பெயரும் ஊமையின் பெய

---

4. ஹாலாஸ்யம். 57: சு. 115-116.
பழைய திருவிளை. 15: 16.

5. பழைய திருவிளை. 15: 17-18.
ஹாலாஸ்யம். 57: சு. 117-118.
(a), (b) பழைய திருவிளை. 15: 19.

I. (a) பழைய திருவிளை. 19: 1.
(b) ஹாலாஸ்யம். 61: சு. 2-3.
(c) பரஞ்சோதி திருவிளை. 55: 2.

II. (a) பழைய திருவிளை. 19: 4-5.
(b) ஹாலாஸ்யம். 61: சு. 17-18.

'அஸ்மின் புரேஸ்தி ஸுஶ்லாக்யோ வைஶ்ய: கஶ்சிச் சிவப்ரிய:

ரும் கூறப்படவில்லை. அது, வணிகனைத் தனாட்யன் என்று கூறு கின்றது. இதற்குப் 'பொருளாளி' என்பது பொருளாகும். ஆனால், பரஞ்சோதி முனிவரோ, அவ்வணிகன் பெயர் (c) தனபதி எனக் கூறியுள்ளார்.

III. (a) பரஞ்சோதி முனிவர், ஒரு தேவன் ஊமைப்பிள்ளை யாக அவதரித்துள்ளான் என்று கூறுகின்றாரே யன்றி (b) பழைய திருவிளையாடலிலும் (c) ஹாலாஸ்யமாஹாத்ம்யத்திலும் கூறியுள்ள வாறு, அவ்வூமை கந்தனமிசம் என்று கூறவில்லை.

IV. ஊமைப்பிள்ளை, சிலர் செய்யுளில் சொல்லையும், சிலர் செய்யுளில் பொருளையும், சிலர் செய்யுளில் ஓரோவழி சொல் பொருள் இரண்டனையும் அறிந்து மகிழ்ந்தான் என்று பரஞ்சோதி முனிவர் கூறுகின்றாரே யன்றிப் பிறர் எவரும் கூறவில்லை.

V. ஊமையாயிருந்த செட்டி, தன் சாபம் நீங்கி ஆறுமுகமும் பன்னிருகையும் உடையவனாய் மயில்மீதேறிச் சென்றான் என்று பழைய திருவிளையாடலிற் காணும் செய்தி, ஹாலாஸ்ய மாஹாத்ம் யத்திலும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலிலும் காணப்பட வில்லை.

### இப் புராணக் கதைகளுட் காணும் மாறுபாடுகளைப்பற்றிய கருத்து.

1. தன்னுடன் நீராட வாராத சரசுவதிக்குச் சாபமிட்ட பிர மன், அவள் உடலுறுப்புக்களாகிய எழுத்துக்கள் புலவராகப் பிறக்கு மாறு பணித்தான். அவ்வெழுத்துக்களின் தொகை வடமொழிக்கு ஒக்குமே யன்றித் தமிழ்மொழிக்கு ஒவ்வாது. அங்கனமாக, வட மொழி எழுத்துக்களை வடமொழிப்புலவராகும் வண்ணம் சாப மிடாமல் தமிழ்ப்புலவராகும்படி சாபமிட்டதன் காரணம் யாதோ!

2. கலைமகளின் கூறாகிய எழுத்துக்கள் சங்கப்புலவராகப் பிறந்தன என்பது பழைய திருவிளையாடலில் கூறப்படாமையின்,

---

தனாட்யோ தானஶீலஶ்ச ஶிவபக்திரதஸ்ஸதா ॥
ப்ரஹ்மண்யஶ்சாதிதர்மிஷ்டஸ் ஸத்யவாதீ வணிக்வா:
தஸ்யாநுரூபஸத்வ்ருத்தஸம்பன்ன குணஶாலினீ ॥'

என்பனகாண்க.

(c) பரஞ்சோதி திருவிளை. 55: 5.

தனபதி என்னும் பெயர், அவ்வணிகனது இயற்பெயர் என்று கருத இடம் தரும்.

III. (a) பரஞ்சோதி திருவிளை. 55: 5.
(b) பழைய திருவிளை. 19: 4.
(c) ஹாலாஸ்யம். 61: சு. 21.

IV. பரஞ்சோதி திருவிளை. 55: 10.

V. பழைய திருவிளை. 19: 10.

ஹாலாஸ்யமாஹாத்ம்யத்தின் ஆசிரியரே இக்கதையைப் புனைந்திருக்கவேண்டும் எனத் தோன்றுகின்றது.

3. சிவபெருமான் ஹகாரமுதல்வன் என்று ஹாலாஸ்யமாஹாத்ம்யம் கூறுகின்றது. ஹரன் என்பது, ஒரு பெயராகலின் அதன் முதலெழுத்தாகிய ஹகாரத்தைச் சிவபெருமானுக்குக் குறித்தார்போலும். இறைவன் அகாரவாச்யன் என்னும் கொள்கை பற்றிப் பரஞ்சோதி முனிவர் அதனை மாற்றியிருக்கவேண்டும்.

4. சங்கமண்டபத்தைக்குறித்தும் சங்கப்பலகையைக்குறித்தும் பழைய தமிழ் நூல்களில் ஓரிடத்தும் காணப்படாத செய்திகள் இப்புராணங்களுட் காணப்படுதலின், இவை எல்லாம் பிற்காலத்துத் தோன்றிய கதைகளாதல் துணியலாகும். சொக்கநாதர், தம்பீடத்தினின்று பிறிதொரு பீடத்தை உண்டாக்கிப் புலவருக்குக் கொடுத்தார் என்று ஹாலாஸ்யமாஹாத்ம்யம் கூறியதைப் பரஞ்சோதி முனிவர் கூறவில்லை. இறைவனது பீடத்தினின்று உண்டாக்கியது என்று சங்கப்பலகையைச் சொல்வது தகாது எனக் கருதிக் கூறாது விடுத்தனர்போலும்!

5. பொருளிலக்கணத்தின் திறனறியாது மயங்கிய புலவர்களுக்காகச் சொக்கநாதர் பொருளிலக்கணம் செய்தார் என்று பழைய திருவிளையாடல் கூறுவதைப் பரஞ்சோதி முனிவர் கூறாது விடுத்தது, இறையனாகப்பொருளில், அதனை அரசன் பொருட்டுச் செய்தருளினர் என்னும் கதையை உளங்கொண்டு போலும்!

6. நக்கீரர், 'என் நூலுள் 5-ஆம் பாடல்போலச் சிறந்தது ஒன்றில்லை' என்றதையும், புலவராகிய சொக்கநாதர்பாட்டில் அவர் குற்றங்கூறியதையும் பரஞ்சோதி முனிவர் கூறவில்லை. நக்கீரர் சுட்டிய நூலும் பாட்டும் இவை என அறியப்படாமையாலும், சொக்கர், தமது பாட்டில் நக்கீரர் குற்றம் கூறியபோது ஒன்றும் கூறாமையாலும், அவர் அவற்றைக் கூற விருப்பமில்லாமல் விடுத்தனர் போலும்!

7. சங்கப்புலவர் நாற்பத்தெண்மருடன் கூடியிருந்த புலவர் பெயர் மதுரைப்பேராலவாயர் என்பதை, ஹாலாஸ்யமாஹாத்ம்யமும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடலும் கூறவில்லை. அவர், (மதுரைப்பேராலவாயர்) மக்களைப் புகழ்ந்து பாடியிருத்தலின், அவரைச் சொக்கநாதர் என்று கூற விருப்பமில்லாமல், அதனை விட்டிருக்கலாம் போலும்!

8. ஊமைப்பிள்ளை, உப்பூர்கிழார் மகன் என்றும், அவன் உருத்திரசன்மன் என்னும் பெயருடையன் என்றும், சங்கப்புலவரின் உரைகளைக் கேட்குமளவும் ஊமையாகவே யிருந்தான் என்றும்,

உரைகள் கேட்டலும், கந்தனுகி மயில்வாகனத்திற் சென்ருன் என்றும் பழைய திருவிளையாடல் கூறுகின்றது. இதனுல், அவ்வூமன் இளமையிற் கற்றறிந்தவன் என்ருவது, அரசவையி லிருந்தவன் என்ருவது தெரியவில்லை. ஆனுல், அகநானூற்றை, உக்கிரப் பெருவழுதியின் வேண்டுகோளுக் கிணங்கித் தொகுத்தவர், [1]'உப்பூரி கிழார் மகனுவான் உருத்திரசருமன்' என எழுதப்பட்டுளது. பழைய திருவிளையாடலின்படி, புலவர் செய்த உரைகளைக் கேட்குமளவும் உருத்திரசன்மரை எவரும் அறியார்; பின்னர், அவர் புலவரின் அவையிலிருந்தபடியே மேலே சென்ருர். ஆயின், அவர், (உருத்திரசருமர்) உக்கிரப்பெருவழுதியின் ஆதரவைப் பெற்றதும், அவன் வேண்டுகோட்படியே அகநானூற்றைத் தொகுத்ததும் எங்கனம்! அகநானூற்றைத் தொகுத்தவர், வேருேர் உப்பூர்கிழார் மகன் உருத்திரசன்மன் என்பரோ, இறையனு ரகப்பொருள் உரைக் கதையை இப்புராணமுடையார் இங்கனம் மாற்றிக் கூறினரோ, தெரியவில்லை.

9. ஊமைப்பிள்ளையைச் சுப்பிரமணியரினமிசம் என்ருவது, அவர், சாபத்தால் அங்கனம் பிறந்தார் என்ருவது பரஞ்சோதி முனிவர் கூறவில்லை; இறைவராகிய சுப்பிரமணியர் சாபத்தாற் பிறந்தார் என்று கூற அவர்க்கு மனம் துணியாமையின், ஒரு தேவன் என மாற்றினராதல் வேண்டும்.

மேற் குறித்துள்ளவாறு, புராணங்கள் பல திறங்களில் மாறுபாடாகக் கூறுகின்றனவாயினும், அவை-நக்கீரர், கபிலர், பரணர் என்னும் முறைவைப்பில்மட்டும் ஒரே தன்மையாகக் கூறுகின்றன. அவற்றுள், ஹாலாஸ்யமாஹாத்ம்யம் நம் புலவரைக் கவிஸ்ரேஷ்டர் என்று புகழ்ந்து கூறுகின்றது. மேற்கூறிய புராணங்களினுல் பரணர் வரலாற்றின் உண்மைகள் அறியப் பட்டிலவாயினும், அவர், சங்கப் புலவர்களுட் சிறந்தவர்களில் ஒருவர் என்பது மட்டும் தெளிவாக விளங்கும்.




1. அகநானூற்றின் இறுதியில், 'வழக்கத்தாற் பாட்டாராய்ந்து தொகுத்தான், மதுரை யுப்பூரிகிழான் மகனுவான் உருத்திரசருமன்; தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி' என்று இருப்பதை யறிக.

II

## பரணர் வரலாறு

நம் நாட்டுப் புலவர்களைப்பற்றிய உண்மைவரலாறுகள் சரியாக எழுதப்பட்டில என்பது யாவரும் அறிந்ததே. பண்டைப் புலவர் களைப்பற்றி அறிதற்கு, அவர்கள் பாடலிற்காணும் சில வரலாற்றுப்பகுதிகள் மட்டுமே துணையாகின்றன. புலவர் சிலரைக் குறித்து, அவர் காலத்துப் புலவர் சிலர் கூறியிருப்பதும் உதவியாகும். இவையேயன்றி, வேறு சரித்திரமோ, சாசனமோ ஏதும் கிடைக்கவில்லை. ஆதலின், இங்கு, பரணர் வரலாற்றை அவர் பாட்டுக்கள் முதலியவற்றைத் துணைகொண்டு ஆராய்கின்றேன் :

**குலம்.** பரணருடைய தாய் தந்தையர்களின் பெயர்கள் இன்னவெனத் தெரியவில்லை. இவரது குலம், தொழில், இளமைப்பருவம், இவர் கல்வி கற்றது, முதலியவை சிறிதும் அறிய இடமில்லை. ஆயினும், இவர், தம் பாட்டுக்களில்,

'சீறியாழ் செவ்வழி பண்ணி யாழ நின்
காரெதிர் கானம் பாடினே மாக' (புறம். 144)

எனவும்,

'களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி' (புறம். 145)

எனவும்,

'அரிக்குரற் றடாரி உருப்ப ஒற்றிப்
பாடி வந்திசிற் பெரும' (புறம். 369)

எனவும் பாடி யிருத்தலின், இவரைப் பாண்குடியினர் என்று கொள்ளலாம்; இயற்பெயரா னன்றிக் குடிப்பெயரானே வழங்கப் பட்ட புலவரும் உளர்; அதற்கு, 'சேக்கிழார்' என்னும் பெயரே போதிய சான்றாகும். அதுபோல, பாணர்குலத்தினரான இவர், கல்வியும் மேன்மையும் உடையவராய்த் திகழ்ந்து விளங்கின ராதலின், இவரை இயற்பெயராற் கூறாது, குலப்பெயராற் சிறப் பித்து வழங்கியிருத்தல் கூடும்; அதனால், இவர் பாணர் எனவே வழங்கப்பெற்று விளங்கினர் எனக் கோடல் பொருந்தும். பாணர் என்னும் சொல்லை, ஏடுகளில் பரணர் எனக் கருதி மயங்கியிருத் தலும் நிகழக்கூடியதே. ஆதலின், இப் புலவர், பாண்குடியிற் பிறந்தவராவர் என ஒரு சாரார் கூறுவர். ஆயின், அது பொருந்துவதாகக் காணவில்லை. என்னை ?

பண்டைக்காலத்தில், தமிழ் நாட்டின் தலைவர்கள், யாழில் இசைப் பாட்டுக்களை விரும்பிக் கேட்டு, அப் பாட்டுக்கள் பாடும் பாணர்களுக்கு மிக்க பரிசில் அளித்துவந்தனராகலின், அப் பாணர் செயல்களைத் தமக்கும் ஏறிட்டுக்கொண்டு புலவர் சிலர், தாம் யாழ் பாடிச் சென்றவர் போலவும், தடாரிப்பறை ஒற்றி நின்றவர் போலவும், தம்மோடு விறலியும் தொடர்ந்து போந்தனள் போலவும் பாடுவாராயினர். இவற்றின் உண்மையைப் புலவர்கள் பாடியுள்ள பாட்டுக்கள் பலவற்றுள்ளுங் காணலாம். [1] அந்தணர் என்று பேராசிரியரால் குறிக்கப்பட்ட உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், தமது பாட்டில்,

'தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்
வளைக்கை விறலி யென் பின்ன ளாகப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்பப்
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்
ஒல்கல் உள்ளமொ டொருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பின் நின் நல்லிசை உள்ளி
வந்தனென்' (புறம். 135)

என்று பாடியிருப்பதொன்றே சாலும்.

அரிசில் கிழார்,

'சீறியாழ் செவ்வழி பண்ணி நின் வன்புல
நன்னாடு பாட என்னை நயந்து'
(புறம். 146)

எனக் கூறியிருத்தலும் அறிக. 'கிழார் என்பது, வேளாளர்க்குரிய பட்டப்பெயர்' என அறியப்படுதலின், இவர் வேளாளரே யாவர்.

மதுரை நக்கீரர்,

'அரிக்குரற் றடாரி யொ
டாங்கு நின்ற வெற்கண்டு' (புறம். 395)

எனப் பாடியிருத்தலும் காண்க. நக்கீரர் பாண்குடியினர் எனக் கூறுவார் எவரும் இலரன்றே !

இவற்றால், புலவர் இங்கனம் பாடுதல் வழக்காறு என்றும், அவ்வாறே நம் பாணரும் பாடியுள்ளார் என்றும் கொள்ளுதலே நேர்.

---

1 'ஊரும் பெயரும்' (தொல். மரபி. 74) என்னும் சூத்திரவுரையில், 'உறையூர் ஏணிச்சேரி முடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், கடியலூர் உருத்திரங்கண்ணன் என்பன அந்தணர்க்குரியன' என்று எழுதியிருத்தல் காண்க. இவரை (முடமோசியாரை) அந்தணர் என்று பேராசிரியர் குறித்திருப்பதற்கு ஆதாரம் இஃது எனத் தெரியவில்லை.

ஆயினும், பாணர் என்னும் பெயரே பரணர் என மருவியது எனல் பொருந்தாதோ எனின், அவர், பாண்குடியினர் அல்லாத போது, பாணர் என்னும் பெயர், அவர்க்கு எவ்வாறு வந்தது? அன்றியும், அவ்வையார்,

‘ பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறி
நின், அரணடு திகிரி யேந்திய தோளே ’ (புறம். 99)

என்று எதுகைத் தொடையில் அமைத்துப் பாடியிருத்தலின், பரணர் என்பதுவே இவர் பெயர் என்று கொள்ளுதல் பொருந்துமே யன்றி, பாணர் என்பதுதான் இவர் பெயர் எனக் கோடல் பொருந்தாது. பரணர் காலத்திலிருந்த [1]அவ்வையாரே, அவர் பெயரைத் தெள்ளத் தெளிந்துகொள்ளாராய்ப் பாடினர் எனக் கூறுதல் ஒருவாற்றானும் பொருந்தாதன்றே!

இதுகாறும் கூறியவாற்றால், பரணர் குலம், பாண்குலம் அன்று என்பதும், அவர் பெயர் பரணர் என்றலேயாம் என்பதும் விளங்கும். ஒருகால், அவர் பாண்குடியினராகவே இருப்பினும், அவர் பெயர் பாணர் என்பது அன்று எனல் துணிபு. நிற்க.

**சமயம்.** பரணர் இன்ன சமயத்தைச் சார்ந்தவர் எனக் கூறுதற்கு அவர் பாட்டுக்களில் ஆதாரம் ஏதும் இல்லை. ‘ நான்மறை முதுநூல் முக்கட் செல்வன் ’ (அகம். 181) என அவர் பாட்டில் வந்திருப்பது கொண்டு, அவர் சைவசமயத்தவர் எனக் கூறிவிடுதல் அமையாது. ஆயின், ‘ பொய்யடிமை இல்லாத புலவர்’ (39:7) எனச் சுந்தரமூர்த்தி நாயனாரும்,

‘ தரணியிற் பொய்ம்மை இலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர் நக் கீரர் முதல்நாற்பத் தொன்பது பல்புலவோர்
அருணமக் கீயும் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே.
(நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி: 49)

என நம்பியாண்டார்நம்பியும், அதனைப் பின்பற்றி,

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப்
புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த வோதிச்
செய்யுளிடை வளராசு மதுரம் நல்ல
சித்திரம்வித் தாரமெனத் தெரிக்குஞ் செம்மை
மெய்யுடைய தொடைகளெல்லா மன்று ளாடல்
மேவியகோ னிருதாளில் விரவச் சாத்திக்

---

1. அவ்வையார், பரணர்காலத்திற்குப் பிற்பட்டவர் என்பாரும் உளர்.

கையுடையஞ் சலியினரா யருளான் மேலைக்
கருதரிய அமருலகம் கைக்கொண் டாரே.
(திருத்தொண்டர்புராணசாரம். 54)

என்று உமாபதிசிவாசாரியரும் கூறியிருப்பதனுல், பரணர் சைவ சமயத்தவராவர் எனின், அது பொருந்துவதன்று. என்னெனின், சுந்தரமூர்த்தி நாயனுர், 'பொய்யடிமை இல்லாத புலவர்' என்றது சங்கப்புலவரைக் குறித்தல் அமையாது. சங்கப்புலவர்கள் சிவபெருமானுக்குத் தொண்டு புரிந்த அடியவர்கள் என்னும் செய்தி, சங்க நூல்களில் யாண்டுங் காணப்படவில்லை; அவர்கள் வெவ்வேறிடங்களில் வாழ்ந்து, ஆங்காங்கு விளங்கிய வள்ளல்கள் அரசர்கள் முதலானவர்களைச் சார்ந்து, அவர்களைப் பாடிப் பரிசில் பெற்று உய்ந்த வரலாறுகளே காணப்படுகின்றன. சங்கப்புலவர் சுமார் ஐந்நூற்றுவருள் யாவராயினும் சிவபெருமான்மீது பாடல் பாடியிராரோ!

பதினெண்ருந்திருமுறையில், பரணர், கபிலர் பாடிய நூல்கள் உள்ளனவே எனின், அவை, அவர்கள் பாடியன அல்ல என்பதை [1]முன்னர் விளக்கி எழுதியுள்ளேன்; ஆண்டுக் கண்டு கொள்க. மேற்கூறியவாற்ருல், பொய்யடிமையில்லாத புலவர் என்பது, சங்கப் புலவரைக் குறியாது எனல் போதரும்.[2] 'பொய்யடிமையில்லாத புலவர்' என்பது சங்கப்புலவரைக் குறிப்பதாகச் சேக்கிழார் கூருமையும் ஈண்டு அறியத்தக்கது. அன்றியும், அவர்,

'பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையராம் பெரும்புலவர்'
(பெரியபுராணம். பொய்யடிமை—2)

என்று கூறியுள்ளார். ஈண்டுக் குறித்துள்ள இயல்பு, சங்கப்புலவர்களுக்கு அமைவுறுதல் யாங்கனம்?

இங்கனமாகவும், நம்பியாண்டார் நம்பி, 'நாற்பத்தொன்பது பல்புலவோர் ஆலவாயரன் சேவடிக்குக் கவி பல பாடும் புலவர்கள்' என்றது, அமைவுறுவது எங்கனம்? 'அரன் சேவடிக்கே, பொருளமைத் தின்பக்கவி பல பாடும் புலவர்' என்றதனுல், எட்டுத் தொகை நூல்களுள் அகப்பொருள் குறித்த பாட்டுக்கள் எல்லாம், சிவபெருமானே தலைவனுக உட்பொருள் அமைத்துப் பாடப்

---

1. பாணர்பாடலைப் பற்றியது- இந்நூலில் நான்காம் அத்யாயத்துக் காணப்படும்.

2. பொய்யடிமை இல்லாத புலவர் என்றது சங்கப்புலவரைக் குறியாது என, 'மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்' என்னும் நூலிலும் (பக்கம் 643—650) கூறப்பட்டுள்ளது.

பட்டவை என ஊகிக்கலாகாதோ எனின், அப்பாட்டுக்களுள், அரசர்கள் வள்ளல்கள் முதலாயினோருடைய செய்திகளே கூறப் பட்டிருத்தலானும், சிவபெருமான் பாட்டுடைத் தலைவனாகக் கூறப்படாமையானும், பிறவாற்றானும் அதுவும் அமையாது என்க. ஆகவே, பரணர், பொதுவாகக் கடவுளொருவர் உண்டென்று நம்பினவராவரே யன்றிச் சைவசமயத்தவர் எனல் நேர்மை யாகாது. அக்காலத்தில் சைவ வைணவ சமயங்கள், நம்நாட்டில் பிற்காலத்துப்போலப் பரவி வேரூன்றியிருந்தன அல்ல என்பதும் உளங்கொளத்தகும்.

**வாழ்க்கை நிலை**

பரணர், பிறந்த ஊரும், வாழ்ந்த நாடும் இவை என அறிய இடமில்லை. ஆயின், இவர், தமிழ்நாட்டின் பல் வேறு இடங்களிலும் சென்று வாழ்ந் திருந்தவர் என்பது இவர் பாட்டுக்களால் புலனாகின்றது. இவர்,

'மழை பெயல் மாறிய கழைதிரங் கத்தம்
ஒன்றிரண் டலபல கழிந்து திண்டேர்
வசையில் நெடுந்தகை காண்கு வந்திசினே'

(பதிற். 41)

'யாமும் சேறுகம் நீயிரும் வம்மின்
....................................
குட்டுவற் கண்டனெம் வரற்கே'

(பதிற். 49)

என்று, கடல் பிறக்கோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பாடியிருத் தலின், அவ்வரசனது ஆட்சிக்கு உட்பட்ட நாட்டினர் அல்லர் எனக் கருதலாகும்.

பரணர், சேரவேந்தரையும், சோழமன்னரையும், வள்ளல்கள் பலரையும் சார்ந்து அவர்களைப் பாடியிருத்தலின், தமிழ் நாட் டின் பல இடங்களிலும் வாழ்ந்தவர் என்பது வலியுறும். ஆயினும், இவர், முதன்முதலில் யாவரைச் சார்ந்திருந்தனர்? பின்னர் யாவ ரைச் சார்ந்தனர்? என்னும் செய்தி அறிய இயலுவதில்லை. இவர், கடல்பிறக்கோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பாடி, அவன் மகனைப் பரிசிலாகப் பெற்றார் என்னும் செய்தி அறியப்படுகின்றது. குட்டுவன், தன்மகனைப் பரிசிலாகக் கொடுத்தான் என்றதை, அப் புலவருக்குத் தொண்டு செய்து கல்விகற்குமாறு விடுத்தான் எனக் கொள்ளலாம்.[1] இவ்வாறு கொண்டால், பரணர், குட்டுவன் நகரிற் சிலகாலம் தங்கி யிருந்திருப்பார் என்னலாம்.

---

1. 'மகனைப் பரிசளித்தான் என்பது, பரணரிடம் கற்று வல்லனாம்படி அவனைக் குருகுலவாசம் செய்ய நியமித்ததைக் குறிப்பதுபோலவே தோற்று கின்றது'. (சேரன் செங்குட்டுவன். பக்கம் 24-25)

பரணர், வையாவிக்கோப் பெரும் பேகனைப் பாடிய பாட்டில், ஓர் இரவலனை ஆற்றுப்படுத்துவாராய்,

‘பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரெ ணொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே இனியே
இன்னே மாயினே மன்னே’ (புறம். 141)

என்று கூறியிருத்தலின், இவர் மிக்க வறுமை யுடையவரா யிருந்தனர் எனவும், அப் பேகனைச் சார்ந்து பெருஞ் செல்வம் படைத்தனர் எனவும் அறியப்படும்.

பேகன், தன் காதலியைத் துறந்து பொதுமகளொருத்தியோ டுறைந்திருந்த காலத்தில், அவள்பொருட்டு அவன்பாற்[1] சென்று [2]பரணர் பாடிய பாட்டில்,

‘பசித்தும் வாரேம் பாரமும் இலமே’

என்று பாடியிருத்தலின், இப் புலவர்பெருமான், தம்மால் புரக்கப் படுங் கிளைஞரை யுடையராயிருந்தவர் அல்லர் என்பது அறியப் படும். ‘பாரமும் இலமே’ என்பதற்கு, ‘எம்மாற் பரிக்கப்படும் சுற்றமும் உடையேமல்லேம்’ என்று உரையாசிரியர் எழுதி யிருத்தலும் நோக்கத்தக்கது. இதனால், இவர், தாம் பொருளைப் பரிசிலாகப் பெற்றுச் சுற்றத்தாரைப் புரக்க வேண்டாதவாறு செல்வம் படைத்திருந்தார் என்றாவது, குடும்ப பாரமே இல்லாத வராய் வாழ்ந்திருந்தார் என்றாவது கருதலாம்.

**பன்னாடுசேறல்.**

பண்டைப் புலவர், இயற்கைப்பொருள்களின் தன்மைகளை உற்று நோக்கி அறிந்து, அவற்றைத் தெளிவாக அமைத்துச் செய்யுள் செய்பவர். அவருட் பலர், நாட்டின் பல பிரிவுகளுக்குஞ் சென்று, ஆங்காங்கே யுள்ள மலைகள், யாறுகள், காடுகள் முதலியவற்றை நேரிற் கண்டறிதலோடு, அந்நாடுகளில் வாழும் மன்னர்கள், வள்ளல்கள், தலைவர்கள் ஆகி யோர்களின் பண்பு, போர்த்திறன், வலிமை, அறிவு முதலான பலவற்றையும் நன்கறிந்து பாடும் இயல்புடையராய் விளங்கினர். அத்தகையரான புலவர்களுள் பரணர் தலைசிறந்தவர் ஆவர்.

---

1. இஃது இரண்டாமுறை சென்றதுபோலும்.
2. வன்பரணர் பாடியது எனப் பாடாந்தரமுளது.

பண்டைத்தமிழகத்தில், இவர் செல்லாத நாடும், இவர் காணுத சிறப்புப்பொருள்களும் இல்லை என்னலாம். பிற நாடுகளில் பெரும் புலவராய் விளங்கியவரும், இயற்கைப்பொருள்களை உற்று நோக்கும் இயல்பையும், பன்னாடு சேறல் (தேசசஞ்சாரம் செய்தல்) ஆகிய வழக்கத்தையும் மேற்கொண்டிருந்தனர் என்பது அறியப் படுகின்றது.

பரணர், தமிழகத்தின் பலவிடங்களிலும் திரிந்து வந்தவர் என்பது, பல்வேறு நாடுகளில் வாழ்ந்த மன்னர்கள் வள்ளல்கள் முதலானவர்களைச் சார்ந்து அவர்களைப் பாடியிருத்தலினாலும், பல்வேறு மலைகள், ஊர்கள் முதலானவற்றை விளக்கமாகக் கூறியிருத்தலினாலும் நன்கு விளங்கும். மலைகள், ஊர்கள் முதலானவற்றைக் கூறும்பொழுது, அவற்றின் சிறப்பு, அங்குள்ள காட்சி முதலானவற்றையும் அமைத்துப் பாடியிருத்தலின், அவ்வவ் விடங்களுக்குச் சென்று, அவ்வப் பொருள்களை நேரே கண்டு அறிந்தவர் எனக் கொள்ளுதலே தகுதி. இக்காலத்திற்போல உலகநூல்களும் (பூமி சாஸ்திரங்களும்), பிறவும் பாணர் காலத்தில் இருந்திலவன்றே!

'மழைபெயல் மாறிய கழைதிரங் கத்தம்
ஒன்றிரண் டலபல கழிந்து...............
.....................காண்குவந் திசினே' (பதிற். 41)

'கணைநரி யோடு கழுது களம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளம் தழீஇ
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
..................................
பாடி வந்திசின்.....................
..................................
வேழமுகவை நல்குமதி' (புறம். 369)

என்பவற்றை நோக்குகையில், பரணர் அவ்வவ் விடங்களுக்குச் சென்றவரே என்னுங் கொள்கை வலியுறும். இவர், பற்பல நாடுகளுக்குச் சென்றுவருதற்குக் குடும்ப பாரம் இல்லாதிருந்தது பெரிதும் உதவியாயிற்றுப்போலும்! இவ்வாறே [1]புலவர் பலர், தாம் ஆங்காங்குச் சென்ற செய்தியைக் கூறியிருக்கும் பாட்டுக்களையும் இங்கே நோக்கிக்கொள்க.

---

1 'நின், பகைவர் நாடுங் கண்டுவந் திசினே'. (பதிற். 15)
'பாசறை, நீடினை யாகலிற் காண்குவந் திசினே'.
(பதிற். 16) குமட்டூர்க் கண்ணனார்.
'நின், நல்லிசை தரவந் திசினே.' (பதிற். 61) கபிலர்.
இவை முதலியன பல.

புலமைத்திறன்.

பரணர், பிறரால் பாடுதற்கரிய பெருஞ்செய்திகளை நன்கு அமைத்து, எளிதிற் பாடும் வன்மை வாய்ந்தவர். திருக்கோவலூரிற் பொருதுவென்று வந்த அதியமான் நெடுமான் அஞ்சியை, அவ்வையார் புகழ்ந்து பாடுகையில்,

'செருவேட்
டிமிழ்குரன் முரசின் எழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் ஆற்றல் தோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை இன்றும்
பரணன் பாடினன் மற்கொல்[1] மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறி
நின், அரணடு திகிரி யேந்திய தோளே.' (புறம். 99)

என்று கூறியிருக்கும் அடிகளில், போர்ச்செயலையும், வென்றித் திறத்தையும் திறம்படப் பாடவல்ல ஆற்றலமைந்த பெரும்புலவனாகிய பரணன் பாடினான்; அவனைப்போல் பாடும் வன்மையில்லாத யான் அவை எங்கனம் அமையப் பாடுவேன் என்னும் உட்கருத்துப் போதருதலான், இஃது அறியப்படும். உரையாசிரியர், 'இன்றும் பரணன் பாடினன் என்றது, அவனும் தன் பெருமையாற் பாடினான்; பிறரால் பாடப்படுதல் அரிது என்றதாம்' என்று எழுதியிருத்தலும் இதனை வலியுறுத்தும்.

தன்மை.

பரணர், அரசர் தம்முட் பகைகொண்டு பொருவராயினும், அவர்தம் நாட்டுக்கு இடையூறு நேர்வதாயினும், வீரர்கள்குடிக்குக் கேடு வருவதாயினும் காணப்பொறுது வருந்தி யிரங்கும் இயல்பினர் என்பது அவர் பாட்டுக்களால் நன்கு விளங்குகின்றது. இதனை, புறம். 63, 336, 341, 354 ஆகிய பாட்டுக்களை நோக்கி அறிக. அன்றியும், பேகன், தன் மனைவியைத் துறந்து, பொதுமகளொருத்தியைக் காதலித்து அவளோடு உறைந்த காலத்தில், பரணர் அவன்பாற் சென்று, யாம்,

'பசித்தும் வாரேம் பாரமு மிலமே
* * *
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியாம் இரந்த பரிசிலஃ திருளின்

---

1. இப்பாட்டின் உரையின் கீழ், 'கொல்-ஐயம்' என எழுதப்பட்டிருப்பது, உரையாசிரியர் எழுதியுள்ள உரைக்கும் விசேடவுரைக்கும் அமைதியாகத் தோன்றவில்லை. இது பிற்காலத்தில் தவறாக எழுதப்பட்டது போலும்! சில இலக்கணக் குறிப்புக்கள், பிற்காலத்தே பாடங் கேட்போர் எழுதியனவாகும் என்று மஹாமஹோபாத்யாய. வே. சாமிநாத ஐயாவர்கள் தெரிவித்தார்கள்.

இனமணி நெடுந்தேர் ஏறி
இன்னு துறைவி யரும்படர் களைமே' (புறம். 145)

என்று பாடி, அவனை, முன்போல் தன்மனைவியுடன் வாழுமாறு வேண்டியதனுல், இவரது இரக்கமும் இயல்பும் புலனுகும்.

பரணர், தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் சென்று திரிந்து பற்பல வரலாறுகளை அறிந்தவராதலின், தம் பாட்டுக்களில் பெரும் பாலும் யாதேனும் ஒரு வரலாறு கூறுதிரார். வரலாற்றுக் குறிப்புக்கள் இவர் பாட்டுக்களிற் காணப்படுதல்போலப் பிறர் எவர் பாட்டுக்களிலும் காணப்படுதல் இல்லை. வரலாறு கூறுதலிற் சிறப் புடையவராய மாமூலர், கல்லாடர் என்போரும் இவர்க்குப் பின்னிற்போரே யாவர். இதனுல், இவரது உலகப்பயிற்சியும், சரித்திர அபிமானமும் தெளிவாக விளங்கும்.

பண்டைக்காலத்துப் புலவர், தம்காலத்தில் நடந்த செய்திகளை உண்மையுறக் கூறுவதிலும், தமக்கு யாது நேர்வதாயினும் நற்குண மில்லாதோரைக் கடிந்து அறிவுறுத்துவதிலும், நன்னிலையினின்று வழுவாமையிலும் உறுதியுள்ளவர்; தம் உள்ளத்தில் உண்மை யென உறுதியாகத் தெளிந்தவற்றை அஞ்சாது கூறும் ஆன்மை வாய்ந்தவர்; இவ் வியல்புகளைக்கொண்டே, பிற்காலத்தில் கதை எழுதியோரும், 'நெற்றிக் கண்ணைக் காட்டினுங் குற்றங் குற்றமே' என்று, நக்கீரர் கடவுளோடு எதிர்த்துக் கூறினர் என்று எழுத லாயினர். இவ் வியல்பு பண்டைப்புலவர்பால் அமைந்திருந்ததைப் பல வரலாறுகளிலும் காணலாம். நம் பரணர்,

'நன்னன் போல,
வரையா நிரயத்துச் செலீஇயரோ' (குறுந். 292)

எனக் கூறியிருத்தலின், இவருடைய நெஞ்சத்துணிவும், அஞ்சா வியல்பும் தெள்ளிதின் அறியலாகும். நன்னனைப்பற்றிக் கூறியது, அவன் இறந்ததன் பின்னராயின், இது, தீமைசெய்தோர் மீளா நரகம்புக்கு வருந்துவர் என்பதை உலகத்தாருக்கு அறிவித்த நன்னேக்கம் ஆகும்.

பெருமை.

பரணர், [1]முடிவேந்தர்களாலும் தலைவர் பிறராலும் நன்மதிப் படைந்து விளங்கியவர் என அறியப்படுகின்றது. யாப்பருங்கலத்தின் விருத்தியுரை யாசிரியர், 'பெருஞ்சித்திரனுர் செய்யுளும், அவ்வையார் செய் யுளும், பத்தினிச் செய்யுளும் முதலாக வுடையனவெல்லாம்

1. கடல்பிறக்கோட்டிய வேல்கெழுகுட்டுவன் இவருக்குப் பெரும் பரிசில் நல்கி யிருத்தலும், பேகனைச் சந்துசெய்தற்கு இவர் அவன்பாற் போயிருத்தலும், பிறவும் அறிக.

எப்பாற்படும் எனின், ஆரிடப்போலி என்றும் ஆரிடவாசகம் என்றும் வழங்கப்படும் என்க. இவைகளெல்லாம் இருடிகளல்லா ஏனையோராகி மனத்தது பாடவும், ஆகவும் கெடவும் பாடல்தரும் கபிலர் பரணர் கல்லாடர் மாமூலர் பெருந்தலைச்சாத்தர் இத்தொடக்கத்தோராலும் பெருஞ்சித்திரர் தொடக்கத்தோராலும் ஆரிடச் செய்யுட்போல மிகவும் குறையவும் பாடப்படுவன எனக்கொள்க' என்று எழுதியிருப்பதை நோக்கின், இவர் (பரணர்) அக்காலத்தில் தெய்வப்புலவராகக் கருதப்பட்டார் என்பது நன்கு புலனாகும்.

[1]'முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரணர் கபிலரும் வாழி'

என, இவரை அகத்தியனாரோடு சேர்த்துக் கூறியிருத்தல் காண்க.

'பரணோபி கவிஶ்ரேஷ்ட:'

என்று ஹாலாஸ்ய மாஹாத்ம்யம் இவரைப் புகழ்ந்து கூறுதலும், 'காசறு செய்யுட் பரணர்' என்று பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தின் பதிகம் கூறுதலும் இங்கே அறியத்தகும்.

**காலம்.** பரணர் பாட்டுக்களிற் காணும் செய்யுளிலக்கணங்களை [2]முன்னர் ஆராயுமிடத்து, இவர், ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்துக்குப் பிற்பட்ட காலத்திலேயே வாழ்ந்தவராகவேண்டும் என்பது விளக்கப்படும். இவர் வாழ்ந்திருந்த காலம் இதுவாகும் எனத் திட்டமாகக் கூற முடியாவிடினும், ஒருவாறு கி. பி. முதல் நூற்றாண்டின் இடைப்பகுதி எனக் கூறுதல் கூடும். அது, [3]'The Chronology of the Early Tamils' என்னும் புத்தகத்தினால் விளங்குவதாகும். ஆதலின், இங்கே இவர் காலம் விரித்துக்கூறாமல் நிறுத்திக் கொள்ளப் படுகின்றது.

**பரணர் காலத்துப் புலவர்கள்.** பரணர் காலத்தில் தமிழ்நாட்டின் பல விடங்களிலும் பெரும் புலவர் பலர் திகழ்ந்து விளங்கியிருத்தல் கூடும். ஆயினும், அவர்காலத்தில் வாழ்ந்திருந்தோர் எனத் துணிந்து கூறப்படுபவர் சிலரே. அவராவார்: கழாத்தலையார், [4]கபிலர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார், கழைதின்யானையார் ஆவர்.

---

1 'நிறை மொழி மாந்தர்' (தொல். செய்யு. 178) என்னும் சூத்திரத்தின் உரை பார்க்க.

2. இந்நூலில் எட்டாம் அத்யாயம் பார்க்க.

3. இது, சென்னை யூநிவர்ஸிடித் தமிழ் ரீடர் ம-ா-ாஸ்ரீ. K. N. சிவராஜ பிள்ளையவர்கள் எழுதியது.

4. 'கபில பரணர்' என்னும் தொடர் உதாரணமாக வழங்குதலினாலும், கபிலரும் பரணரும் வாதுசெய்தனர் என்பது வீரசோழிய வுரையால்

அவருட் கழாத்தலையார், பரணரால் பாடப்பட்ட சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனையும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியையும் பாடினவர்[1].

கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் ஆகிய இம் மூவரும், பரணரால் பாடப்பெற்ற வையாவிக்கோப் பெரும் பேகனைப் பாடியுள்ளனர்[2].

பெருங்குன்றூர் கிழார், பேகனையே யன்றி, பரணர் பாடிய சோழன் உருவப் பஃறேரிளஞ்சேட் சென்னியையும் பாடியுள்ளார்[3].

கழைதின்யானையார், பரணர் பாடிய வல்வில் ஓரியைப் பாடியுள்ளார்[4].

இவர்களேயன்றி, பரணர் பாடியுள்ள அரசர் முதலியோர் காலத்தும் அதனை அடுத்தும் இருந்தவர்களைப் பாடினோராகிய வன்பரணர், மதுரைப்பேராலவாயர், குண்டுகட்பாலியாதன், குமட்டூர்க் கண்ணனார், அம்மூவனார், பாலைக்கௌதமனார், ஊன்பொதி பசுங்குடையார், இடையன் சேந்தன் கொற்றனார், மோசிகீரனார், காப்பியாற்றுக் காப்பியனார், குடவாயிற் கீரத்தனார், காக்கை பாடினியார் நச்செள்ளையார் ஆகிய இவர்களும் பரணர் காலத்தவராவர் என்னலாம்.

**[5]பரணர் காலத்தில் நாட்டின் நிலைமை.**

பரணர் வாழ்ந்திருந்த காலத்தில், தமிழ்நாட்டில் முடி வேந்தர் மூவரும் அரசு செலுத்திவந்தனர்; அவர்கட்குக் கீழ்ப்பட்டும் கீழ்ப்படாமலும் ஆங்காங்கே தலைவர் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்கள், முடிவேந்தர்களுக்கு உதவி செய்வதுண்டு; வேந்தர்களின் உதவியைத் துணைக்கொண்டும் துணைக்கொள்ளாதும் தம்முட் பொருதலும் வழக்காறுயிருந்தது. வேந்தர், தம்மை யொத்த வேந்தரோடும், மற்றைத் தலைவர்களோடும் பகைகொண்டு போர் புரிந்து வெற்றி பெறுதலையே விரும்பினர். பெரும்படையும் அருந்திறலும் அமைந்த வேந்தன் ஆட்சியில், அவன்நாட்டுக் குடிகள் வேறு அச்சமின்றி வாழ்ந்திருப்பராயினும், அவ்வேந்தன் காலத்தில் பிறர்நாட்டினர் படுந் துன்பங்கள் மிகப்பலவாகும்.

---

(தொகைப்படலம். 6) அறியப்படுதலினாலும் இவ்விருவரும் ஒருகாலத்தவர் என்பது வலியுறும்.

1. புறம். 62, 368.
2. புறம். 143, 146, 147-ஆம் பாட்டுக்களை முறையே காண்க.
3. புறம். 266.
4. புறம். 204.
5. பரணர் பாட்டுக்களால் அறியப்படும் செய்திகளே ஈண்டு எழுதப் படுகின்றன.

வேந்தர் போர்புரியச்செல்கையில் பகைவரூர்களைத் தீயிட் டெரித்தலும், அவர் விளைநிலங்களில் தம் யானை முதலியவற்றை விடுத்துப் பயிர்களை அழித்தலும் வழக்கம்.

'சோல்பல நாட்டைத் தோல்கவி னழித்த
போரடு தானைப் பொலந்தேர்க் குட்டுவ' (பதிற். 43)

'முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்ப' (பதிற். 48)

என்னும் அடிகள் இங்கே அறியத் தக்கன.

அக்காலத்தில் ஆட்சி செய்த பெருவேந்தர் வடநாட்டிலும் சென்று, ஆரிய அரசர்களை வென்று, தம் கொடியை இமயமலையிற் பொறித்து வந்தனர் என அறியப்படுகின்றது. இஃது,

'ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத்
தோன்றுமுதிர் வடவரை வணங்குவிற் போறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னவென் நலந்தந்து சென்மே.' (அகம். 396)

என்னும் அடிகளால் விளங்கும்.

படைமறவர் சென்று பகைவர் நிரைகளைக் கவர்ந்துவருவதும் உண்டு[1].

தம் வாய்மையைக் காப்பாற்றும்பொருட்டுத் தம் உயிரைக் கொடுத்த வீரர்களும் திகழ்ந்து விளங்கினர்.

'ஆஅய் எயினன்..................
தன், உயிர்கோடுத் தனனே சோல்லிய தமையாது'
(அகம். 396)

என்னும் அடிகள் இதனைப் புலப்படுத்தும்.

விழாக்களைக் காணுதற்கு அரசரும் செல்லுவர்[2]; அங்கே கூத்துமுதலியவை நடைபெறும்[3]. பெரும் பொருள் படைத்தவர் தேரிற் செல்லுவர். அவர்கள் பரத்தையரோடு சேர்ந்து வாழ்ந்தனர் என்பது பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. ஊர்களில் காவலாளர் மிக்க திறமையுடன் காவல் செய்துவந்தனர்.[4]

1. அகம். 372.
2. அகம். 376.
3. அகம். 222.
4. அகம். 122.

தமிழர், பிறநாடுகளிலும் சென்று பொருள் ஈட்டி வந்தனர்; [1]மரக்கலங்களின் மூலமாகவும் வாணிகத்தொழில் நிகழ்த்தினர். [2]ஆரியர் பிடியானைகளைப் பழக்கிக் களிறுகளைப் பிடித்துத் தந்தனர் என்று கூறப்பட்டுளது. நாட்டில் பலவகைத் தொழில்கள் நிகழ்ந்து வந்தன. சங்கை அரத்தாலறுத்து [3]வளையல் செய்தல், [4]சங்கைக் கழுங்காகக் கடைதல், [5]பொற்பாவை செய்தல், [6]மீன் விற்றல், [7]உப்பினை வண்டியிற் கொண்டுபோய் விற்றல் முதலான தொழில் களைக் குறித்துப் பரணர் பலவிடங்களிற் கூறியுள்ளார்.

அரசர் முதலியோர் இனிய நறவைத் தம்பால் வருங் கூத்தர் முதலியோர்க்குக் கொடுத்தல் வழக்கம்[8]. நெல்லரியுந் தொழி லாட்கள் கள் அருந்துதல் உண்டு[9].

புலவர் பலர், வேந்தர்கள் வள்ளல்கள் முதலானவர்களின் அன்பைப்பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தனர். அக்காலத்தில் நிகழ்ந்த செயல்கள் பல அவர்களால் பாடப்பட்டன.

தமிழ் மொழியும் தமிழரசும் சால உயர்ந்த நிலையில் ஒளிர் வுற்றிருந்தன.

---

1. புறம். 343.
2. அகம். 276.
3. அகம். 125.
4. அகம். 135.
5. நற். 201.
6. புறம். 343.
7. குறுந். 165.
8. பதிற். 43.
9. அகம். 116.

எட்டுத் தொகை நூல்களுள், பாணர் பாடிய பாட்டுக்களைக் கொண்டுள்ளவை ஐந்து. அவை-நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு என்பனவாகும். இவற்றுள் பதிற்றுப் பத்தும் புறநானூறும் புறப்பொருளை உணர்த்துவன; ஏனைய மூன்றும் அகப்பொருளை யுணர்த்துவன. இந்நூல்களில், இவர் பாடியன வாகக் காணப்படும் பாட்டுக்கள் எண்பத்தைந்து[1].

பரணர் பாடிய பாட்டுக்கள்

பரணர் பாடிய பாட்டுக்கள் அனைத்தும் அகவற்பாக்களே. அவற்றுள், அகப்பொருட்பாட்டுக்கள் அறுபத்திரண்டு. அவை, நற்றிணையில் பன்னிரண்டும், குறுந்தொகையில் பதினறும், அகநானூற்றில் முப்பத்துநான்கும் ஆகும்.

புறப்பொருட் பாட்டுக்கள் இருபத்துமூன்று. அவை, பதிற்றுப் பத்தில் 5-ஆம் பத்தின் பாட்டுக்கள் பத்தும், புறநானூற்றில் உள்ள பாட்டுக்கள் [2]பதின்மூன்றும் ஆகும்.

அகப்பொருட்பாட்டுக்கள் அறுபத்திரண்டில் [3] குறிஞ்சித்திணையைச் சார்ந்தவை முப்பத்துமூன்று; [4] மருதத் திணையைச்சார்ந்தவை

---

1. 'இவர் (பரணர்) செய்தனவாக 82 செய்யுட்கள் இப்பொழுது தெரிகின்றன: இந்நூல் (பதிற்றுப்பத்து) 10; நற்றிணை 12; குறுந்தொகை 15; அகநானூறு 32; புறநானூறு 13.' என்பது, பதிற்றுப்பத்தில் நூலாசிரியர்கள் வரலாற்றிற் காணப்படுகின்றது.

2. 4, 63, 141, 142, 144, 145, 336, 341, 343, 348, 352, 354, 369. (13) பன்னிரண்டு என்று குறித்துள்ளார் நற்றிணைப் பதிப்பாளர்.

144-ஆம் பாட்டில் வன்பரணர் பாடியது எனப் பாடாந்தரம் காணுதலின், 144, 145, இவ்விரண்டு பாட்டுக்களும் பரணர் பாட்டுக்களாகா எனின், தொல். புறத்திணையியல். சூ. 35-ல், 144-ஆம் பாட்டை மேற்கோளாகக் காட்டி, 'இது, கண்ணகி காரணமாக வையாவிக்கோப் பெரும் பேகனைப் பரணர் பாடிய கைக்கிளைவகைப் பாடாண் பாட்டு' என ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலின், இவை பரணர் பாட்டுக்களாகவே கொள்ளுதல் அமையும் என்க.

3. நற்றிணை. 6, 201, 247, 265, 356; (5)

குறுந். 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 292, 298, 328, 393, 399.(13)

அகநா. 62, 122, 142, 148, 152, 162, 178, 198, 208, 212, 222, 258, 262, 322, 372. (15) ஆக. 33.

4. நற்றிணை. 100, 260, 270, 280, 300, 310, 350. (7)

குறுந். 19, 258. (2)

அகம். 6, 76, 116, 186, 196, 226, 236, 246, 266, 276, 326, 356, 376, 386, 396. (15) ஆக. 24.

இருபத்து நான்கு; [1]பாலைத்திணையைச் சார்ந்தவை ஐந்து. இவற்றுள், [2]முல்லைத்திணை நெய்தற்றிணைகளைக் குறித்த பாட்டுக்களும் உள்ளன என்னலாம்.

பாட்டுக்களுக்குத் திணை கூறுமிடத்து, முதற் பொருளினும் கருப்பொருளும், கருப்பொருளினும் உரிப்பொருளும் சிறந்த ஏதுக்களாகும் என்றல், ஆசிரியர் தொல்காப்பியனுர் கொள்கையாகும். இதனை,

'முதல்கரு வுரிப்பொருள் என்ற மூன்றே
நவலுங் காலை முறைசிறந் தனவே'

என்னும் தொல்காப்பிய அகத்திணையியல் 3-ஆம் சூத்திரத்தான் அறிக. ஆனல், கருப்பொருளை மட்டுமே நோக்கித் திணை வகுக்கப்பட்ட பாட்டுக்களும் உள்ளன. ஆயினும், இத்திறத்தில் ஆசிரியர் நச்சினர்க்கினியர் கொண்ட கொள்கை[3] சாலச்சிறந்ததும், பொருந்துவதும் ஆகும். ஆகவே, பரணர் பாட்டுக்களுள் ஐந்து திணைப்பாட்டுக்களும் காணப்படுகின்றன என்னலாம். எனினும், இவர் பாடியவற்றுள், குறிஞ்சித் திணைச் செய்யுட்களே பெரும்

---

1. குறுந். 24. (1)
அகம். 125, 135, 181, 367. (4) ஆக. 5.

2. நற்றிணையில் 270-ஆம் பாட்டிலும் குறுந்தொகையில் 328-ஆம் பாட்டிலும் நெய்தற்றிணைக்கருப்பொருள்கள் வந்துள்ளன.

நற்றிணையில் 300-ஆம் பாட்டின் கருத்துரையில், 'மருதத்துக்களவு' என்று எழுதியிருப்பினும், உரிப்பொருளின் சிறப்பை நோக்கின் அதனைக் குறிஞ்சித்திணைச் செய்யுளாக எண்ணுதல் அமைதி.

குறுந்தொகையில் 24-ஆம் பாட்டு, பாலைத்திணைச் செய்யுளாகக் கொள்ளப்பட்டுள்ளது; அதனை முல்லைத்திணையில் அமைத்தற்கு அமைதி பெரிதும் உண்டு.

அகநானூற்றில், 356-ஆம் பாட்டின் கருத்துரையும் உரிப்பொருளும் நோக்கின், அது குறிஞ்சித்திணைச் செய்யுளாதற்கு ஏற்புடையதாகும். இப் பாட்டின் பொருளோடு கலித்தொகைக் குறிஞ்சிக்கலியின் 15-ஆம் பாட்டை ஒப்பிட்டு நோக்குக. இவ் வகைப்பாட்டில் களவொழுக்கத்தலைவன் மருத நிலத்தவனென்று கொண்டு, இதனைக் குறிஞ்சித்திணைச் செய்யுளிற் சேர்த்தல் பொருந்துவதாகும். ஆயினும், அகநானூற்றைத் தொகுத்த புலவர், இப் பாட்டில் வரும் மருதக்கருப்பொருளை மட்டும் கருதி, இவ்வாறு அமைத்தன ராதல் வேண்டும்.

3. அகத்திணையியல். 3-ஆம் சூத்திரத்திற்கு, ஆசிரியர் நச்சினர்க்கினியர் '...முதலும் கருவும் உரிப்பொருளும் என்ற மூன்றேயாம்; அவை தாம், செய்யுள் செய்யுங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடைய' என்று உரைகூறி, 'முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளும் சிறந்துவரும்' என்று எழுதியிருத்தல் அறிக.

பாலனவாதல் மேலே குறித்த எண்களின் மிகுதியால் தெளியலாம். இவர், மருதத்திணைப் பொருளையும் அழகுபெற அமைத்துப் பாடுதலில் வல்லவர். இவற்றால், இவர் மலைநாடுகளிலும் பேரூர்களிலும் வதிந்து, அந்நிலத்துப் பொருள்களையும், அங்கு நிகழும் வழக்க ஒழுக்கங்களையும் நன்கறிந்து தேர்ந்தவர் எனக் கருதலாம்.

**பரணர், செய்யுள் செய்தற்கான ஏதுக்கள்.**

முற்காலத்தில், நாடுகளைத் தலைவர் பலர் ஆண்டு வந்தனர். மூவேந்தர் காலத்திலும் ஆங்காங்கே சிற்றரசர் ஆட்சி செய்து வாழ்ந்தனர். வேந்தர், தமக்குப் போர்த்துணை புரிந்த தலைவர்களுக்கு ஒன்றிரண்டு நாடுகளை நல்கி, அவற்றை யாளும்படி அவர்களை நியமித்தனரே யன்றி, புலவர்களின் பேரறிவுடைமையைக் கருதி, அவர்களை நாட்டை யாளுமாறு நியமித்தனரல்லர். அதனால், புலவர் சிலர், வள்ளல்களை யடுத்துப் பரிசில் பெற்று வாழ்ந்து வந்தனர்; பலர், பழமரந் தேரும் பறவைபோல, கொடையாளிகளைத் தேடிச் செல்வாராயினர்; புலவரிற் சிலர், பேரரசர்களின் உதவியால் பெருஞ்செல்வம் படைத்து வாழ்ந்தனராயினும், பலர் வறுமைப்பிணியுள் ஆழ்ந்து வருந்தினர் என்பது, பண்டைச் செய்யுட்களால் வெளிப்படுகின்றது. வறுமையுள் ஆழ்ந்த புலவர் பலவிடங்களுக்கும் சென்று, ஆங்காங்கு விளங்கிய வள்ளல்களையும் தலைவர்களையும் பாடிப் பரிசில்வேண்டுதல் இயல்பே. ஆயின், பரணரோ, தமக்குப் பொருள் வேண்டிப் புரவலரைப் பாடினவ ரல்லர் என்பது, 'பசித்தும் வாரேம் பாரமு மிலமே' என இவர் கூறியிருத்தலின் அறியப்படும். ஆயின், இவர் அரசர்களையும், வள்ளல்களையும், தலைவர்களையும் பாடியது என்னை எனின், அதன் காரணமாவது :

பெரும்போர் புரிந்து வெற்றிபெற்ற வேந்தரின் திறமும், புகழ்வாய்ப்ப உயிர்நீத்த மன்னவரின் மறமும், நல்லோர்களுக்கு இடையுற்ற இடையூறும், பிறவும் நம் புலவரின் உள்ளத்தினின்றும் பாட்டுக்களை அறிஞர்க்கு விருந்தாகக் கொடுத்தன. இவற்றை, புறநானூறு 4, 63, 144, 145, 336 ஆகிய இப் பாட்டுக்களை நோக்கி அறிக. செயற்கரும் பெருஞ்செயல் செய்த அரசனது திறலும் வலியும் நம் புலவர்மனத்தைக் கவர்ந்தன. அவற்றின் பயனாக நாம், பதிற்றுப்பத்தின் 5-ஆம் பத்தாயுள்ள பத்துப்பாட்டுக்களைப் பெற்றோம். இங்ஙனமே அரசர்கள், வள்ளல்கள், தலைவர்கள் ஆகியோர்களின் மேன்பாடும் நற்செயலும் இவர் உள்ளத்திற் பதிந்து, பாட்டு வடிவில் வெளிப்போந்துள்ளன என்பது, இவர் பாடியுள்ள அகப்பொருட் பாக்களை நோக்கின் தெள்ளிதிற் புலனாகும். இவர் காலத்தில் நிகழ்ந்த பிற செய்திகளும், இவரைச் செய்யுள் செய்யத்

தாண்டின. ஆதிமந்தியின் வரலாறு, அன்னிமிஞிலியின் செய்தி இவை போன்றன இவற்றிற்கு எடுத்துக்காட்டாகும். இவர், பெரும்பாலும் யாதேனும் ஒருவரலாற்றை அறிவித்தற் பொருட்டே அகப்பொருட்டுறை ஒன்றனை அமைத்துக்கொண்டு பாடுவார் என்பது, இவர் பாடியுள்ள அகப்பொருட் பாட்டுக்களைப் படிப்போருக்குத் தெற்றென விளங்காமற் போகாது. இன்னும், பல் வளம் நிறைந்த மலைகளையும் காடுகளையும் அறிவித்தலினும், ஒவ்வோரிடத்திலிருந்த சிறந்த பொருள்களைத் தெரிவித்தலினும் இவர்க்கு உண்டான விருப்பமும் ஒரு காரணமாகலாம். பரணர் பாடியுள்ள பாட்டுக்களை ஆழ்ந்து நோக்குமிடத்து, இவர், பிறர்பால் [1]பொருள் வேண்டிப் பாடினவரல்லர் என்பதும், இவர் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பலவும் இவருள்ளத்தினின்று பாட்டுக்களாக வெளிப்போந்தன என்பதும் நன்கு விளங்கும். இவரைப்போலவே புலவர் பிறரும் அக்காலத்தில் விளங்கினர்.

**பரணர் பாட்டுக்களிற் காணும் தவறான பாடங்களும் அவற்றிற் கேற்ற அமைதிகளும்.**

பண்டைத் தமிழ்ச்செய்யுளைக் கற்போரும் கற்பிப்போரும் அருகிய பிற்காலத்தில், சமய நூல்களும் புராணங்களும் சிறு யாப்புக்களும் (பிரபந்தங்களும்) பல்கின என்பதும், அதனால், பண்டைத் தமிழ்நூல் ஏடுகள் போற்றுவாரற்றுச் சிதையலாயின என்பதும் அனைவரும் அறிந்தனவே. ஆயினும், புலவர் சிலரது மரபில் தோன்றினோராலும் சில மடங்களின் தலைவர்களாலும் சிற்சில ஏடுகள் ஒருவாறு காக்கப்பட்டன. சமீபகாலத்தில் அறிஞர் சிலரால் சில நூல்கள் அச்சுவாகனத்தில் ஏறி வெளிவந்துலவினவாயினும், பழைய நூல்கள் எல்லாம் வெளிவந்தன அல்ல. அவற்றை, மஹாமஹோபாத்யாய. ப்ரஹ்மஸ்ரீ வே. சாமிநாத ஐயரவர்கள், தமது பேரறிவாற் பிழையற நாடி, அவற்றிற்கான பல அரிய குறிப்புக்களையும் எழுதி, கற்போருக்கு நன்கு விளங்கும்வண்ணம் நல்லமுறையில் திருத்தமாகப் பதிப்பிக்கலானார்கள். எட்டுத்தொகை நூல்களுள்-ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு ஆகிய நான்கும் மஹாமஹோபாத்யாய ஐயரவர்களால் நல்லுருவடைந்து வெளிப்போந்துள்ளன என்பதும், மற்றையவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொருவரால் பதிப்பிக்கப்பட்டுள்ளன என்பதும் தமிழ்நாடு அறிந்தனவே. ஏடுகள் சிதைந்தும் குறைந்தும் கிடந்த இப் பண்டைத் தமிழ்

---

1. வேழத்தைப் பரிசிலாக வேண்டி, கடலோட்டிய வேல் கெழு குட்டுவனைப் பாடியுள்ளாரால் எனின், அதுவும், குட்டுவனது போர்க்களத்தின் சிறப்புத்தோன்றப் பாடப்பட்டதே யன்றி, பரிசிலின்பொருட்டுப் பாடப்பட்டது அன்று என்க.

நூல்களை எத்துணை ஆராய்ந்து பதிப்பிப்பினும் அவற்றில் சிற்சில இடங்களில் பிழைபாடுகள் நேராமற்போகா என்பது ஒருதலை. அன்றியும், பதிப்பிப்போரின் ஆராய்ச்சிக் குறைவினால் நேர்ந்த சில பிழைகளும் அவற்றிற் காணப்படும். ஆதலின், இங்கே ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட பரணர்பாட்டுக்களில் காணப்படும் தவறான பாடங்களையும், இயன்றவளவில் அவற்றிற்கு அமைதியான பாடங்களையும் ஆராய்கின்றேன்:

நற்றிணை.

நற்றிணை என்னும் நூலை ஆராய்ந்து, அதற்கு யாவரும் மதிக்கத் தக்கதொரு சிறந்த உரையை எழுதிப் பதிப்பித்த ப்ரஹ்மஸ்ரீ. பி. அ. நாராயணசாமி ஐயரவர்களின் புலமையும், உரை யெழுதும் வன்மையும் புகழத் தக்கனவே. ஆயினும், அவருக்கும் மயக்கத்தை யுண்டு பண்ணக்கூடியவாறு ஏடுகள் சிதைந்தும் பிழைபட்டும் இருந்திருக்கின்றன எனவும், அதனால் திருத்தமில்லாத பாடங்களும் பொருத்தமில்லாத உரைகளும் சிலவிடங்களில் காணப்படுகின்றன எனவும் கூறுதல் தவறாகாது. அந்நூலுள், பரணர் பாட்டுக்களாயுள்ள பன்னிரண்டு பாக்களுட் காணப்படும் பிழைபாடுகளை இங்கே குறிக்கின்றேன்.

247-ஆம் பாட்டில்,

'அழிதுளி பொழிந்த இன்குர லெழிலி'

என்னும் 3-ஆம் அடியில், 'அழிதுளி' என்பதற்கு, 'வீழ்கின்ற மழையை' என்று பொருள்கூறி யிருப்பதினும், [1]'மிக்க மழையை' என்று பொருள் கூறுதல் ஏற்புடைத்தாகும்.

265-ஆம் பாட்டில் சில அடிகள் மிகவும் பிழைபாடுடையனவா யிருத்தலின், அவற்றின் உண்மையான பாடம் காண்டல் அரிதாகின்றது.

270-ஆம் பாட்டில், 4, 5, 6-ஆம் அடிகளை

'உருள் பொலி போல வெம்முனை வருந்த
லணித்தகை யல்லது பிணித்த றேற்றாப்
பெருந்தோட் செல்வத் திவள்'

எனப்பதிப்பித்து, அவற்றிற்கு, 'நிலத்திலே புரண்டு சாய்ந்தாற் போலாக எம்முன்னே வருந்துதலை யுடையளாகி அழகழிந்த தன்மை

---

1. 'அற்றார் அழிபசி' (குறள், 226) என்பதற்கு, 'வறியாரது மிக்க பசியை' என்று பரிமேலழகர் உரைத்த உரையையும், 'அழிதரு கம்பலை' (மதுரைக்காஞ்சி. 544) என்பதற்கு 'மிகுதியைத் தருகின்ற ஓசை' என்று நச்சினார்க்கினியர் கூறிய உரையையும் பார்க்க.

யோன்றல்லாது நின்னை வசமாக்குதலைத் தெளியாத பெரிய தோளை யுடைய இவள்' என்று உரை கூறியுள்ளார்.

'உருள் போலி போல'

என்பதற்குப் 'புரண்டு சாய்ந்தாற்போலாக' எனப்பொருள் கூறியது அமைதியுடையதாகத் தோன்றவில்லை. இதன் சரியான பாடம் தெரியவில்லை.

'வருந்த லணித்தகை யல்லது' என்பது, 'வருந்த [1]வணித் தகை யல்லது' என்றிருக்கலாம் போலும்! லகர வகரங்கள் வேறு பாடு அறிய முடியாதவாறு ஏடுகளிற் காணப்படுதல் இயல்பே.

280-ஆம் பாட்டில்,

'கோக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின்
கூம்புநிலை யன்ன முகைய வாம்பற்
றாங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழும்'

என்னும் பகுதியில் முதலடிக்கு, 'கோக்கு வந்திருந்ததனால் கிளை அசைதலின் உதிர்ந்த இனிய மாங்கனியானது' என்று உரையெழுதப் பட்டுள்ளது. ஈண்டு, 'கோக்கு' என்பதற்கு, 'மாமரம்' என்று பொருள் கொள்ளுதல் தகுதி. கோக்கு என்பது, குக்கு என்னும் துளுவச்சொல்லின் திரிபு. கோக்கின் உக்கு ஒழிந்த தீம்பழம்= மாமரத்தினின்று உதிர்ந்தொழிந்த இனிய பழம் என்க. கொக்கு என்பதைப் பறவையாகக்கொண்டால், மாமரத்தினது என வருவிக்க வேண்டி யிருத்தலானும், அவ்வடியிலேயே பின்னர்க் கொக்கு (பறவை) என வந்திருத்தலானும் அஃது அமைதியாதல் இல்லை.

300-ஆம் பாட்டில், 10, 11-ஆம் அடிகளில்,

'தழும்ப னூணூ ராங்கட்
பிச்சைசூழ் பெருங்களிறு போல'

எனப் பதிப்பித்து, 'தழும்பன் என்பவனது ஊணூரிடத்துள்ள பிச்சைக்கு வந்த பெருங்களிறு நிற்றல்போல' என்று உரை எழுதி யிருத்தல் சிறப்புடையதாகக் காணப்படவில்லை. 'பிச்சை' என்பது

---

1. அணித்தகை யல்லது-அழகினைத் தகைத்த லல்லாது என்க. 'அணித் தகை—அழகைத் தகைக்கின்ற' (சீவக. 1172) என நச்சினார்க்கினி யர் உரை கூறி யிருத்தல் காண்க. 'அணித் தகை—அழகைத் தடுப்பது' என்று இவரும் (நற்றிணை யுரையாசிரியரும்) எழுதியுள்ளார்.

300-ஆம் பாட்டில்,

'தேரோடு வந்து போதல் செல்லாது'

என்றிருப்பதை,

'தேரோடு வந்து பேர்தல் செல்லாது'

எனப் படிப்பினு மமையும். அங்ஙனம் கொண்டால் எதுகை நயம் தோன்றும்.

போச்சை என்று இருக்கலாம் எனத் தோன்றுகின்றது. போச்சை= மலை. 'போச்சை கல் கல்லகம் பொருப்பும் நகம் அசலம்......மலை என்ப' என்னும் திவாகரம் (5 : 14) காண்க. சிறுமலையுமாம். இது போத்தை என வழங்கும். 'அட்டி லோலை தொட்டனை நின்மே' என்னும் உபமேயத்திற்கு, 'போச்சைசூழ் பெருங்களிறு போல' என்னும் பாடமே ஏற்றதாதல் அறிக.

310-ஆம் பாட்டில்,

'ஊரற்கு நாளை
மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரோ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே'

என்னும் அடிகளுக்கு, எச்சப்பொருளாக, 'அங்ஙனம் சொல்லி அவரையும் (தாயரையும்) பிறர் முயங்குமாறு விடுக்கலாமன்றோ?' என்றும், விளக்கவுரையில், 'இழிதகவு கருதாது முதியோரையும் புணர்க்கும் இயற்கையை என்பாள், தாயரோடு சொல்லலைகொல் என்றாள்' என்றும் கூறியிருப்பவை, இயைபில்லாத வுரையேயா மென்க. 'தலைவனுக்குப் பரத்தையைச் சேர்த்துவைக்க உடன்பட்ட விறலியே, நின் குறுமொழிக்கு உடன்பட்டு, அதனை யுணராத பரத்தையின் தாய்மாரோடு உடனே சொல்வாயல்லையோ?' என்று கூறும் நேர்பொருளே சாலும்.

9-ஆம் அடியில்,

'கன்றுபெறு வல்சிப் பாணன்'

என்றிருப்பது,

'களிறுபெறு வல்சிப்பாணன்'

என்றிருக்கவேண்டும். 'களிறுபெறு வல்சிப் பாணன்' என்று அகப் பாட்டிலும் (106) வந்திருத்தல் காண்க.

350-ஆம் பாட்டில்,

'சார
விடேஎன் விடுக்குவெ னாயிற் கடைஇக்
கவவுக்கை தாங்கு மதுகையங் குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
யாகில் கலங்கழீஇ யற்றும்
வாரல்'

என்னும் பகுதியும், அதற்கு 'என்னருகில் நீ நெருங்குமாறு விடுவேனல்லேன்; அங்ஙனம் விடுகிற்பேனாயின் என் வாயினால் நின்னை விலக்கப்பட்டும் என் அகத்திடுகைகள் நின்னை வல்லே அணைத்து முயங்காநிற்கும்: நீதானும் வலிமையுடைய குவிந்த

பரத்தையின் கொங்கையினாலே சாடப்பட்ட சந்தனத்தையுடையை, அவள் குழைய முயங்கலாலே துவண்டு வாடிய மாலையையுடையை : ஆதலால் நின்னைத் தீண்டுதல் கலங்கழித்தெறிந்த தாழி முதலிய வற்றைத் தீண்டிய அத்தன்மையதாகும் : அதனால் என் மனையின் கண்ணே வாராதேகொள்:' என்று எழுதப்பட்டிருக்கும் பொருளும் சில தவறுடையனவாகக் காணப்படுகின்றன. 'இது, தலைமகள் ஊடல் மறுத்தாள் சொல்லியது' என்னும் துறைக்கு, பொருள் பொருத்தமற்றுப் பொலிவிழந்திருக்கின்றது. இப் பகுதி,

'சார
விடேஎன் விடுக்குவெ னாயிற் கடைஇக்
கவவுக்கை தாங்கு மதுகைய குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
யாசி லகலந் தழீஇயற்று
வாரல்'

என்று இருக்கத்தக்கது. அவ்வாறாயின், 'யான், நின்னை என்பாற் சாரும்படி விடமாட்டுகிலேன் ; ஒரு வேளை யான் விடுக்கினும் என் கைகள் நின்னைப்புறத்தே செலுத்தித் [1]தடுக்கும் வலியை யுடையன வாகும் ; நீயோ சாந்தினை யுடையை; கோதையை யுடையை; ஆக லின், பரத்தையினது குற்றமில்லாத மார்பைத் தழுவிய அத்தன்மை யுளது. அதனால், இங்கே வாராதேகோள்' என்று பொருள் தந்து சிறக்கும். குற்றமில்லாத மார்பு என்றது குறிப்பு. 'ஆசி னகலம்' எனப் பாடமிருப்பினும் அமையும்.

குறுந்தொகை. இனி, குறுந்தொகைச் செய்யுட்களை ஆராய்கின்றேன். இதில் 19-ஆம் பாட்டின் ஈற்றடி,

'பல்லிருங் கூந்தல் யாருளர் நமக்கே'

என்று பதிப்பிக்கப்பட்டுளது. 'யாருளர்' என்பது, 'யாரளோ'[2] என்று இருப்பின் சிறக்கும்.

24-ஆம் பாட்டில் 5, 6-ஆம் அடிகள் 'பிரதிகள் தோறும் சிதைந்து காணப்பட்டன' என்றும், அதனால்,

---

1. 'நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்' (புறம். 126) என்னுமிடத்து, தாங்கும் என்னும் சொல்லிற்கு, 'தடுக்கும்' என்று உரை எழுதியிருத்தல் காண்க.

2. ளோ எனும் எழுத்தே நளர் எனக் காண்பது. தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல், 22-ஆம் சூத்திரவுரையில், மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ள இக் குறுந்தொகைப் பாட்டின் கீழ்க்குறிப்பில், 'யாரளோ என் பதும் பாடம்' என்று குறிக்கப்பட்டிருப்பது காண்க.

'குழையக் கோட்டியோர்
நாம்வெங் காதலர்க் கலவென் றவ்வே'

என, 'ஒருவாறு அனுமானித்துக் குறிக்கப்பட்டன' என்றும் பதிப்பாளர் குறித்திருக்கின்றார். அவர் அனுமானித்துக் குறித்த பாடமும் பொருள்படுதல் இல்லை. இவ்வடிகள்,

'குழையக் கோடியோர் நாவே
காதல ரகலக் கல்லென் றவ்வே'

என்று இருக்கலாம் என ஊகிக்க இடந்தருகின்றன. இவ்வாறிருப்பின், 'காதலர் நம்மை விட்டுப்பிரியவே, களிறு மிதித்த அத்திப்பழம் குழைவதுபோல நாம் உள்ளங்குழையுமாறு, கோடியோர் பழிச்சொல் கூறுவாராயினர்' என்பது பொருளாகும்.

36-ஆம் பாட்டின் 5-ஆம் அடியில்,

' தவா வஞ்சினம் உரைத்தது'

என்றிருப்பது,

தாவா வஞ்சினம் உரைத்தது'

என்றிருக்கவேண்டுவது.

தவா என்பது ஓரசையாதல் அறிக. அன்றியும்,

'நோயோ தோழி நின்வயி னானே'

என்னும் ஈற்றடியை நோக்கின், 'தாவா வஞ்சினம் உரைத்தது' என்பதே அமைதியாதல் கூறாதே விளங்கும். பதிப்பாளரே, ' தாவா வஞ்சினம்' என்னும் பாடமும் உளது எனக் குறித்திருத்தல் காண்க.

60-ஆம் பாட்டின் முதல் நான்கு அடிகள்,

'குறுந்தாட் கூதளி ராடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட விருகை முடவ
னுட்கைச் சீறுடை கோலிக் கீழிருந்
தூட்டுபு நக்கி யாங்குக் காதலர்'

எனப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவ்வடிகள்,

'குறுந்தாட் [1]கூதளி யாடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட விருங்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்'

---

1. ஆசிரியர் நச்சினர்க்கினியர், இப்பெயரை, கூதாளி என இகரவீறாகக்கொண்டு உதாரணம் காட்டி, 'மகரவீறும் வழங்கும்' என்று (தொல். எழுத். உயிர். சூ. 44 உரை.) எழுதி யிருத்தலின், இது, ரகாவீற்றுப் பெயரன்மை புலனாகும். ' வெண்கூதாளத்து' (அகம். 178) எனப் பாணர் பாட்டில் வந்திருத்தலின், மகாவீறாக வழங்குதலும் அறியப்படும்.

என இருக்கற்பாலன. இப் பாடத்திற்கு, 'கூதளி யாடிய வரையி னிடத்துத் தேனைக்கண்ட முடவன், தன் உள்ளங்கைகளைச் சிறிய குடையாகக் கோலி, அத்தேனைச் சுட்டிக்கொண்டு நக்கினாற்போல, தலைவர் நல்காராயினும், அவரைப் பலமுறை காணுதலும் உள்ளத் திற்கு இன்பந்தரும்' என்னும் பொருளமைதல் அறிக.

89-ஆம் பாட்டின் ஈற்றடியில்,

'குறமகள் பாடிநன் குறினே'

என்றிருப்பது,

'குறமகள் பாடினள் குறினே'

என இருக்கத் தகுவது. 'குறமகள் பாடிக்கொண்டு [1]குறின்' என்பது பொருள்.

165-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில்,

'விழைந்ததன் றலையும்'

என்றிருக்கவேண்டுவது, தவறி,

'விழைத்ததன் றலையும்'

என நேர்ந்தது போலும் !

3-ஆம் அடியில்,

'உப்போய் சகடம்'

என்பது,

'உப்போய் சகடம்'

என இருக்கவேண்டும்.

258-ஆம் பாட்டின் 4-7-ஆம் அடிகள்,

' ஏந்துகோட் டியானைச் சேந்த னறந்தை
யரியரி லம்புக விளங்கோட்டு வேட்டை
நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்
அழிசி ஆர்க்கா டன்ன'

என்று காணப்படுகின்றன. இவற்றுள் 4-ஆம் அடியில்,

'சேந்த னறந்தை'

என்றிருப்பது,

'சேந்தன் றந்தை'

என்றிருக்கவேண்டும்.

'திதலை யெஃகிற் சேந்தன் றந்தை
தேங்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி' (நற். 190)

1. இது, 'குற்றின்' என்று இக்காலத்து வழங்குகின்றது.

என்னும் அடிகளால், சேந்தன்தந்தை அழிசி என்பது பெறப்படும். இக் குறுந்தொகைப் பாட்டினும், சேந்தன் றந்தை அழிசி என இயைதல் காண்க. நற்றிணைப் பாட்டின் அடியை, 'திதலை யெஃகிற் சேந்த னுறந்தை' எனப் பாடங்கொள்ளின்,

'வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்,
அரியலங் கள்ளி னார்க்கா டன்ன'

என்று முன்வரும் அடிகளோடு பொருள் பொருந்தாமை அறிக.

5-ஆம் அடியில்,

'அரியரி லம்புக விள '[1]

என்றிருப்பது,

'அரியலம் புகவின்'

என்றிருக்கத் தகுவதே. அரியல் = கள். [2]'அரியலங் கள்ளின் ஆர்க்கா டன்ன' (நற். 190) என்று, ஆர்க்காட்டிற்குக் கள்ளை அடையாகக் கூறியிருத்தல் காண்க. அரியலங் கள் = அரித்தெடுத்த கள். இப் பாட்டின் ஈற்றடியில்,

'தோழுதன கண்டே'

என்றிருப்பது,

'தோலைதல் கண்டே'

என்றிருத்தல் தகும். இப்போதுள்ள பாடத்தில், பொருள் இயைபின்மை யறிக.

298-ஆம் பாட்டின் 3-7-ஆம் அடிகள்,

'வைக ரேறு நிறம்பெயர்ந் துறையும்
வன்மைத னேக்க நினையாய் தோழி
இன்கடுங் களிற்றி னகுதை தந்தை
*       *       *
மடப்பிடிப் பரிசில் மான'

எனப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவை,

'வைக ரேறு நிலம்பெயர்ந் துறையுமவன்
பைத னேக்கம் நினையாய் தோழி
இன்கடுங் கள்ளி னகுதை தந்த
*       *       *
மடப்பிடிப் பரிசில் மான'




---

1. இவ்வடியின் பிற்பகுதி சரியாக விளங்கவில்லை.

2. 'அரியலங் கழனி யார்க்கா டன்ன' என்பது நற்றிணைப் புத்தகத்தில் பதிப்பித்துள்ள பாடம்.

என இருக்கவேண்டும் என்பது, ஒருகால் நோக்குவோர்க்கும் எளிதின் விளங்கக்கூடியதே. 'இன்கடுங் கள்ளி னகுதை' (அக. 76) என்று பரணர் பாடியிருப்பதையும் அறிக.

'பிறிதொன்று குறித்தவ னெடும்புற நிலையே'

என்னும் ஈற்றடி,

'பிறிதொன்று குறித்ததவ னெடும்புற நிலையே

என்றிருப்பின் சிறக்கும்.

328-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில்,

'குணில்வாய் முரசின்'

என்றிருப்பது,

'குணில்பாய் முரசின்'

என இருத்தல்வேண்டும். 'குணில்பாய் முரசின்' (புறம். 143) என வந்திருத்தல் காண்க.

6, 7-ஆம் அடிகள்,

'வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோ குறழனிலை கண்ட'

எனப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்குப் பொருள் பொருந்துவதில்லை. இவற்றின் உண்மையான பாடம் அறிதல் அரிதாயுளது.

அகநானூறு. இனி, அகநானூற்றில் கோக்கப்பட்டுள்ள பரணர் பாட்டுக்களை ஆராய்கின்றேன்:

62-ஆம் பாட்டின் 7-ஆம் அடியில், 'புணர்வு' என்றிருப்பது 'புணர்பு' என்று இருக்கத் தகுவது. அங்கன மிருந்தாலன்றி, 'தங்களிற் கூடியும் தனித்தும் அயலார் சொல்லுவன; புணர்ந்த காலத்து மேனியழகாலும் பிரிந்தகாலத்து மேனி வேறுபாட்டாலும் அறிவிக்க என்றுமாம்' என்று, உரையாசிரியர், இரண்டு பொருள் கூறுதல் அமையாமை அறிக.

122-ஆம் பாட்டின் முதலடி,

'இரும்பிழி மகாரிவ் வழுங்கன் மூதூர்'

என்று காணப்படுகின்றது. இஃது,

'இரும்பிழி மாரி யழுங்கன் மூதூர்'

என இருக்கத் தகுவது.

'அரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ்நிலாக் கான்று விசும்பின்'

எனக் காணும் 9, 10-ஆம் அடிகள்,

'அரவாய் ஞமலி மகிழாது மடியிற்
[1]பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்'

என இருக்க வேண்டுவன.

125-ஆம் பாட்டின் 3-ஆம் அடி,

'ஈர்ங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை'

எனப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. இஃது,

'இரங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை'

என இருப்பின் அமைதியாகும். 'இரங்கா முன்ன திரங்குகண்' (புறம். 276) என வந்திருத்தல் காண்க. அன்றியும், இப்பாடத்திற்கு, இவ்வடியிலும், மேலுள்ள அடிகளிலும், எதுகைத்தொடை நயம் அமையும்.

'அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
இரங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை'

என அமைதல் காண்க.

'கோளுறு குவளைப் போதுபிணி யவிழ'

எனக் காணும் 6-ஆம் அடியில்,

'தாதுறு குவளைப் போதுபிணி யவிழ'

எனக் காணும் பாடபேதமே சிறந்தது. இப் பாடபேதத்தில், எதுகைத்தொடை நயம் அமைவது காண்க.

142-ஆம் பாட்டின் 13-ஆம் அடியில், 'அதிகற் கோன்று' என்றிருப்பது, பதிப்பாளர் குறித்துள்ளவாறு, 'எயினற் கோன்று' என இருத்தலே அமையும்.

181-ஆம் பாட்டில் அந்வயமும் பொருட் பொருத்தமும் காண்டல் அரிதாயுளது. அப்பாட்டை இங்குத் தருகின்றேன்.

'துன்னருங் கானமுந் துணிதல் ஆற்றாய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயின்
என்னிலை யுரைமோ நெஞ்சே ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை

5. அடுபோர் மிஞிலி செருவிற் கூடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
வண்மை யெயினன் வீழ்ந்தென ஞாயிற்

---

1. இறையனாரகப்பொருளின் 30-ஆம் சூத்திரவுரையில் காட்டியிருக்கும் பாடம் காண்க,

என இருக்கவேண்டும் என்பது, ஒருகால் நோக்குவோர்க்கும் எளிதின் விளங்கக்கூடியதே. 'இன்கடுங் கள்ளி னகுதை' (அக. 76) என்று பரணர் பாடியிருப்பதையும் அறிக.

'பிறிதொன்று குறித்தவ னெடும்புற நிலையே'

என்னும் ஈற்றடி,

'பிறிதொன்று குறித்ததவ னெடும்புற நிலையே

என்றிருப்பின் சிறக்கும்.

328-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில்,

'குணில்வாய் முரசின்'

என்றிருப்பது,

'குணில்பாய் முரசின்'

என இருத்தல்வேண்டும். 'குணில்பாய் முரசின்' (புறம். 143) என வந்திருத்தல் காண்க.

6, 7-ஆம் அடிகள்,

'வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோ குறழனிலை கண்ட'

எனப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்குப் பொருள் பொருந்துவதில்லை. இவற்றின் உண்மையான பாடம் அறிதல் அரிதாயுளது.

அகநானூறு. இனி, அகநானூற்றில் கோக்கப்பட்டுள்ள பரணர் பாட்டுக்களை ஆராய்கின்றேன்:

62-ஆம் பாட்டின் 7-ஆம் அடியில், 'புணர்வு' என்றிருப்பது 'புணர்பு' என்று இருக்கத் தகுவது. அங்கன மிருந்தாலன்றி, 'தங்களிற் கூடியும் தனித்தும் அயலார் சொல்லுவன; புணர்ந்த காலத்து மேனியழகாலும் பிரிந்தகாலத்து மேனி வேறுபாட்டாலும் அறிவிக்க என்றுமாம்' என்று, உரையாசிரியர், இரண்டு பொருள் கூறுதல் அமையாமை அறிக.

122-ஆம் பாட்டின் முதலடி,

'இரும்பிழி மகாரிவ் வழுங்கன் மூதூர்'

என்று காணப்படுகின்றது. இஃது,

'இரும்பிழி மாரி யழுங்கன் மூதூர்'

என இருக்கத் தகுவது.

'அரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ்நிலாக் கான்று விசும்பின்'

எனக் காணும் 9, 10-ஆம் அடிகள்,

'அரவாய் ஞமலி மகிழாது மடியிற்
[1]பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்'

என இருக்க வேண்டுவன.

125-ஆம் பாட்டின் 3-ஆம் அடி,

'ஈங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை'

எனப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. இஃது,

'இரங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை'

என இருப்பின் அமைதியாகும். 'இரங்கா முன்ன திரங்குகண்' (புறம். 276) என வந்திருத்தல் காண்க. அன்றியும், இப்பாடத்திற்கு, இவ்வடியிலும், மேலுள்ள அடிகளிலும், எதுகைத்தொடை நயம் அமையும்.

'அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
இரங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை'

என அமைதல் காண்க.

'கோளுறு குவளைப் போதுபிணி யவிழ'

எனக் காணும் 6-ஆம் அடியில்,

'தாதுறு குவளைப் போதுபிணி யவிழ'

எனக் காணும் பாடபேதமே சிறந்தது. இப் பாடபேதத்தில், எதுகைத்தொடை நயம் அமைவது காண்க.

142-ஆம் பாட்டின் 13-ஆம் அடியில், 'அதிகற் கோன்று' என்றிருப்பது, பதிப்பாளர் குறித்துள்ளவாறு, 'எயினற் கோன்று' என இருத்தலே அமையும்.

181-ஆம் பாட்டில் அன்வயமும் பொருட் பொருத்தமும் காண்டல் அரிதாயுளது. அப்பாட்டை இங்குத் தருகின்றேன்.

'துன்னருங் கானமுந் துணித லாற்றாய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயின்
என்னிலை யுரைமோ நெஞ்சே ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
அடுபோர் மிஞிலி செருவிற் குடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
வண்மை யெயினன் வீழ்ந்தென ஞாயிற்

1. இறையனா ரகப்பொருளின் 30-ஆம் சூத்திரவுரையில் காட்டியிருக்கும் பாடம் காண்க.

றொண்கதி ருருப்பம் புதைய வோராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
விசும்பிடை தூர ஆடி மொசிந்துடன்
பூவிரி யகன்றுறைக் கணைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேரியாற் றயிர்கொண் டீண்டி
எக்கர் இட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்
ஞால நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வ
னால முற்றங் கவின்பெறத் தைஇப்
பொய்கை சூழ்ந்த பொழின்மண மகளிர்
கைசெய் பாவை துறைக்க ணிறுக்கும்
மகர நெற்றி வான்றோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்ட நாறும் வண்டட ரைம்பாற்
பணைத்தகைத் தடைஇய காண்பின் மென்றோள்
அணங்குசால் அரிவை யிருந்த
மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே.

இப் பாட்டில், 'எயினன் வீழ்ந்தென, ஞாயிற்றுருப்பம் புதையப் புள்ளின் பெருந்தோடு ஆடி, மொசிந்து, உடன் தைஇ என இயையும் எச்சங்களுக்குச் சரியான முடிபு காணப்படவில்லை. 'இறுக்கும்' (19-ஆம் அடி) என்பதை முடிபாகக் கொள்ளலாகாதோ எனின், அது, (18-ஆம் அடியில் உள்ள) மகளிர் தொழிலா யிருத்தலின், புள்ளின் தோட்டுக்குப் பயனிலையாதல் பொருந்தாது. நிற்க.

14-17-ஆம் அடிகளில், உள்ளதொடரை, 'வேந்தரின் நல்லிசையை யுடைய ஆலமுற்றம்' என இயைக்க வேண்டுவதா யுளது. வேந்தர் என்பது பொதுப்பெயராகலின், சிறப்புடையதாகாது. அன்றியும், 'நல்லிசையையுடைய நான்மறை முதுநூல் முக்கட் செல்வனது ஆலமுற்றம்' என இயைதலே பொருத்தமாகும். அங்கனம் இயையுங்கால், வேந்தர் என்பதற்கு ஏற்ற முடிபு இன்றாதல் காண்க.

17-ஆம் அடியில், 'கவின் பெறத் தைஇப்' என்றிருப்பது, 'கவின்பெறத் தைஇய' என இருத்தல் தகும். இங்கனம் பாடங் கொண்டால், 'பெருந்தோடு,[9] ஆடி, மோசிந்து, உடன்[10] கவின் பெறத் தைஇய[17] புகாஅர் நன்னாடு[22] எனவும், மகளிர்[18] பாவை துறைக்கண் இறுக்கும்[19] புகாஅர் நன்னாடு[22]' எனவும் இயையும்.

14-ஆம் அடியில், வேந்தர் என்பதன் உண்மையான பாடம் இஃது எனத் துணிய இயல வில்லை.

இனி, 'பாவைத் துறைக்க ணிறக்கும்' எனப் பாடங்கொண்டு, 'புள்ளின் பெருந்தோடு ஆடி, மொசிந்து, தைஇ, பாவையையுடைய துறைக்கண் இறக்கும்' என இயைத்தல் அமையும் என்ப.

7-ஆம் அடியில், 'வண்மை யெயினன்' என்பதற்குப் பாடாந்தரமாகக் கொடுக்கப்பட்டுள்ள, 'ஆஅ யெயினன்' என்னும் பாடம் கொள்ளத்தக்கதாகும். இவ் வரலாறு காணப்படுகின்ற மற்றைய பாட்டுக்களில்,

'கடும்பரிக் குதிரை ஆஅ யெயினன்' (அக. 148.)

என்றும்,

'வெளியன் வேண்மான் ஆஅ யெயினன்' (அக. 208.)

என்றும்,

'அஞ்சல் என்ற ஆஅ யெயினன்' (அக. 396.)

என்றும், ஆய் எயினன் என்றே கூறியிருத்தலை நோக்குக. அன்றியும், 'ஆஅ யெயினன் வீழ்ந்தென ஞாயிற்று' எனின், எதுகை நயமும் ஒருவாறு தோன்றும்.

18-ஆம் அடியிலும் பாடபேதமாகக் கொடுக்கப்பட்டிருக்கும் 'பொழின்மனை மகளிர்' என்னும் பாடம் ஏற்புடையதாகும். அது, 'பொழிலில் வீடுகட்டி விளையாடும் மகளிர்' என்று பொருள்படும். மணமகளிர் பொழிலிற் கைசெய்பாவையைத் துறைக்க ணிறக்கும் வழக்கம் அறியப்படவில்லை. அவ்வழக்கு உண்டேல், இப்பொழுதுள்ள பாடமே சிறப்பினதாகும்.

186-ஆம் பாட்டின் ஈற்றடியில்,

'கோழுநனுஞ் சாலும்'

என்றிருப்பது,

'கோழுநன் சாலும்'

என இருப்பிற் சாலும்.

198-ஆம் பாட்டின் 15-ஆம் அடியில்,

'கவிரம் பேரிய'

என்றிருப்பது,

'கவிரம் பெயரிய'

என இருத்தல்வேண்டும். பாடபேதத்திலும், 'பெயரிய' என்பது காணப்படுகின்றது.

226-ஆம் பாட்டின் 9-ஆம் அடியில்,

'வஞ்சி சாஅய'

என்று காணப்படுவது,

'வஞ்சி சாஅய்'

என்று இருத்தல் தகும்.

236-ஆம் பாட்டின் 6-ஆம் அடியில்,

'பனிபடு சாய்ப்புறம் பரிப்ப'

என்று காணப்படும் பாடத்திற்குப் பொருள் நன்கு அமைதல் இல்லை.

'பனிபடு காய்ப்புறம் வரிப்ப'

எனக்கொண்டால், 'நெற் சூட்டின் குளிர்ச்சியையுடைய காயினது புறத்தைக் கோலம் செய்யுமாறு மாவின்பூ தாவும்' என்னும் பொருள் வருதல் அறிக.

262-ஆம் பாட்டில் 3, 4-ஆம் அடிகள்,

'இடுமுறை நிரம்பி யாகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறு புக்கென'

என்று பதிப்பிக்கப்பட்டுள்ளன. இதற்கு அமைதியான பொருள் வருவதாகக் காணேம்.

'இடுமுறை நிரம்பி யாகு'

என்பது,

'இடுமுறை நிரம்பிய வரகு'

என்று இருக்கவேண்டும். 'இடுமுறை நிரப்பிய வீரிலை வரகின்' (நற். 121) என்று வந்திருத்தல் காண்க. இப்பாடத்திற்கு, 'பயறு புக்கென' என்றிருப்பது, 'பயிரா புக்கென' என்றிருப்பின் அமையும். வினை என்றிருப்பதன் உண்மை வடிவம் விளங்கவில்லை.

16, 17ஆம் அடிகளில்,

'பேகன், கோண்டகன் மாமலை'

என்றிருக்கும் பாடம்,

'பேகன், கோண்டன் மாமலை'

என இருத்தல் தகும். இஃது, இப்போதுள்ள பாடத்தினும் பொருட்சிறப்பினதாதல் அறிக.

266-ஆம் பாட்டில்,

'வாய்வா ளெவ்வி யேவன் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் போருந்தில
ரரிமண வாயி லுறத்தூ ராங்கண்'

என்னும் 11, 12, 13-ஆம் அடிகள் அமைதியான பொருள்தருவனவாகக் காணேம். இவ்வடிகளில், 'மேவார்' என்பது, 'மேவர' எனவும், 'போருந்தில ரரிமண வாயில்' என்பது, 'பெருந்திற லரிமண வாயில்' எனவும் இருக்கவேண்டுவன. அங்கனமாயின்,

'வாய்வாள் எவ்வி ஏவன் மேவர
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பெருந்திறல்
அரிமண வாயி லுறத்தூ ராங்கண்'

என்று அமைந்து செவ்வனே பொருள்பட்டு, வரலாற்றையும் விளக்கும். பசும்பூட் பெருந்திறல் என்பது, [1]தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் குறிப்பதாதலானும், அவன் எவ்வியினது மிழலைக்கூற்றத்தைக் கைக்கொண்டான் (புறம். 24) என அறியப்படுதலானும், ஈண்டு, தனது ஏவலை மேவரும்படி எவ்வியினது நெடுமிடலைச் சாய்த்த பசும்பூட் பெருந்திறல் என்று பொருள் கொள்ளுதலே வரலாற்றோடு அமைவுடையதாகும். இவ்வாறன்றி, மேவார் என்பதுவே பாடமாகக் கொண்டு, எவ்வியின் ஏவல்மேவாரது மிடலைச்சாய்த்த பசும்பூட் பெருந்திறல் எனப் பொருள் கொள்ளுதல் சிறப்புடையதன்று.

356-ஆம் பாட்டின் 19-ஆம் அடி,

'நன்ன ஞஅய்பிரம் பன்ன'

என எழுத்துப்பிழை காண்கின்றது. அது,

'நன்ன ஞஅய்பிரம் பன்ன'

என்று இருக்கத் தகுவது.

372-ஆம் பாட்டின் 14-16-ஆம் அடிகள்,

'தேம்பினை வாழியெ னெஞ்சே வேந்தர்
கோண்டணி யெயிலிற் காப்புச்சிறந்
தீண்டருங் குரையணம் மணங்கி யோளே'

என்று காணப்படுகின்றன. இவற்றுள்,

'கோண்டணி யெயிலிற் காப்புச்சிறந்து'

என்னும் அடி,

'கோண்டணி யெயிலிற் காப்புச்சிறந்து'

என்று இருந்தால், பொருள் சிறப்பதோடு எதுகைநயமும் தோன்றும்.

376-ஆம் பாட்டின் 18-ஆம் அடியில், 'மாந்தை' என்று பதிப்பித்து, 'இறையனர் களவியற்பாடல்களான் மாந்தையென்றே தெரிகின்றது காண்க' என்று கீழ்க்குறிப்பு எழுதியிருக்கின்றனராயினும், 'மாந்தை' என்பது சரியெனத் தோன்றவில்லை. மரந்தை என்பதுவே பாடமாதல்வேண்டும். அவ்வாறாயின்,

'குரங்குளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை யன்னவென் னலந்தந்து சென்மே'

என்று அமைந்து, எதுகைத்தொடை நயம் சிறக்கும்.

---

1. இந்நூலின் ஐந்தாம் அத்யாயம் பார்க்க.

பண்டைக்காலத்துப் பாட்டுக்களில் எதுகை மோனைகளின் நயங்கள் காணப்படுவன அல்ல. ஆதலின், எதுகையின்பொருட்டுப் பாடம் திருத்துதல் தகாததாகும் எனின், அங்ஙனம் அன்று: பிற்காலத்துச் செய்யுட்களில் வருதல்போல, பண்டைக்காலத்துச் செய்யுட்களில் எதுகை அமைந்திராவிடினும், பெரும்பாலும் எதுகை நயமோ, அன்றி, மோனைநயமோ அமைந்திருத்தல் காணலாம். பரணர் பாட்டுக்களும் இவ் விலக்கணத்தனவே. உதாரணமாக, இப்பாட்டையே எடுத்துக்கொண்டு நோக்கினும், யான் கூறுவது வலியுறும். இதனை ஈண்டு விரிப்பின் பெருகும். ஆயின், 'இறையனாரகப் பொருளுரை'யின் உதாரணப் பாட்டுக்களில் மாந்தை என்று காண்கின்றதே எனின், அதுவும்[1] தவறாக நேர்ந்ததேயா மென்க.

'மாந்தையிலே வாழும் மகுடத் தியாகியுனக்கு.........பார்'

என்னும் பாட்டிற் குறிக்கப்பட்டுள்ள ஊர், குட்டுவனூராகிய மரந்தை யன்று. இப்பாட்டும், இப்பாட்டைக் குறித்து வழங்கும் கதையும் பிற்காலத்தன என்றொழிக்க.

இவ்வாறே இந் நூலில் (அகநானூற்றில்) பிறர் பாட்டுக்களிலும் காணப்படும் தவறுகள் சில வுள. ஆயினும், ஒடிந்தும் சிதைந்தும் பிழைபட்டும் பலவாறாகக் கிடக்கும் பழைய ஏடுகளைப் பரிசோதித்து, உண்மையான பாடங் கண்டறிந்து பதிப்பித்தலில் சில பிழைபாடுகள் காணப்படுதல் பெரும்பிழையாகக் கருதலாகாது. ஆதலின், இத்தகைய அருஞ்செயலை யாற்றும் பேரறிஞரை நாம் உளமாரப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

---

1. இறையனாரகப்பொருளுரையில் காட்டப்பட்டுள்ள கலித்துறைகளுள், மாந்தை என வந்துள்ள பாட்டுக்கள் மூன்று. அவை :

'ஆரும் அணியிளம் போந்தையும் வேம்பும் அலர்ந்துமந்தேன்
வாருங் கமழ்கண்ணி வானவன் மாறன்றன் மாந்தையன்னாய்'

'மன்னேந் தியபுகழ் வானெடு மாறன்றன் மாந்தையன்ன'

'வானலங் கொண்டகை யான்மன்னன் மாறன்றன் மாந்தையன்னாள்'

என்பன. இப்பாட்டுக்களில், மரந்தையை மாந்தை எனக் கொண்டதனால், தலைவன் பெயர்க்கும் ஊர்ப்பெயர்க்கும் இடையே தன் என்னும் சாரியை சேர்க்கவேண்டுவதாயிற்று. மரந்தை என்பதுவே பாடமாகக் கொள்ளின், தன் என்னும் சாரியை வேண்டாமை அறிக. 'மாறன் மரந்தையன்னாய்', 'மாறன் மரந்தையன்ன', 'மாறன் மரந்தையன்னாள்' எனப் பாடம் நன்கமைதல் காண்க. இறையனாரகப்பொருளுரையில் காட்டப்பட்டுள்ள கலித்துறைகளில், மாந்தை என எதுகைத்தொடையில் வந்திலாமை அறியத்தக்கது. பரணர் பாட்டில், மரந்தை என்பது எதுகைத் தொடையில் அமைந்துளது. இவற்றால், மரந்தை என்பதுவே உண்மையானது எனல் தெளிவாகும்.

இனி, புறநானூற்றுச் செய்யுட்களை[1] ஆராய்கின்றேன்.

இந்நூலின் பதிப்பினதருமையை மேலேயே கூறியுள்ளேன்.

புறநானூறு. புறநானூற்றில் வந்துள்ள பரணர் பாட்டுக்கள் பதின்மூன்றனுள், 6-பாட்டுக்களுக்கு மட்டுமே பழைய உரை யுளது; மற்றைய ஏழு பாட்டுக்களுக்கும் உரை இல்லை. அவற்றுட் சில பாட்டுக்கள், அடிகள் பல சிதைந்தும் குறைந்தும் பாடபேதங்கள் பல்கியும் காணப்படுதலின், அவற்றின் திருத்தமான பாடங் கண்டறிந்து பதிப்பித்தது அரிதேயாகும். ஆயினும், இன்னும் சில திருத்தங்கள் ஊகித்து அறிந்துகொள்ளத் தக்கனவாயுள்ளன. அவற்றை இங்குக் குறிக்கின்றேன் :

336-ஆம் பாட்டில்,

'களிறு கடிமரம் சேரா சேர்ந்த'

எனப் பதிப்பிக்கப்பட்டிருக்கும் 4-ஆம் அடியில்,

'களிறும் கடிமரம் சேரா சேர்ந்த'

என்று, உம்மை யிருப்பின் பொருள் சிறக்கும்.

'வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே
கடவன கழிப்பிவள் தந்தையும் செய்யான்'

என்னும் முதலிரண்டடிகளையும்,

'ஒளிறுவேன் மறவரும் வாய்மூழ்த் தனரே'

என்னும் ஐந்தாமடியையும் நோக்கின், இந் நான்காமடியும்

'களிறும் கடிமரம் சேரா சேர்ந்த'

என்று உம்மை பெற்றே இருக்கவேண்டும் என்பது புலனாகும். ஆகவே, இப்பாட்டின்முதல் 5-அடிகள்,

'வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே
கடவன கழிப்பிவள் தந்தையும் செய்யான்
ஒளிறுமுகத் தேந்திய வீங்குதோடி மருப்பிற்
களிறும் கடிமரம் சேரா சேர்ந்த
ஒளிறுவேன் மறவரும் வாய்மூழ்த் தனரே'

என அமைந்து, பொருள் சிறக்கும்.

---

1. 141-ஆம் பாடலின் 7-ஆம் அடி,

'வெல்வே லண்ணற் காணு ஆங்கே'

என்று பதிப்பிக்கப்பட்டுளது. பாடபேதமாகக் கொடுக்கப்பட் டுள்ள 'வென்வே லண்ணல்' என்னும் பாடமே சிறப்புடையதாகும். 'வென்றி வேலை யுடைய' என்று உரையாசிரியர் எழுதியுள்ள பொருளை நோக்குக.

348-ஆம் பாட்டின் முதலிற் சில அடிகள் பொருள் விளங்கா வாறு பிழைபட்டிருக்கின்றன. இவற்றின் உண்மை காண்டல் எளிதன்று. ஆயினும்,

'வருந்தின மன்னெம் பெருந்துறை மரனே'

என்று காணப்படும் 10-ஆம் அடி,

'வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே'

என இருந்தால்தான் பொருள் அமைவுறும். 'வருதல்மனனே' எனக் காணப்படும் பாடபேதமும் இவ்வூகத்திற்குத் துணைபுரிவ தாகும். அவ்வாறாயின்,

'குவளை யுண்க ணிவளைத் தாயே
ஈனு ளாயின ளாயி னுனது
நிழறொறும் நெடுந்தேர் நிற்ப வயின்றொறும்
செந்நுதல் யானை பிணிப்ப
வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே'

எனப் பாடம் அமைந்து, 'இவளைத் தாய் ஈனுளாயின், மரன் வருந் தல' எனப்பொருள் தந்து சிறக்கும். இப்போதுள்ள பாடத்தின் படி, 'இவளைத் தாய் பெருளாயின் மரன் வருந்தின' என முடிந்து, பொருள் அமையாமை அறிக.

354-ஆம் பாட்டின் முதலிரண்டடிகள்,

'அரசுதலை வரினு மடங்க லானு
நிரைகா ழெஃக நீரின் மூழ்க'

எனப் பதிப்பிக்கப் பட்டுள்ளன. இப் பாடத்திற்குச் சிறந்த பொருள் அமைவதாகக் காணேம். இதில், 2-ஆம் அடியில்,

'னிரைகா ழெஃகம்'

என, னகாரம் இருத்தல் வேண்டும். அவ்வாறாயின்,

'அரசுதலை வரினு மடங்க லானு
னிரைகா ழெஃகம் நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை ஒய்யும்
ஊர்கவி னிழப்பவும் வருவது கொல்லோ'

என அமைந்து, 'இப்பெண்ணை விரும்பி, அரசன் போர்புரிதலை மேற்கொண்டு வந்தாலும், அவன் மடங்குதல் அமையான்; இவள் தந்தையோ தான் பொருதற்குத் தக்கவர் வந்தனர் எனக்கொண்டு, அவ் வரசன் முதலியோரைப் பெயர்த்து விடுவான். இவற்றால்,

இவ்வூர், அழகு கெட்டழியும்படி நேரும் போலும்!' என்று இரங்கியவாறாய்ப் பொருள் தந்து சிறக்கும். ணகார நகாரங்கள் வேறுபாடு அறிய முடியாதபடி ஏடுகளில் எழுதப்பட்டிருத்தலும் இயல்பே.

**பொருள் விளங்காவாறு பிழைபட்டுள்ள பாட்டுக்கள்.**

இதுகாறும் பரணர்பாட்டுக்களில் காணப்படும் தவறான பாடங்களை எடுத்துக்காட்டி, அவற்றிற்குச் சரியான பாடங்களையும் இயன்றவளவில் ஆராய்ந்தேன். அவற்றுட் சில பாட்டுக்களில், பொருள் விளங்காவண்ணம் பிழை மலிந்துள்ளன என்பதையும் ஆங்காங்குக் குறித்தேன். ஆயினும், பொருள் விளங்காவண்ணம் பிழைபட்டுள்ள பாட்டுக்களை ஒருசேர ஈண்டுத் தருகின்றேன். இவற்றிற் சில, இனி ஊகத்தால் திருத்தமுறுதலும் கூடும்; சில பாட்டுக்கள், வேறு ஏடுகளின் உதவியின்றித் திருத்தமடைவன அல்ல.

## பொருள் விளங்காத பாட்டுக்கள்.

நற்றிணையில், 265-ஆம் பாட்டின் ஒரு பகுதி.
,, 270-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில் முற்பகுதி.
குறுந்தொகையில், 258-ஆம் பாட்டின் 5-ஆம் அடியில் பிற்பகுதி.
அகநானூற்றில், 226-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில் ஒரு சொல்.
,, ,, 4-ஆம் அடியில் ஒரு சீர்.
புறநானூற்றில் 348-ஆம் பாட்டின் முற்பகுதி.

இவையேயன்றி, புறநானூற்றில் 341, 352 இவ் விரண்டுபாட்டுக்களில் சில பல அடிகள் காணப்படாமையின், பாட்டின் முழுப்பொருள் தெரிதல் இல்லை. ஆயினும், அப்பாட்டுகளிற் கிடைத்துள்ள அடிகளுக்குப் பொருள்விளங்குகின்றது.

**பரணர் பாட்டுக்களும் பழைய வுரைகளும்.**

பரணர் பாட்டுக்களுள், பதிற்றுப்பத்திலுள்ள பத்துப் பாட்டுக்களுக்கும், புறநானூற்றுப் பாட்டுக்களுள் 6-பாட்டுக்களுக்கும், அகநானூற்றுப் பாட்டுக்களுள் 3-பாட்டுக்களுக்கும் பழையவுரைகள் உள்ளன. இவ்வுரைகளுள், புறநானூற்றின் உரை-பொழிப்புரையும் விளக்கவுரையுமாக அமைந்து, பொருளை நன்கு விளக்கிச் செல்வது; ஏனைய இரண்டு நூல்களுக்கும் உள்ள வுரைகள் குறிப்புரைகளாகும். அவற்றுள்ளும் பதிற்றுப்பத்திற்கு எழுதப்பட்டுள்ள உரை, பாட்டில் கருதப்பட்ட பொருளையும் கருத்தினையும், சிலவிடங்களில் நன்கு விளக்குதல் இல்லை; அன்றியும், பலவிடங்களில் முடிபு காட்டுதலும் இல்லை. ஆயினும், அவ்வுரை இல்லாவிடின், பல அருஞ்சொற்களுக்கு இக்காலத்திற் பொருள் விளங்குதல் அரிது என்றல் உண்மையே.

---

## IV

இனி, பாணர் செய்தனவாக வழங்கும் பிற சிறு நூல்களைப்பற்றி ஆராய்கின்றேன்: இவர் பாடியவை என்று பதினொன்றாந் திருமுறையில் ஓர் அந்தாதியும், பன்னிருபாட்டியல் என்னும் நூலில் பல சூத்திரங்களும் காணப்படுகின்றன. இவற்றுள், திருமுறையிற் காணும் சிவபெருமான் திருவந்தாதியைச் செய்தவர் பரணதேவநாயனர் என்னும் பெயரால் வழங்கப்படுகின்றார். இவர், கடவுள் பொருளாகப் பாடியதனால் சிறப்புப்பற்றி, தேவ நாயனர் என்னும் சிறப்புப்பெயருடன் வழங்கப்பட்டனர் எனக் கூறுகின்றனர்; இவ்வாறே கபிலதேவநாயனர், நக்கீரதேவநாயனர் என வழங்குதலையும் ஒப்பிடுகின்றனர். ஆயினும், இவ் வந்தாதியைப் பாடியவர், கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் முதலியோரைப் பாடிய பரணரோ, பிறரொருவரோ என்பதை ஆராய்தல் இன்றியமையாத தாகும். ஆதலின், முதற்கண் இவ் வந்தாதியை எடுத்துக் கொள்கின்றேன்:

பாணர் பாடியவை என வழங்கும் பிற நூல்கள்.

பதினொன்றாந் திருமுறையிலுள்ள சிவபெருமான் திருவந்தாதி பரணராற் பாடப்பட்டதோ, அன்றோ என்னும் செய்தியை அறுதியிடுதற்கு, அந் நூலையே துணையாகக்கொண்டு ஆராய்தல் அமையும். அந் நூல், நூறு செய்யுட்களும் அந்தாதித்தொடராக அமைந்ததொரு பிரபந்தம்; சிலபாட்டுக்களில் சில அடிகள் இறந்துபட்டன ஒழிய, மற்றவை எல்லாம் உள்ளன. அவ் வந்தாதியிலுள்ள [1]பாட்டுக்களில், முன்னிரண்டடிகளில் ஓர் யமகமும், பின்னிரண்டடிகளில் வேறோர் யமகமும் அமைந்திருக்கின்றன. ஆனால், பலபாட்டுக்களில், சொற்கள் யமகத்துக்குரியவாறு வேறு வேறாகப் பிரிதலும், வேறு வேறு பொருள் தருதலும் இல்லை.

பரணரும் சிவபெருமான் திருவந்தாதியும்.

இவ்வாறு யமகமாகப் பாடப்பட்ட பாட்டுக்கள் சங்ககாலத்தில் இருந்தன எனத் தெரியவில்லை. அன்றியும், தமிழ்மொழியில் ஒவ்வொருவகைப் பிரபந்தங்களும் ஒவ்வொருகாலத்தில் உண்டானவையே என்பது கற்றோர் யாவரும் அறிவர். அவ்வாறே யமகம்

---

1. 7, 17, 18, 32, 35, 43, 58. இப்பாட்டுக்களில் யமகம் சிறப்பாக அமைந்திலது.

முதலிய ஒவ்வொருவகை அணிகளமைந்த பாட்டுக்களும் ஒவ்வொரு காலத்துத் தோன்றியனவே. முற்காலத்தில், மாலைமாற்று, ஏகபாதம், எழுகூற்றிருக்கை போன்ற நூல்கள் இல்லை என்பது மறுக்க வொண்ணாதது. அவ்வாறே யமகம் அமைந்த பாட்டுக்களையுடைய நூலும் இல்லை. அக்காலத்துப்பாட்டுக்களில் வடசொற்கள் மிக்குக் காணப்படா; தமிழ்மொழியிலும் வினைச்சொற்களின் வடிவங்கள், பிற்கால வழக்கிற்குப் பெரும்பாலும் மாறுபட்டனவே. அவற்றை யெல்லாம் ஆராய்ந்தால், இவ்வந்தாதி எக் காலத்ததாகும் என்பதை நாம் எளிதில் அறியக்கூடும்.

சிவபெருமான் திருவந்தாதியில் வந்துள்ள வடசொற்கள் மிகப் பல. பரணர் பாட்டுக்களாயுள்ள பழைய பாட்டுக்களிற் காணும் வடசொற்களின் தொகை [1]முன்னர்க் காட்டுமாற்றான் விளங்குவதாகும். இப்பிரபந்தத்துட் காணும் [2]வடசொற்களை ஈண்டுக் குறிக்கின்றேன் :

பா.

2 இடபம்—ஏறு,
ஏழு ஸ்வரங்களுள் ஒன்று (இருஷப)
மந்தாரம்—ஒருமலை (மந்தர)
நாகம்—பாம்பு (நாக)
சடை—(ஜடா)
4 நின்மலன்—(நிர்மல)
5 ஈசன்—(ஈஶ)
புண்ணியன்—(புண்ய)
6. தவளம்—(தவல)
சங்கரன்—(ஶங்கர)
7 தத்துவம்—(தத்வ)
ஆதி—(ஆதி)
அண்டம்—உலகம் (அண்ட)
8 பிச்சை—(பிக்ஷா)
10 வண்ணன்—(வர்ண)
11 மாணி—(மாணவக)

பா.

11 அமுதம், 68 அமிர்தம் }—(அம்ருத)
12 கவாலி—(கபாலிந்)
கங்கை—(கங்கா)
13 புரம்—புர
சேவகன்—(ஸேவக ?)
கயிலை—(கைலாஸ)
15 பாசுபதம்—(பாஶுபத)
17 பாதம்—(பாத)
பரம்—பர
18 பாகம்—(பா்க)
உரு—(ரூப)
19 சங்கம்—(ஸங்க)
30 சங்கு—ஶங்க
20 காமன்—(காம)
21 கங்காளவேடன்—(கங்கால வேஷ)
22 ஏகம்பம்—(ஏகாம்ரம் ?)

1. இந்நூலில் எட்டாம் அத்யாயத்துக் காண்க.

2. ஊர்ப்பெயர், இயற்பெயர்களாகக் காணும் வடசொற்கள் ஈண்டுக் குறிக்கப்படவில்லை. ஈண்டுக் குறித்துள்ள சொற்களுட் சில, பலமுறை வந்துள்ளன. நீர் (தண்ணீர்) என்னும் சொல்லும், மணி என்னும் சொல்லும் ஈண்டு எழுதப்படவில்லை.

பா.

23 அயன்—(அஜ)
25 தேவர்—(தேவ)
26 நட்டம்—(ந்ருத்த)
31 அங்கம்—வேதாங்கம்,
87 உடல் (அங்க)
30 தூரந்தரன்—(துரந்தர)
31 வேதம்—(வேத)
32 நயனம்—(நயந)
சக்கரம்—(சக்ர)
பரன்—(பர)
33 சலந்தரன்—(ஜலந்தர)
35 கடம்—(கட)
37 தசமுகன்—(தஶமுக)
38 மதி—(மதி)
39 ஆலம்—(ஹாலாஹல)
40 வீரட்ட(த்தான்)—(வீராஷ்ட)
41 மத்தம்—(உன்மத்த)
44 கமலம்—கமல
சேமம்—(க்ஷேம)
45 பூதப்[படை]—(பூத)
46 விடம்—(விஷ)
47 ஞானம்—(ஜ்ஞாந)
*காலம்—(கால)
48 அமரர்—(அமர)
விடை—(வ்ருஷப)
49 கரு—(கர்ப)
50 குணம்—(குண)
51 சூலம்—(ஶூல)
52 [ஆறு] சமயம்—(ஸமய)
53 பண்டரங்கர்—(பாண்டரங்க)
54 சிவலோகா—(ஶிவலோக)
55 மாகாளா—(மஹாகால)
56 உரகம்—(உரக)
58 சோதி—(ஜ்யோதிஸ்)

பா.

60 பாசமலம்—(பாஶமல)
பரமேட்டி—(பரமேஷ்டிந்)
61 சிரம்—(ஶிரஸ்)
62 அரன்—(ஹர)
கரி—(கரிந்)
63 நாமம்—(நாமந்)
68 சிவம்—(ஶிவ)
69 சிவன்—(ஶிவ)
அந்தம்—(அந்த)
கதி—(கதி)
71 சிந்தை—(சிந்தா)
73 *உலகு—(லோக)
கங்காளர்—(கங்கால)
77 படநாகம்—(ஸ்ப்படாநாக)
பரலோகர்—(பரலோக)
78 பரம்—(பர)
79 நீதி—நீதி
80 சித்தம்—சித்த
நிமலா—(நிர்மல)
கண்ட(த்தாய்)—(கண்ட்ட)
82 [நான்] முகன்—[சதுர்] (முக)
83 கதநாகம்—க்ஷுதநாக)
87 மூலட்டம்—(மூலஸ்த்த)
பாவம்—(பாவ)
88 திசை—(திஶா)
ஆகாசம்—(ஆகாஶ)
பாதாளம்—(பாதால)
அங்கி—(அக்நி)
89 மூலம்—மூல
95 பலி—(பலி)
பரஞ்சோதி—(பரஞ்ஜ்யோதி)
98 * பவளம்—(ப்ரவால)

அந்தாதி—(அந்தாதி)
கோடி—

* இக்குறியிட்டுள்ளவை தமிழ்ச்சொற்கள் என்ப.

என்னும் சொற்கள் வந்துள்ளன. யமகப்பொருளை நோக்கின், இன்னும் சில சொற்கள் சேரலாம். கடவுள் பொருளாகப் பாடிய பாட்டுக்களாகலின், வடசொற்கள் மிக்குவரலாயின என்று கூறுவர். அக்கூற்று உண்மையாகலாமாயினும், பாதம், சங்கம், நயனம், விடம், உரகம், சோதி, சிரம், கரி, ஆகாசம் என்பன போன்ற சொற்கள் பல வருதற்கு நியாயமில்லை. அன்றியும், வடமொழி முதனிலைகளினின்று பிறந்த வினைச்சொற்கள் இந்நூலுள் வந்துள்ளன; அவை: அர்ச்சித்து (11), சிந்திக்க (64), சிந்திமின (70) என்பனவாம். இன்னும், வடமொழிப் பெயர்ச்சொற்களின் மேல், தமிழ் விகுதிகளைப் புணர்த்த சொற்களும் வந்துள்ளன. சித்தத்தீர் (71; 91), கங்காளீர் (73), பரலோகீர் (77) என்பன காண்க.

பிற்கால நூல்களில் அருகி வழங்கும் சொற்கள், (வேரீஇ, மரீஇ என்பன போன்றவை) பரணர் பாட்டுக்களிற் பயின்று வந்திருத்தலை [1]முன்னர் எடுத்தெழுதுவேன். அவைபோன்ற சொற்களுள் ஒன்றேனும் இந் நூறுபாட்டுக்களிலுங் காணப்படவில்லை. அன்றியும், வினைச்சொற்கள், செய்கின்ற, செய்கின்றேம் என்பன போன்ற வடிவங்களில் பழைய பாட்டுக்களுட் காணப்படவேயில்லை என்பதும், நிகழ்கால வினைச்சொற்கள், இப்போது வழங்கிவரும் வடிவங்களில் வழங்கத்தொடங்கினது, பரணர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரே என்பதும், தமிழ்மொழி பயின்றவர் நன்கு அறிவர். இப் பிரபந்தத்தில், மேவுகின்ற (53), சேர்கின்ற (59, 71, 84, 89, 91, 99) ஊர்கின்ற (84) என்னும் எச்சச் சொற்களும், தழைக்கினரூர் (52), சேர்கின்றேம் (99) என்னும் முற்றுச் சொற்களும் வந்துள்ளன. நிகழ் காலத்தில் இவ்வாறு வந்துள்ள வினைச்சொற்கள் பண்டைக்காலத்துப் பாட்டுக்களுள் ஓரிடத்தும் காண்டல் இல்லை. கேட்டருளும் (31) என்பது போன்ற சொற்களும் பண்டை நூல்களில் வந்தில. இவை நிற்க.

பரணர் பாட்டுக்களில் மகளிர் கொங்கையைக் கூறுமிடத்து, வார் என்னும் அடைமொழி யாண்டும் வந்திலது. [2]'வாரணிந்த

---

1. எட்டாம் அத்யாயத்தில் சொல்லாராய்ச்சியுட் காண்க.

2. 'ஆகத் தரும்பிய சுணங்கும் வம்புடைக்
கண்ணுருத் தெழுதரு முலையும் நோக்கி' (அகம். 150)

என்னுமிடத்து, வம்பு என்பது, வார் என்னும் பொருளதன்றுதல் அறிக.

'வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும்' (அகம். 361)

என்னுமிடத்து, வார் என்னும் சொல் வந்துளதாயினும், ஆண்டும், அதற்கு, 'வார்தல் . . . . நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள' (தொல். உரி: 21) என்னும் சூத்திரத்திற் கேற்பப் பொருள்கூறுதலே அமைதி என அறிக.

கொங்கை' (54) என்று கூறும் வழக்குப் பழைய பாட்டுக்களிலும் காண்டலரிது. பண்டைப் புலவர்கள் பாடியுள்ள பாட்டுக்கள் இரண்டாயிரத்தினும் மேற்பட்டவை யுள்ளன. பெரும் புலவர் பலரால் இயற்றப்பட்ட இவ் வீராயிரத்தின் மேற்பட்ட பாட்டுக்களிலும் அரிதாகிய வழக்கு இவ்வந்தாதியுட் காணப்படுதலே, இது, பிற்காலத்தில் தோன்றியது என்பதைத் தெளிவாக விளக்குமன்றே! அன்றியும்,

'மலையார் கலையோட வாரோடக் கொங்கை
மலையார் கலைபோய்மா லானுள்' (43)

என்னும் அடிகளில், இறைவன்மேல் மாலுற்ற மடந்தை வாரோடக் கலைபோய் மாலடைந்தாள் எனக் கூறப்பட்டுளது. ஏனைய அகப்பொருட்பாட்டுக்களில், தலைவன்மேல் காதல் கொண்ட தலைவியின் நிலைமை, யாண்டும் இவ்வாறு கூறப்படவில்லை. அன்றியும், பழைய பாட்டுக்களில், கொங்கைக்கு மலை உவமமாக யாண்டும் வந்திலது. இவ்வழக்குக்களெல்லாம், பிற்காலத்துப் பிரபந்தங்களிலேயே வந்துள்ளன. இவற்றாலும் இந்நூல் பண்டைப்புலவராகிய பரணர் பாடியதன்று என்பது தேற்றம்.

மேலும், இந் நூலுட் கூறப்பட்டுள்ள புராணக்கதைகள் பல. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய இத் தொகைநூல்களுள் இத்தகைய கதைகள் வந்தில; அவற்றினும் பிற்காலத்தது என்று சிலர் கருதுகின்ற கலித்தொகையிலும் சிலவே வந்துள்ளன.

இவற்றை யெல்லாம் ஆராய்ந்து பார்க்கின், இந்நூல், தேவாரம் பாடியருளிய நாயன்மார் மூவருக்கும் பிற்பட்டகாலத்தில் இருந்த அடியார் ஒருவரால் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகும். அவரது பெயரும் பரணர் என்றிருந்திருக்கலாம். இந்நூலாசிரியர், சிறந்த பத்தி யுடையவர் என்பதில் ஐயம் இல்லை; அதுவே அவரைப் புகழ்ந்து பாராட்டுதற்குச் சால்வதாகும். அதை விட்டு, பண்டைப்புலவராகிய பரணர் பேரில் இந்நூலை ஏற்றி வைத்தலில் பயன் என்னே! இவ்வாறே, கபிலர், நக்கீரர் என்பவர் பாடியனவாகப் பதினொன்றாந் திருமுறையிற் காணும் பிரபந்தங்களும் அவர்களால் செய்யப்பட்டன அல்ல என்பது [1]அவரவர் வரலாற்றுள் விரிவாகக் காட்டப்படும்.

---

1. கபிலர் பாடிய பாட்டுக்களைப் பற்றியது—யான் எழுதியுள்ள கபிலர் வரலாறு என்னும் ஆராய்ச்சிநூலிற் காணலாம்.

பரணரும் பன்னிரு பாட்டியலும்.

இனி, பன்னிருபாட்டியல் என்னும் நூலுட் காணப்படும் பரணர் சூத்திரங்களை ஆராய்கின்றேன்: இந் நூல், செந்தமிழ்ப் பத்திராதிபரா யிருந்த மஹாவித்வான் ஸ்ரீ மத். ரா. ராகவையங்காரவர்களால் செந்தமிழ் வெளியீடாக வெளிவந்தது. இஃது, எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்னும் மூன்று பிரிவுகளை யுடையது. நூலின் முதலில், 'சங்கத்துச் சான்றோர் இயற்றிய பன்னிருபாட்டியல்' என்று குறிக்கப்பட்டுளது. இந் நூலினுள்ள சூத்திரங்கள் 189. இவற்றைச் செய்த ஆசிரியர் பன்னிருவர். அவர்,

| | | | |
|---|---|---|---|
| 1. | பொய்கையார் | 7. | சேந்தம்பூதனர் |
| 2. | பரணர் | 8. | கோவூர்கிழார் |
| 3. | இந்திரகாளியர் | 9. | மாபூதனர் |
| 4. | அவிநயனர் | 10. | சீத்தலையார் |
| 5. | கல்லாடனர் | 11. | பல்காயனர் |
| 6. | கபிலர் | 12. | பெருங்குன்றூர்கிழார் |

என்பவராவர்.

இவர்கள் சூத்திரங்களே யன்றி, அகஸ்தியர்பாட்டியலிலிருந்தும் இரண்டு சூத்திரங்கள், இதில் குறிக்கப்பட்டுள்ளன. இதனால், 'பாட்டியல்' என்னும் ஓர் இலக்கணநூலும் அகத்தியர் செய்துள்ளார் என அறியப்படுகின்றது. இந்நூலுட் காணப்படும் சூத்திரங்களெல்லாம் மேற்குறித்த புலவர் செய்தவைதாமோ, அல்லவோ என ஆராய்தல் ஈண்டு எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளன்றாயினும், பரணர்சூத்திரங்களை ஆராயுந்துணையானே பிறவற்றின் உண்மையும் விளங்குவதாகும். இனி, பரணர் பாடியனவாகக் காணப்படும் சூத்திரங்களைக் காண்கின்றேன்:

இப்பாட்டியலில், பரணர் பாடியனவாகக் காணப்படுஞ் சூத்திரங்கள் முப்பத்தேழு. அவையாவன:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | வருண எழுத்துக்களைக் கூறும் சூத்திரம் | | | | ... | 8 |
| 2. | கதி | ,, | ,, | ,, | ... | 3 |
| 3. | உண்டி | ,, | ,, | ,, | ... | 6 |
| 4. | புள் | ,, | ,, | ,, | ... | 2 |
| 5. | மங்கலச் சொல்லைக் | | ,, | ,, | ... | 1 |
| 6. | பிள்ளைப்பாட்டிலக்கணம் | | | ,, | ... | 17 |
| | | | | | ஆக. | 37. |

1. இன்ன இன்ன எழுத்துக்கள் இன்ன இன்ன வருணங்களுக்கு உரியன; அவ்வெழுத்துகளைப் படைத்தவர் இவர் இவர் என்னும் செய்திகள், வருணம் என்னும் தலைப்பின்கீழ்க் காண்கின்றன.

ஒவ்வொரு வருணத்துக்கும் உரிய எழுத்துக்களே இரண்டுமுறை இரண்டு சூத்திரங்களிற் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக,

> 'கூற்றுவன் படைத்தன கூற்றன இரண்டும்
> ஏத்திய மரபிற் சூத்திரர் சாதி.'

'அவை, ழ, ள.'

> 'இயமன் படைத்த இருவகை எழுத்தும்
> துகடீர் மரபிற் சூத்திரர் சாதி'

என்னும் சூத்திரங்கள் இரண்டும் ழ-ளக்களைக் குறித்தே கூறுதல் காண்க. ஒரே பொருள் சிறிதும் மாறுபாடின்றி இரண்டுமுறை கூறுவதன் நோக்கம் யாதோ! அன்றியும், இச் சூத்திரங்களுட் காணும், 'சூத்திரர்' 'சாதி' என்னும் சொற்கள் பரணர் காலத்தில் பாடலுட்பயில்வன ஆமோ?

2. கதியெழுத்துக்களுள், தேவர்கதிக்கு உரிய எழுத்துக்கள் மட்டுமே இவர் செய்தனவாகக் காணப்படுகின்றன. இங்கும், தேவர்கதிக்கு உரிய எழுத்துக்களை [1]இரண்டுமுறை இரண்டு சூத்திரங்களிற் கூறியிருக்கின்றார்.

3. உண்டி எழுத்தில், அமுதவெழுத்து நஞ்செழுத்து என்னும் இரண்டுவகை யெழுத்துக்களும் கூறப்பட்டுள்ளன. அவற்றுள், நஞ்செழுத்துக்கள் இருமுறை[2] கூறப்பட்டிருக்கின்றன.

4. புள். உயிரெழுத்துக்களுள் இன்ன இன்ன எழுத்துக்கட்கு இன்ன இன்ன பறவையாகும் என்னும் செய்தியும் [3]இரண்டு சூத்திரங்களில், இருமுறை கூறப்பட்டுள்ளன.

---

1. உயிர்க்குறில் வல்லினம் ஈற்றெழுத் தொழியப்
பயிர்ப்புறு வானவர் கதியெனப் படுமே. (22.)

தேவர் கதியே தெரியுங் காலை
அ இ உ எ கசட தபவே. (23.)

2. ஆஓ இரண்டும் யரல மூன்றும்
தாவிலிவ் விருவகைக் கூட்டத் தியைந்தவும்
அளவும் ஆய்தமும் ஐவகைக் குறுக்கமும்
உளமலி புலவர் உரைத்தனர் நஞ்சென்
றவையொரு பெயர்மருங் கணைய நிற்பின்
நவையுறு திஞ்சலும் நடுக்கமும் செய்யும். (36.)

ஆஓ யரல முதலிய அளபெடை
ஆய்தமைங் குறுக்கம் உளப்பட வெல்லாம்
விடமென மொழிப மெய்யுணர்ந் தோரே. (39.)

3. ஐவகைக் குறிலும் அகரமுத லாக
வல்லூ றந்தை வலியன் குருகே
மெல்லியன் மயிலென விளம்பின ரிவற்றின்
.........................................(79.)

பின்னர், 'இனவிய'லில் பிள்ளைப்பாட்டின் இலக்கணத்தைக் குறித்து இவர் செய்தனவாகப் பதினேழு சூத்திரங்கள் உள்ளன. ஆண்பாற் பிள்ளைத்தமிழிலக்கணம், பெண்பாற் பிள்ளைத்தமிழிலக்கணம், காப்புக்கடவுளர், காப்புப்பாட்டின் எண்கள் ஆகிய இவற்றையே இவர் கூறியுள்ளார்.

இனி, இவர் கூறியுள்ள இவ்விஷயங்களை ஆராய்கின்றேன்: முதலில், இன்ன இன்ன எழுத்துக்களை இவர் இவர் படைத்தனர் என்னுமிடத்து,

| | | |
|---|---|---|
| [1]உயிரெழுத்துக்களைப் படைத்தவர் பிரமன் | | |
| [1]க-ங | ,, | ...ஈசன் |
| [1]ச-ஞ | ,, | ...திருமால் |
| [1]ட-ண. | ,, | ...அறுமுகன் |
| த-ந. | ,, | ...இந்திரன் |
| ப-ம. | ,, | ...சூரியன் |
| ய-ர. | ,, | ...சந்திரன் |
| ல-வ. | ,, | ...குபேரன் |
| ற-ன. | ,, | ...வருணன் |
| ழ-ள. | ,, | ...யமன் |

எனக் கூறியுள்ளார். ஆனால், [2]வச்சணந்தி வெண்பாப்பாட்டியல், [3]இலக்கணவிளக்கப்பாட்டியல் [4]சிதம்பரப்பாட்டியல்,

---

எண்ணப் பட்ட அகாமுத லைந்தும்
வல்லூ றந்தை வலியன் தருகே
மெல்லியன் மயிலேன விளம்பிய இயற்கையின்
..........................................(80.)

1. 'நறுமலர்த் திசைமுகன் ஈசன் நாரணன்
அறுமுகன் படைத்தன அந்தணர் சாதி'—6.
'திருமால் அரனே திசைமுகன் குமரன்
மரபிற் படைத்தன மறையவர் சாதி'—7.

என்னும் இரண்டு சூத்திரத்தையும் நோக்கினால் வைப்புமுறை மாறுபடுகின்றது. இவ்வாறே, ல-வ; ற-னக்களின் முறையும் மாறுக உளது.

2. 'அரனரிசேய் மால்கதிர்கூற் றுய்மழைபொன் மெய்க்கு'. (வச்ச. 11.) 'அரன், அரி, செவ்வாய், புதன், இரவி, மதி, இயமன், வருணன், வியாழன் என்னும் ஒன்பது புத்தேளிரும் முறையே இரண்டிரண்டாகப் பதினெட்டு மெய்யும் படைத்தார்.' (வச்சணந்தி மாலை. 11. உரை.)

3. 'மன்னிய அரன்அரி மயிலோன் புனிதன்
ஞாயிறு திங்கள் நடுவன் வருணன்
ஏயும் நிதிக்கோன் இரண்டிரண் டாகப்
படைத்தனர் ஈரொன் பானெற் றையுமே.'
(இலக்கணவிளக்கம். பாட்டியல். 18.)

4. 'அரன்மால் செவ்வேள்
உம்பர்கோன் பரிதிமதி மறலி நீர்க்கோன்

[1]நவநீதப்பாட்டியல் என்னும் இந்நூல்களில், ல-வக்கள், யமன் படைத்தவை எனவும், ழ-ளக்கள், வருணன்படைத்தவை எனவும் காண்கின்றன. அன்றியும், ற-னக்கள் குபேரன் படைத்தவை என்று இலக்கணவிளக்கப்பாட்டியல், சிதம்பரப்பாட்டியல், நவநீதப்பாட்டியல் ஆகிய இந்நூல்களிற் கூறப்பட்டுள்ளன காண்க.

நஞ்செழுத்துக்களுள் ஏகாரமும் ஒன்று என [2]இலக்கண விளக்கம் கூறுகின்றது. பரணர் அவ்வெழுத்தைக் கூறவில்லை; வச்சணந்திமாலையினும் காணப்படவில்லை.

பரணர் பாட்டியலில், பிள்ளைப்பாட்டுக்கு—காப்பு, [3]செங்கீரை, தால் என்று முறை கூறப்பட்டுளது; இலக்கணவிளக்கத்திலும் இவ்வாறே யுளது; வச்சணந்திமாலையிலோ, தாலுக்குப் பின்னர்[4] செங்கீரைப்பருவம் கூறப்பட்டுளது. மேலும், அம்புலிப்பருவத்தின் பின்னர், சிற்றில் சிறுபறை சிறுதேர் என்னும் முறை பரணர் சூத்திரங்களிற் காண்கின்றது. வச்சணந்திபாட்டியல், இலக்கண விளக்கப்பாட்டியல், சிதம்பரப்பாட்டியல் இவற்றில் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் முறை காண்கின்றது. பெண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பவற்றை நீக்கி, அவற்றிற்கு ஈடாக, சிற்றிலிழைத்தல், சிறுசோறுக்கல், ஊசல் என்னும் இவற்றைக் கூறவேண்டுமென்று பரணர் சூத்திரங்கள் கூறுகின்றன. இலக்கணவிளக்கம், சிதம்பரப்பாட்டியல் ஆகிய இந்நூல்

---

காதலள சேசன்முதல் இவ்வி ரண்டாய்க்
கம்முதல்மூ வாறொற்றும் கருதிச் செய்தார்.'
(சிதம்பரப்பாட்டியல். 5.)

1. 'விரிசடையோன்
துதிநா ரணன்செவ்வே ளிந்திரன் ஞாலங்கள் சூழவரும்
கதிரவன் சோமன் தருமன் வருணன் ஏனசநிதி
பதியவன் என்றிவர் மூவாறுடம்பு படைத்தனரே'
(நவநீதப்பாட்டியல். 9.)

2. 'யாலள என்னும் எழுத்தினை யூர்ந்த
ஆவும் ஓவும் அந்நாற் புள்ளியம்' (இலக்கண. பாட். 20.)

3. 'செங்கீரையும் தாலும் சப்பாணியும் முத்தமும் வரவுரைத்தலும் அம்புலியும் சிற்றிலும் சிறுதேரும் சிறுபறையும் எனப் பெயரிட்டு வழங்குதலானும் என்பது'. (தொல். புறத். 29 சூ. ந. உரை.)

4. பிள்ளைக்கவிக்குரிய சில பருவங்களை அமைத்து, முதன் முதலிற் பாடினவராகிய பெரியாழ்வார், தமது திருமொழியில், தாலுக்குப் பின்னர் செங்கீரை கூறியிருப்பது அறியத்தக்கது.

கள், [1]கழங்கு, அம்மானை, ஊசல் என்னும் இவற்றையே விதித்துள் ளன. இவ்வாறு பலமாறுதல்கள் காண்கின்றன. பிற்க.

இனி, பாட்டியலின் தன்மையைச் சிறிது கூறுகின்றேன்: பாட்டி யல் முக்கியமாகப் பிரபந்தங்களின் இலக்கணத்தை அறிவிப்பது. பன் னிருபாட்டியலில் [2]அறுபதுக்குமேற்பட்ட பிரபந்தங்களுக்கு இலக் கணம் கூறப்பட்டுளது. இவற்றுட் பெரும்பாலனவாகிய பிரபந் தங்கள் பிற்காலத்துத் தோன்றியவையே. இஃது, [3]ஆசிரியர் நச்சி னார்க்கினியர் முதலியோர் உரையினானும் அறியப்படும். அன்றி யும், பண்டைக்காலத்து நூலாகிய தோல்காப்பியத்தில், பாவினங்கள் காண்டலில்லை. பண்டைப்புலவர் பாட்டுக்களில், பாவினங்களுள் ஒன்றனுலாவது அமைந்த பாட்டுக்கள் காணப்படாமை இதனை வலியுறுத்தும். அங்ஙனமாக, பரணர்,

'அகவல் விருத்தமும் கட்டளை யொலியும்
கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே' (188)
'முதற்க ணெடுக்கும் அகவல் விருத்தம்' (189)

என இலக்கணங் கூறுதல் எவ்வாறு இயையும்? இவ்வாறே புலவர் பிறர் கூறுதலும் பொருந்தாதனவேயாகும். இவற்றை விரிவாகக் கூறுதல் ஈண்டைக்கு மிகையாமாதலின் எழுதாது விடுக்கின்றேன்.

மேற்கூறியவற்றால், பாட்டியல் இலக்கணம் பிற்காலத்தில் உண் டாயது என்பதும், இப் பன்னிரு பாட்டியல், பண்டைப் புலவரால் செய்யப்பட்டதன்று என்பதும் புலனாகும். இனி, இப் பன்னிரு பாட்டியலின் இயல்பினைச் சிறிது விளக்கி, இப்பகுதியை முடிக் கின்றேன்.

---

1. 'அவற்றுள்
பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
ஆடுங் கழங்கம் மானை யூசல்
பாடுங் கவியாற் பகுத்து வகுப்புடன்
.......................................' (இலக்கண. பாட். 47.)
'பின்மூன்றும்
தெரிவையர்க்குப் பெருகழங்கம் மானை யூசல்
பெறும்.' (சிதம்பரப். 27.)

2. பன்னிருபாட்டியல், 43-ஆம் பக்கத்தில் பிரபந்தங்களின் மொத்த எண் 59 என்று குறிக்கப்பட்டுளது. 'மேதகு சாதகம்' (171) என்னும் சூத் திரத்தால், இத்தொகை தவறுதல் விளங்கும்.

3. 'அது, பின்னுள்ளோர் எழு பருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட் டாகச் செய்கின்ற உலாச்செய்யுளாம். (தொல். புறத். 30. சூ. ந. உரை.)

'பின்னுள்ளார் பாட்டியன்மரபிற் கூறிய கலம்பகச் செய்யுள் முதலிய வற்றைப் பாடுதலுமாயிற்று'. (தொல். செய். 239. சூ. ந. உரை.)

இந்நூல், பன்னிரு புலவராற் செய்யப்பட்ட சூத்திரங்களை யுடையது என்று மேலே கூறியுள்ளேன். நூலுள், சிலசில பகுதி களுக்குமட்டும் புலவர் பலரால் செய்யப்பட்ட சூத்திரங்கள் உள்ளன; சிலவற்றிற்குப் புலவர் ஒருவரால் பலமுறை செய்யப்பட்ட சூத்திரங்களும் உள. உதாரணமாக,

'அமுதென விடமென வருமிரு வகையும்
உணவெனப் புலவர் உரைத்தன ருளரே'
'நஞ்சென அமுதென நவிலவும் படுமே' (பொய்கையார்)
'உணவே யமுதம் விடமு மாகும்' (அவிநயனர்)

என வந்துள்ள சூத்திரங்களைக் காண்க. இவ் விஷயத்திற்கு, பொய் கையார் சூத்திரங்களுள் ஒன்றே, அல்லது, அவிநயனர் சூத்திரம் மட்டுமோ அமைவதாகும்.

இவற்றை நோக்குமிடத்து, ஒவ்வொரு விஷயத்தைக் குறித் தும் புலவர் பலர் இலக்கணம் செய்திருந்தனர்; அவை, தனித் தனி நூல்களாக வழங்கின; அவற்றுட் பல, பல விடங்களில் சிதைந்து போயினமையின், எஞ்சியவற்றை ஒருங்குசேர்த்து எவரோ ஒருவர் எழுதிவைத்துள்ளார் என்று கூறவேண்டுவதாகும். ஒரே விஷயத்தைக் குறித்துப் பலர் செய்துள்ள சூத்திரங்களுக்கு இவ்வாறு சமாதானம் சொல்லக்கூடுமாயினும், ஒரு விஷயத்திற்கு ஒருவரே பல சூத்திரங்கள் செய்திருத்தற்கு என்ன சமாதானம் சொல்லக்கூடும்! இவ்வாறுன பலவற்றையும் ஆராய்ந்து பார்க்கின், இந்நூல், பண்டைப் புலவர்கள் செய்ததன்று என்பது வெள்ளிடை மலைபோல் தெள்ளிதிற் புலனாகும்.

பன்னிருபடலம் என்னும் இலக்கணநூல், பன்னிரு புலவர் களாற் செய்யப்பட்டது என அறிந்தாரொருவர், தாமே பல சூத்திரங்களைச் செய்து பன்னிரு புலவர்பேரி லேற்றி, ஒரு நூலாக அமைத்திருக்க வேண்டும்; அல்லது, பலபேர் இயற்றிய சூத்திரங் களுட் சிலவற்றை ஒருங்கு சேர்த்து, பன்னிரு புலவர் பெயரை ஆங்காங்குக் குறித்திருக்கவேண்டும் எனத் தோன்றுகின்றது. இப்பொழுது காணப்படும் பாட்டியல்நூல்களுள் இதுவே முற் பட்டது என்பதற்கு அகச் சான்றுகள் சிலவுள்ளனவாயினும், இது, பரணர் முதலியோர் வாழ்ந்திருந்த காலத்துக்குப் பல நூற் ருண்டுகளின் பின் வாழ்ந்திருந்தவரால் செய்யப்பட்டது என்பதில் ஐயமின்று. இவ்வாறே பிற்காலத்தில் வாழ்ந்தோர், தாம் செய்த நூல்களைப் பண்டைப் புலவர்பேரில் ஏற்றிச் சுமத்தியிருத் தலைப் பலரும் அறிவர். இஃது எல்லா மொழியிலும் காணப்படும் நிகழ்ச்சியே. அதனை அறிஞர் ஆராய்ந்து உண்மை காண்பது அவரது கடனாகும்.

திருவள்ளுவமாலையில்,

பரணரும் திருவள்ளுவமாலையும்.

'மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞால முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் [வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து'

என்றுள்ள ஆறும் பாட்டு, பரணர் பாடியது எனக் காணப்படுகின்றது. திருவள்ளுவரைக் குறித்தும் திருவள்ளுவமாலையைக் குறித்தும் வழங்குங் கதைகளுக்குப் பழைய நூல்களுள் யாண்டும் சான்று இன்மையானும், அவை புனைந்துரைகளே என்பது அறிஞர்க்கு உடன்பாடாகலானும் இப் பாட்டு, பரணர் பாடியதன்று எனக் கொள்ளுதல் தகுதி. ஒரு நூலுக்குச் சிறப்புப் பாயிரம் கூறுபவர் அந்நூல் முழுவதையும் குறிப்பிடுதல் வழக்காறாகவும், எறிச்சலூர் மலாடனர், போக்கியார், மோசிகீரனர் என்பவர்கள் முறையே, அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் பகுதிகளில் இயல்களின் தொகையையே கூறியுள்ளார். இதனானும், சங்கப்புலவர் காலத்திற்குப் பிற்பட்டவராகிய பாரதம் பாடிய பெருந்தேவனர் இயற்றிய பாட்டும் இந்நூலில் (திருவள்ளுவமாலை) இருத்தலானும், பிறவாற்றானும், இப் பாட்டுக்களெல்லாம் சங்கப் புலவர்கள் பாடியன அல்ல எனவும், பிற்காலத்தவரொருவர் பாடியனவே எனவும் அறியப்படும். இன்னும், இதனை விரித்துக்கூறப் புகின், பெருகும் என்றஞ்சி இவ்வளவில் விடுக்கின்றேன்.

---

பரணாற் பாடப்பெற்றவரும் குறிக்கப்பட்டவரும் பலர். அவருட் சிலரைக் குறித்துப் புலவர் பிறரும் பாடியுள்ளனர். ஆதலின், அவர் (பாடப்பட்டவர்) வரலாறுகள் தனித்தனிப் புத்தகமாக எழுதத்தக்கவாறு மிகப் பரந்துள்ளன. அவையனைத்தும் ஈண்டுக் கூறுதல் மிகையாகு மாதலின், ஒவ்வொருவரைக் குறித்துப் பரணர் கூறியுள்ள வரலாறுகளைமட்டுமே தொகுத்து ஈண்டு எழுதுகின்றேன்:

பரணராற் பாடப்பட்ட அரசர் முதலியோர்.

சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி.

இவன், சோழன் கரிகாலனுக்குத் தந்தை. இஃது, 'உருவப் பஃறேர் இளையோன் சிறுவன்' என்னும் பொருநராற்றுப்படையின் 130-ஆம் அடியாற் புலனாகும். இவனது பெயரை நோக்கின், இவன், அழகிய பலதேர்களை யுடையவனா யிருந்திருக்கவேண்டும் என்பது புலனாகும். இவன், நால்வகைப் படைகளுடன் போர் செய்கையில், அழகிய தேரில் பொலிந்து விளங்கின தன்மை சிறப்பித்துக் கூறப்பட்டுளது[1]. இவன் போர் பொருது வெற்றிபெற்ற களத்தில் யானை முதலியவற்றின் நிலைமையைப் பரணர் அழகாக வருணித்துள்ளார். இவன், பகைவர் நாடுகளை அழித்து, அவர்களை வென்றவன். இவனை நினைத்து இவன் பகைவர் நாடு எப்பொழுதும் வருந்தும் என்பதை,

'தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே' (புறம். 4)

என்று விளங்கக் கூறியுள்ளார். ஆயினும், இவனோடு பொருதொழிந்த அரசர் இன்னவர் எனத் தெரியவில்லை.

---

சோழன் வேற்பஃறடக்கைப் பெரு[2]விறற் கிள்ளியும்
சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும்.

இவர்களிருவரும், போர் என்னும் ஊர்ப்புறத்துப் பொருது போர்க்களத்தில் வீழ்ந்தனர். அப்பொழுது அந் நிலைமையைக் கண்டு பரணர் பெரிதும் இரங்கிப் பாடி யிருக்கின்றார்.

---

1. 'நீயே, யலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவுதோன்றி
மாக்கட லிவர்ந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ' (புறம். 4.)

என்பது காண்க.

2. பெருநற் கிள்ளி எனவும் பாடம்.

'சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர் இனியே
என்னு வதுகொல் தானே * *
* * *
காமர் கிடக்கை அவ ரகன்றலை நாடே' (புறம். 63.)

என்பதனல், வேந்தரிருவரும் இறந்துபட்டனர் என்பதும், அவர் நாட்டின் நிலைமை வருந்தத்தக்கதா யிருந்தது என்பதும் விளங்கும். இவர்களது இந் நிலைமையைக் குறித்துக் கழாத்தலையார் என்னும் புலவரும் (புறம். 62.) இரங்கிப் பாடியுள்ளார்.

---

## சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன்.

இவன் பெயர், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று பதிற்றுப் பத்தில் 5-ஆம் பத்தின் பதிகம் கூறுகின்றது. செங்குட்டுவனைப் பற்றிச் சிலப்பதிகாரத்திற் கூறியுள்ள பல வரலாறுகளும் இப்பதிகத் திற் காணப்படுகின்றன. பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் உள்ள பதிகங்கள், மூலம் மட்டும் உள்ள ஏடுகளில் காணப்படவில்லை என்றும், அதனல், அவை நூலாசிரியர் இயற்றி யன அல்ல என்றும், அந்நூலைப் பதிப்பித்தவர்களாகிய மஹா மஹோபாத்யாய ப்ரஹ்மஸ்ரீ. வே. சாமிநாத ஐயரவர்கள் எழுதி யிருக்கின்றூர்கள். ஆதலின், பதிகங்கள், பிற்காலத்தில் எவராலேயோ எழுதப்பட்டிருத்தல்வேண்டும். அவற்றிலுள்ள சில அருஞ்சொற் களுக்கு உரையாசிரியர் குறிப்புரை எழுதியிருத்தலின், அவை (பதிகங்கள்), உரையாசிரியருக்கு முற்பட்ட காலத்திலேயே எழுதப் பட்டிருக்க வேண்டும் என்று கொள்ளுதல் அமைதியாகும்.

குட்டுவன், போரில் வெற்றிபெற்றுப் போர்க்களத்தில் பெரு மிதந் தோன்ற விளங்கி யிருந்த அமயத்தில், பரணர் ஆங்குச்சென்று அவனைக் கண்டு, அவன் வெற்றியைப் புகழ்ந்து பாடிய பாட்டு, (புறம். 369) உருவகவணி யமைந்து சிறப்புற்று விளங்குகின்றது.

இனி, இக் குட்டுவனைக் குறித்துப் பதிற்றுப்பத்தின் 5-ஆம் பத்தில் கூறப்பட்டுள்ள வரலாறுகளைத் தொகுத்து இங்கே எழுது கின்றேன் :

குட்டுவன், மேல்கடலில், ஒரு நிலப்பகுதியிடத்து வாழ்ந் திருந்தவர்களையும், அவர்களரசனையும் எதிர்த்துத் தன் வேலாற் பொருது, அவர்களை வென்றான். இதனைப் பரணர் [1]பலவிடத்துங் கூறுவதனல், இவ்வென்றியின் மேன்மை புலனகும்.

---

1. பதிற். 41, 45, 48 ; அகம். 212.

'கோடுநரல் பவ்வம் கலங்க வேலிட்
டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய[1]
வெல்புகழ்க் குட்டுவன்' (பதிற்-46)

என்னும் பகுதியில், 'கடலோட்டிய என்றது, தன்னுள் வாழ்வார்க்கு அரணாகிய கடல்வலியை அழித்த என்றவாறு' என்று உரையாசிரியர் எழுதியிருத்தல் நோக்கற்பாலது. இதனால், கடலை அரணாகக் கொண்டு, அதனுள் ஒரு தீவில் வாழ்ந்த கூட்டத்தாரைக் குட்டுவன் வென்றான் என்பதே நிகழ்ந்த வரலாறாகும். அவ்வாறாயின், 'கடல் பிறக்கோட்டிய வேல் கெழு குட்டுவன்' என்று இவனுக்குப் பெயர் வந்தது எங்கனம் எனின், கடல் கலங்கும்படி அதன்கட் சென்று, அதன் பெருமையை யழித்ததுபற்றிக் கவிமரபாக அங்கனம் பாடினாராதலின், அதுகொண்டு, அவ்வாறு பெயர் வழங்கலாயிற்று என்று கொள்ளுதல் அமைதியாகும் என்க.

'தாவ லுய்யுமோ மற்றே * *
கா லுளைக் கடும்பிசி ருடைய வா லுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்த நின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே' (பதிற்-41)

என்னும் அடிகளை நோக்குக. அன்றியும்,

'மூரி வெண்டோல்,
அனைய பண்பிற் றானை மன்னர்
இனியா ருளரோ நின் முன்னும் இல்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி இமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே' (பதிற்-45)

என்னுமிடத்து, 'கடல் மறுத்தல் என்றது, கடலிற்புக்கு ஒருவினை செய்தற்கு அரிது என்பதனை மறுத்தலை' என்று உரையாசிரியர் எழுதியிருத்தல் அறியத்தக்கது. 'நின் முன்னும் இல்லை' என்றதனால், கடலிற் சென்று, அங்கே வாழ்ந்திருந்தவர்களை வென்றவன் குட்டுவனே என்பதும், இத்தகைய அருஞ்செயலை இவனுக்கு முற்பட்ட சேரவேந்தர் எவரும் செய்திலர் என்பதும் விளங்கும். 'இனி யாருளரோ' என்றது, இத்தகைய செயலைச் செய்வார் அரியர் என்று, இவன் செயலை வியந்துரைத்தபடி. 'தோல் அனைய பண்பிற் றானை மன்னர்' என்றது, கிடுகு, பகைவர் படைக்கலங்களால் தான் தளராதேயிருந்து, தன்னையுடையானையும் காப்பதே போல், இவன், தான் முன்னின்று பொருது, பகைவ ரம்புகள் தன் படைகளை அழிக்காதவாறு அவர்களுக்குக் காப்பா யிருந்தான் என்று தெரிவிக்கும்.

1. 'நெடுங்கட லோட்டி' எனச் சிலப்பதிகாரத்தும் (28 : 119) வந்துளது.

'தோல் அணைய பண்பு என்றது, தான் அம்புபடில் தளராது, பிறர்க்கு அரணமாகும் தோற்கடகு போன்ற பண்பு என்றவாறு' என உரையாசிரியர் எழுதியிருத்தலைக் காண்க.

குட்டுவன், கடலுள் வாழ்ந்திருந்தவர்களோடு போர்செய்து அவர்களை வென்று, அங்குநின்று தந்த அரிய பொருள்களையும் அணிகளையும், பாணர் முதலியோர் பாடும் சிறப்பில்லாப் பாட்டுக்களுக்காக எளிதின் ஈந்தான். இவன், தான் வருந்தி அரிதிற் பெற்ற பொருள்களை எளிதின் ஈதலைக் குறித்து ஏவலர் இவனை வெறுத்துக் கூறினர். இதனை,

'ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினி னீயும்
கல்லா வாய்மையன் இவனெனத் தத்தம்
கைவல் இளையர் நேர்கை நிரைப்ப' (பதிற்-48)

என்னும் அடிகளிற் காணலாகும்.

குட்டுவன், [1]ஏழு முடிகளாற் சமைத்த மாலையை மார்பில் அணிந்திருந்தவனாகக் கூறப்படுகின்றான். இதனை,

'பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவி னொடுங்கிய அம்பின்
ஒசிவுடை வில்லின் ஒசியா நெஞ்சிற்
களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்
விழுமியோர் துவன்றிய வகன்கண் நாட்பின்
[2] எழுமுடி மார்பின் எய்திய சேரல்' (பதிற்-45)

என்னும் அடிகளிற் காண்க.

அஃதாவது, எழுவர் அரசரை வென்று, அவர்களுடைய முடிகள் ஏழனுலும் சமைத்த மாலையை யுடையவன் என்பதாம். இதனை, 'எழுமுடி என்பது, ஏழு அரசரை வென்று அவர்கள் ஏழு முடியானும் [3]செய்ததோ ராரமாம்' என்று உரையாசிரியர் (பதிற்-14) எழுதியிருப்பதனல் அறிக.

---

1. 'எழுமுடி மார்ப' சிலப். 28 : 169.
2. 'எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்ரோர் மெய்ம்மறை' (பதிற்-14)

எனவும்,

'திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமோ டுறழ்ந்துபூண் சுடர்வர
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து' (பதிற்-16)

எனவும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும்,

'எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து' (பதிற்-40)

எனக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலும் கூறப்பட்டிருக்கின்றனர்.

3. முடிகளின் மணிகளால் செய்த ஆரம்போலும். முடிகளின் உருவம் போலவும் செய்திருத்தல் கூடும்.

குட்டுவன், வேந்தர் பலருடன் பொருது பல்வேறு நாடுகளை அழித்தான். இதனை,

'வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
* * * *
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ' (பதிற்-43)

என்னும் அடிகளிற் காண்க.

குட்டுவன், பாசறையில் பல நாட்கள் தங்கியிருந்து, இரவில் நெடுநேரம் பகைவெல்லும் சூழ்ச்சியையே எண்ணிக் கொண்டிருப்பான்[1] என்றும், இவன் படைமறவர்,[2] பகைவர் தலையில் உலக்கை கொண்டெறிந்து அவரைக் கொல்வர் என்றும் கூறப்படுகின்றன.

குட்டுவனது வெற்றியையும் வல்லமையையும் அறிந்த அரசர் பலர், தம் பகைவருக்கு அஞ்சி, இவனோடு நட்புக்கொண்டு வாழ்ந்தனர்[3]. இவன், எவரையும் வணங்குதலில்லாத ஆண்மை யுடையவன்; ஆயினும், தன்னைப்பாடும் புலவர் முதலியோரை வணங்கும் இயல்பினன்.[4]

குட்டுவன், தன் துணைவனாகிய [5]அறுகை என்பானுக்கும் மோகூர் மன்ன (பழையன்)னுக்கும் போர் நிகழ்ந்த காலத்தில், தன் உதவியை வேண்டிய மோகூர்மன்னனுக்கு, அறுகை என்பவன் தனக்கு நண்பன் என்றும், அவன் சேணிடத்தானாயினும் அவனுக்குத் துணை புரிதலே முறை என்றும் கூறி மறுத்துவிட்டு, அறுகைக்குத் துணை நின்றான். அறுகை, போரில் வலிகுன்றித் தன் இடம்விட்டு நீங்கி அரண்களுள் ஒளித்திருந்த பொழுது, இவன் (குட்டுவன்), பகைவரரண்களை யழித்து, வேந்தர் வேளிர் முதலியோரை வென்று, மோகூர் மன்னனது காவல்மரமாகிய [6]வேம்பைத் தடிந்து துணித்து வண்டியிலேற்றி, அவன் யானைகளைப் [7]பூட்டி, அவற்றைத் தன் னூருக்குக் கொண்டுபோய், முரசுகளாகச் செய்தான்.

---

1. பதிற்-50.
2. பதிற்-41.
3. பதிற்-50.
4. பதிற்-48.
5. பதிற்-44.
6. பதிற்-44 : 49 ; சிலப். 27 : 124-6.

7. பழையன் மனைவியரின் கூந்தலைக் கயிறாகத் திரித்து யானைகளைப் பூட்டினன் என்று பதிகம் கூறுகின்றது.

இவ்வரலாறு,

‘ நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுவை
சேண ளுயினும் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்
கரண்க டாவுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன
மோகூர்மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரற்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை உய்த்த ’ (பதிற்-44.)

என்பதனுலும்,

‘ வெல்போர் வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோகூர்
வலம்படு குழூஉநிலை அதிர மண்டி
* * * *
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவன் ’ (பதிற்-49)

என்பதனுலும் அறியப்படும்.

குட்டுவன், வீரர்களுக்குக் களிறும், பாணர்களுக்கு மாவும் பொற்றுமரைப் பூவும், விறலியருக்குப் பிடியும் ஆரமும் வழங்கியவன்[1]; கூத்தர்களுக்கு எண்ணிறந்த குதிரைகளை நல்கியவன்[2]. அவன் கோயிலில், கூத்தர்களுக்கு எப்பொழுதும் வழங்குதற்காகக் கள் நிறைந்த குடங்கள் கோக்காலியில் வைக்கப்பட்டிருக்கும் என்பதும், அப்படி வைந்திருந்தும் அடிக்கடி வருபவர்களுக்கு வழங்குதலின் அக் குடங்கள் நிறைகுடங்களாக நெடுநேரம் நிலைத்திருப்பன அல்ல என்பதும்,

‘ நிரம்பகல் பறியா வேறு வேணி
நிறைந்து நேடிதிராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தே நின் கலிமகி ழானே ’ (பதிற்-43)

என்னும் அடிகளால் தெரிகின்றன.

குட்டுவன், வேனிற்காலத்தில் குளிர்ச்சி மிக்க பொழில்களில் தங்கி இன்புற வாழ்ந்திருப்பான்[3].

இதுகாறும் கூறியவற்றல் குட்டுவனது போர்வெற்றியும், பெருங்கொடையும், இன்பநுகர்ச்சியும், பிறவும் புலனுகும்.

1. பதிற்-43 ; 48.
2. பதிற்-42.
3. பதிற்-48.

பொதியின் மலையும், (தன்னாட்டிலுள்ள மேற்குத்தொடர்ச்சி மலையின் பகுதி) மேலைக்கடலும் குட்டுவனுக்கு உரிமையுடையனவாயிருந்தன. மலைவறங்கூரும் காலத்தும் இவனாட்டிற் பேர்யாற்றில் புனல் பாயும்[1] என்று கூறப்பட்டுளது.

பதிகத்தைப் பற்றிய சில வரலாறுகளை மேலே கூறியுள்ளேன்.

**பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தின் பதிகம்.**

சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டுள்ள செங்குட்டுவன் வரலாறுகளுட் பல, இப்பதிகத்துக் கூறப்பட்டுள்ளன. அவற்றுட் கடவுட் பத்தினிக்குக் (கண்ணகிக்குக்) கல் வேண்டி இமயம் சென்று கொணர்ந்த வரலாறு சிறந்ததாகும். இப்பெருஞ்செயலைப் பரணர் கூறவில்லை. குட்டுவன், கண்ணகிக்குக் கால்கொண்டு வரும்பொருட்டு வடநாட்டிற்குச் சென்றதன் முன்னரே, தன் மைத்துனவளவனுக்காகச் சோழர் ஒன்பதின்மரைக் கொன்றான் என்பது [2]சிலப்பதிகாரத்தினால் தெரிகின்றது. அதனையும் பரணர் குறிப்பிடவில்லை. பரணர் குட்டுவனைப் பாடியதன் பிற்காலத்தில், இச்செயல்களை அவன் செய்திருப்பான் என்று கொள்ளுதல்வேண்டும். இவ்வாறன்றி, சிலப்பதிகாரக் குட்டுவன் வேறே, இவ் வேல்கெழு குட்டுவன் வேறே எனவும், குட்டுவன் என்னும் பெயர் ஒற்றுமையால் செங்குட்டுவன் செய்த செயல்கள் எல்லாவற்றையும் இக் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் செய்த செயல்களாகக் கருதி இப்பதிகம் பாடியவர் பாடியிருக்கவேண்டும் எனவும் கருத இடமுண்டு. ஆயினும், அவற்றையெல்லாம் ஈண்டு ஆராய்தல் 'மற்றொன்று விரித்தல்' ஆகும் என்று கருதி, இதனோடு நிறுத்துகின்றேன். ஆதலின், பதிகத்தின் வரலாறு இங்கே ஆராயாது விடுக்கப்பட்டது.

## மோகூர் மன்னன்.

இவன் பெயர் இஃது என்பது பரணர் பாட்டுக்களால் தெரியவில்லை. ஆயினும், பதிகத்தில் இவன் பெயர் பழையன் என்று கூறப்பட்டுளது. 'பழையன் மோகூர் அவையகம்'[3] என்பதனாலும் இவன், பெயர் பழையன் என்பது புலனாகும். [4]இவனுக்கும் அறுகை என்பானுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. [5]இவன், வேந்தர்களையும் வேளிரையும் தனக்குத் துணையாகக்கொண்டு நெடுமொழி கூறிப்

1. பதிற்-43.
2. சிலப். 27 : 118-123; 28 : 116, 117.
3. மதுரைக் காஞ்சி 508.
4. பதிற்-44.
5. பதிற்-49.

பொருதான்; அப்பொழுது அறுகைக்குத் துணையாக வந்த குட்டுவனால் தோல்வியுற்றான்.

## அறுகை.

இவன், கடலோட்டிய வேல்கெழு குட்டுவனுக்கு நண்பன். இவனுக்கும் மோகூர் மன்னனுக்கும் போர் நடந்தது. அப்போரில் இவன் தோற்று ஒளித்திருந்தான். அவ்வாறு பிறரால் நீக்க முடியாத பேரிடையூற்றில் இவன் அகப்பட்டிருந்த காலத்தில், கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், தன் நண்பனாகிய இவனுக்காக மோகூர் மன்னனோடெதிர்த்துப் பொருது வென்று, இவனைக்காத்தான் எனத் தெரிகின்றது. இதனை, மேல், குட்டுவனைக் குறித்து எழுதியவிடத்தும் எழுதியுள்ளேன். இவன் வரலாறு வேறொன்றும் இவராற் கூறப்படவில்லை.

## வையாவிக்கோப்பெரும்பேகன்.

இவன், கார்காலத்தில் ஒருநாள் வெளியிடம் போய் உலவி வருகையில், அங்கே உவகையின் மிகுதியால் ஆடிக்கொண்டிருந்த மயிலைக் கண்டு, தனது இயல்பான தண்ணளியினால், 'இது, குளிரின் மிகுதியால் நடுங்குகின்றதே!' என்று வருந்தி, தனது போர்வையை அதன்மேல் போர்த்தினான்.[1] இவனது அருளும் கொடையும் பிறவும் நாடெங்கும் பரவின. அக்காலத்தில், பரணர் இவனை யடைந்து பாடிப் பெருஞ்செல்வம் பெற்றார். இதனை அவரே,

'உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅம் மஞ்ஞைக் கீத்த வெங்கோ' (புறம்-141)

என்றும்,

'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக' (புறம்-145)

என்றும்,

'கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரெ னொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே' (புறம்-141)

என்றும் பாடியிருத்தலின் அறியலாகும்.

பேகன் கொடைமடம் உடையவன் என்பதை நம் புலவர்,

---

1. இச்செய்தி வியப்பினைத் தருகின்றது.

'அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே'
(புறம்-142)

என்று நயமுறப் பாடியுள்ளார்.

அருளும் கொடையும் மிக்க பெருவள்ளலாகிய பேகன், தன் [1]மனைவியை விட்டுப் பொதுமகளொருத்தியோடு வதிந்திருந்த காலத்தில், அச்செய்தியை யறிந்த புலவர் பலர் பேகனை யடைந்து, அவன் முன்போல் தன் காதலியுடன் கூடி வாழுமாறு பாடி வேண்டினர். அவர்களுள் பரணரும் ஒருவர். இவர்,

'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமு மிலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியா மிரந்த பரிசிலஃ திருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே. (புறம்-145)

என்று பாடி வேண்டினர்.

பேகன், பிறரது வறுமையைப் போக்க வழங்குதலேயன்றி, [2]மறுமைப்பயன் கருதி வழங்கும் இயல்பின னல்லன். இத்திறத்தில் இவன், ஆய் அண்டிரனை ஒத்தவ னவான்.

---

1. காதற்கிழத்தி என்று மஹாமஹோபாத்யாய ஐயரவர்கள் (புறம்-143) குறிப்புரையில் எழுதி யுள்ளார்கள். 'யாந்தற் றொழுதனம்' என்று பரணர் பாடியிருத்தலானும், 'எம்போ லொருத்தி என்றது உவமைகருதாது வன்மையுரை தோன்ற நின்றது' என்று உரையாசிரியர் எழுதி யிருத்தலானும், 'அருந்துய ருழக்குநின் திருந்திழை யரிவை' (புறம்-146) என்று பிறருங் கூறுதலானும் கண்ணகி, பேகன்மனைவி என்றலே தகுதி எனத் தோன்றுகின்றது.

2. மறுமை நோக்கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின் றவன் கைவண் மையே (புறம்-141)
என்பது காண்க.

'வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
[1]கொண்டன் மாமலை நாறி' (அகம். 262)

என்னும் அடிகளால் அறியப்படும். இங்கே, 'வண்டுபடு நறவின் வண்மகிழ்' என்னும் அடைமொழி, பேகனுக்கே இயைதலும், மலைக்கேற்றின் சிறவாமையும் அறிக.

## கரிகாலன்.

இவன், கரிகால்வளவன் எனவும் கூறப்படுவான். இவன், மிக்க வலியும் திறலும் உடையவன்; பல போரிலும் வெற்றி பெற்றவன். வெண்ணிவாயிலில், வேந்தர் பிறரும் வேளிர்பதினொருவரும் கூடித் தன்னோடு எதிர்த்துப் பொருத போரில், இவன், அவர்களை வென்று விளங்கினான்.[2] மற்றொருகால், வாகைப்பறந்தலையில் ஒன்பதின்மர் மன்னரோடு பொருது, அவர்களைத் தோற்பித்தான். அவர்கள், தம் குடைகளும் இழந்து ஓடினர்[3]. இவற்றால், இவனது வெற்றிச் சிறப்பு நன்கு விளங்கும்.

கரிகால்வளவன், காவிரியாற்றில் கழார்ப்பெருந்துறையில் நடந்த விழாக் காண்டற்குத்[4] தன் சுற்றத்தோடு சென்று, அத்தி என்பவன் அவ் யாற்றில் புனலாடுதலைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனதுஆடலை அனைவருங் கண்டு மகிழ்வுற்றிருக்கையில், அவனைப் புனல் ஈர்த்துக்கொண்டு போயிற்று. இவ் வளவனைப் பற்றிப் பரணர் பாட்டுகளிற் கூறப்பட்டுள்ளவை இத்துணையே.

## ஆட்டனத்தி.

இவன் பெயர், அத்தி என்பது. இவன், ஆடுதற் றொழிலிற் பயின்றிருந்தான்; அத் தொழிற்சிறப்புப்பற்றி ஆட்டன் அத்தி என்றும், [5]போருநன் என்றும் பெயர் பெற்றான். இவன் மிக்க அழகினன்; திரண்ட தோளினன்.

'ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்ட னத்தி நலனயந்து' (அகம். 222)

என்பதனால், இவை அறியப்படும்.

---

1. 'கொண்டகன் மாமலை' என்று பாடங்கொண்டு, 'இவன்மலைக்குக் கன்மாமலை என்று பெயர்' என அகநானூற்றுப் பதிப்பாசிரியர் (அரசர் முதலியோர் வரலாறு. பக். 56.) எழுதியுள்ளார். அப் பாடம் அமைதியன்று என மேலேயே (பக்கம். 54.) எழுதியிருத்தலின், அவர் கூற்றுப் பொருந்தாமை போதரும்.

2. அகம். 246.
3. அகம். 125.
4. அகம். 376.
5. அகம். 76.

ஆட்டனத்தி, காவிரியாற்றிற் கழார்ப்பெருந்துறையின்கண், விழாக்காலத்தில் கரிகாற்சோழன் கண்டிருப்ப, காலிற் கழல்புரள, அரையிற் கட்டிய கச்சையின்மேல் பொன்னாற் செய்த பாண்டில் மணிகள் ஒலிப்ப, அழகுபெற ஆடிக்கொண்டிருந்தான்;[1] அப்பொழுது வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டு, அதன்வழியே சென்று, கடலிற் சேர்ந்தான். அவன் மனைவி பலவிடங்களிலும் தேடி அலைந்து, முடிவில், மருதி என்பவளால் அவனைக் கண்டாள்.

## ஆதிமந்தி.

இவள், ஆட்டனத்தியின் மனைவி[2]; தன் கணவன் காவிரியாற்றுப் புனலால் இழுக்கப்பட்டதை அறிந்து, பல நாடுகளிலும் பல ஊர்களிலும் சென்று அவனைத் தேடிக் காணாளாய்க் கவன்று, அலைந்து திரிந்தாள். அப்பொழுது மருதி என்பவள், கடல்வாய்ப்பட்டிருந்த ஆட்டனத்தியை இவளுக்குக் காட்டினாள். இவ் வரலாறு, பரணர் பாட்டுகளிற [3]பல இடங்களிற் காணப்படுகின்றது. இவள் (ஆதிமந்தி), சோழன் கரிகாலனுக்கு மகள் என்றும்,[4] ஆட்டனத்தி என்பவன் சேர வேந்தன் என்றும், இவள் அவ் வரசன்தேவி என்றும் கூறும் கூற்று, பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. இவள் கரிகாலன் மகளாயின், தன்முன் விழவிலாடிய தன் மருகன் புனலால் இழுக்கப்பட்டுச் சென்றதைக் கண்டும், அவன் வாளா இருப்பானோ? தன் வினையாளரைக் கொண்டு அவனை மீட்டுப் பாதுகாக்கவோ, அல்லது, அவனைக் கண்டுபிடிக்கவோ முயலாதிருப்பானோ?

---

1. அகம். 376.

2. ஆதிமந்தி பாடியது என்று ஒரு செய்யுள் குறுந்தொகையில் காணப்படுகின்றது. அதனைச் செய்தவள் இவளேயாயின், இவள் கூத்தாடு மகள் என்பதும், இவள் கணவன் கூத்தாடு மகன் என்பதும் புலனாகும்.

'மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோ ராடுகள மகளே என்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே' (குறுந். 31.)

என்னும் செய்யுளைக் காண்க. இவ் வாதிமந்தியை வெள்ளி வீதியார் (அகம். 45) குறித்துள்ளார்.

3. அகம். 76, 222, 236, 376.

4. அகநானூறு-அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 40. நற்றிணை-பாடினோர் வரலாறு. பக்கம். 53.

'கலிகொள் சுற்றமொடு கரிகால் காண[1]' என்று கூறி யிருத்தலின், கரிகாலன், தன் அமைச்சர் மறவர் முதலியோரோடு ஆண்டுச் சென்றிருந்தான் என்பது புலனாகும். மருகன் புனல்வாய்ப்பட்டதை யறிந்ததனாலாய தடுமாற்றத்தால், கரிகாலன், ஒன்றுஞ் செய்யத் தோன்றாது வாளா இருந்திருப்பான் என்று கொள்ளினும், அவனோடு சென்றிருந்தவர் அனைவரும் அவனைப்போலவே தடுமாற்றமடைந்து வாளாவிருந்திருப்பார் என்று கொள்ளுதல் கூடுமோ? ஆதிமந்தி, கரிகால்வளவன் புதல்வியேயாயின், அவள், தன் கணவனாகிய சேர வேந்தனைத் தேடிப் பல நாடுகளிலும் பல ஊர்களிலும் தனியளாய் அலைந்து திரிய நேருமோ? அவளோடு ஏவலர் எண்ணிறந்தோர் சென்றிருப்பரன்றே! இவை போன்ற பல ஏதுக்களால், இவள் கரிகாற்சோழன்மகள் அல்லள் என்றும், ஆட்டனத்தி சேரவேந்தன் அல்லன் என்றும் துணியலாம்.

> 'மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
> தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
> கன்னவில் தோளாயோ என்னக் கடல்வந்து
> முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக்கொண்டு
> பொன்னங் கொடிபோலப் போதந்தாள்'
>
> (சிலப். 21: 11-15)

என்று சிலப்பதிகாரத்துக் கூறப்பட்டுளது. ஆயின், இவ் வடிகளில் ஆதிமந்தி, ஆட்டனத்தி என்னும் பெயர்கள் குறிக்கப்படவில்லை. அன்றியும், இச் சிலப்பதிகார அடிகளில், கணவனைப் புனல் கொண்டவுடனே மனைவி புனலின்பின் சென்றாள் என்றும், கடல் காட்டக் கண்டு அவனைத் தழுவிக்கொண்டு மீட்டு வந்தாள் என்றும் கூறப்பட்டுளது; பரணர் பாட்டுக்களிலோ, ஆதிமந்தி, தன் கணவனை நாட்டில் நாட்டில், ஊரில் ஊரில் தேடிக் கலுழ்ந்தாள் என்றும், மருதி என்பவள் காட்டக் கண்டாள் என்றும் கூறப்பட்டுளது; ஆட்டனத்தி கரிகாலன் கண்டிருக்க ஆடின வரலாறு சிலப்பதிகாரத்தில் கூறப்படவில்லை.

அன்றியும், பரணர் பாட்டுக்களில், ஆதிமந்தி கரிகாலன்மகள் என்றாவது, ஆட்டனத்தி வஞ்சிக்கோன் என்றாவது குறிக்கப்படவில்லை. ஆதிமந்தி கரிகால்வளவன் மகளாயின், வரலாறுகளைக் கூறும் நோக்கம் மிக்கவராய பரணர், இவ்வரலாற்றைக் கூறிய பாட்டுக்கள் நான்கனுள் எங்கேனும் இதனைக் கூறியிருப்பரன்றே? பரணர் அங்ஙனம் கூறாவிடினும், சிலப்பதிகார வரலாற்றையே இவ்வாறு அமைத்துக்கொள்ள லாகாதோ எனின், அவ்வாறு

1. அகம். 376.

கொள்வதற்குத் தடையாயிருப்பவற்றை மேலேயே கூறியுள்ளேன். அன்றியும், ஆதிமந்தி கடலினின்று கணவனை மீட்டுக் கொணர்ந்த வரலாறு பரணர் பாட்டுக்களாற் பெறப்படவில்லை; இரண்டிடங் களிலும் காணப்படுவது புனல் இழுத்துச்சென்ற வரலாறு ஒன்றே. இவ் வொன்றனை மட்டுமே கருதி, இவ்வாறு கதை யமைத்தல் பொருத்தமாகத் தோன்றவில்லை. மேலும், சிலப்பதிகாரத்திற் கூறப் பட்டுள்ள செய்திகளுட் சில, தொகைநூல்களுட் கூறப்பட்டுள்ள வரலாற்றுடன் மாறுபடுகின்றன. ஆதலின், அகநானூற்றிற் காணும் இவ் வரலாற்றையும் சிலப்பதிகாரத்திற் காணும் வரலாற்றையும் ஒன்றென மயங்குதல் பொருந்தாதென்க.

மருதி.

இவள், கணவனைத் தேடி யலைந்து திரிந்த ஆதிமந்திக்கு, கடல் வாய்ப்பட் டிருந்த அவனைக் காட்டக் கடலிற்சென்றதனால் பெரும் புகழ்பெற்றவள்.

'மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்' (அகம். 222)

என்னும் அடிகளால் இச் செய்தி அறியப்படும். இங்கே, 'படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்' என்றும், 'மாண்புகழ் பெறீஇயர்' என்றும் கூறியிருப்பவற்றை நோக்குமிடத்து, மருதி, ஆட்ட னத்தியை ஆதிமந்திக்குக் காட்டி, அதனால் கடல்வாய்ப்பட்டாள் என்று கோடலும் அமையும் எனத் தோன்றுகின்றது. அவ்வா றாயின், இவளது அருளின் திறமும், பிறவும் புகழற்பாலனவாகும்.

மத்தி[1].

இவன், பரதவர்களுக்குத் தலைவன்; கழார் என்னும் ஊரினன். கழார், காவிரிக்கரையை அடுத்தது; நெல்வயல் மிக்கது.[2] நீர் நிலைகள் பல வுடையது; மிக்க அழகினது. இவை,

சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து
* * * *
'பல்வேள் மத்தி கழாஅ ரன்ன
எம், இளமை' (அகம். 6)

என்பதனால் அறியலாகும்.

---

1. மத்தி என்று பெயருள்ள தொருவகைக் கடல் மீன் மேல்கடலில் உளது. அதன் தொடர்புபற்றி இவனுக்கு இப்பெயர் வந்திருத்தல் கூடுமோ எனத் தோன்றுகின்றது.

2. அகம். 226.

## ஆய் எயினன்.

இவன் வேள் மரபினன். இது, 'வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்'[1] என்னும் அடியினுல் விளங்கும். எயினன், விரைந்து செல்லுங் குதிரைகளை யுடையவன்; [2]புள்ளிற்குக் காவலா யிருந்தவன்.

நன்னன் என்பவன், புன்னாட்டைக்[3] கடிந்த காலத்தில், எயினன், பாழியின்கண் 'அஞ்சல்' என்று கூறி, அந்நாட்டினரைப் பாதுகாத்தான்.[4] அதனுல், நன்னனுக்கும் எயினனுக்கும் பகைமை விளைந்தது. இறுதியில், நன்னனுக்குத் துணையாயிருந்த மிஞிலி என்பவன், இவ் வெயினனோடு பாழிப்பறந்தலையிற் பொருதான். அப் போரில் எயினன் இறந்துபட்டான். அப்பொழுது புட்கள்,[5] எயினனுடம் பின்மேல் ஞாயிற்றின் வெப்பம் தாக்காவாறு சிறகுகளால் வெயிலை மறைத்துப் பறந்து சுழன்றன. நன்னன் அதனைக் காணவும் பொருது மறைந்திருந்தான். எயினன் இறந்து பட்டதை யறிந்து

1. அகம். 208.
2. அகம். 142.
3. 'புள்ளுநாடு கடிந்தான்' என்னும் பாடம், பொருட்சிறப் புடையதாகக் காணவில்லை. இப்போது மைசூர் ராஜ்யத்தில், மைசூருக்குத் தெற்கேயுள்ள 'ஹெக்கட தேவன கோட்டெ' தாலுகாவின் ஒரு பகுதி, முற்காலத்தில் புன்னுடு என வழங்கி வந்தது. அது, முன்னாட்களில் புகழ் பெற்ற நாடா யிருந்தது என அறியப்படுகின்றது.
4. அகம். 396.
5. சகுந்தலைக்குப் புட்கள் உதவி செய்தது ஈண்டு அறிதற்பாலது. நல்லோர் இறந்துபடின் கருடன் முதலிய பறவை அவ்விடத்தில் வட்ட மிடும் என்பது வழக்காறு. இவ்வாறன்றி, 'புள்ளுநாடு கடிந்தென' என்னும் பாடமே கொண்டு, ஆய் எயினன் அப் பறவைகளைக் காத்தான் என்றும், அதனுல் உண்டாய பகைமை யடியாக நிகழ்ந்த போரில், அவன் இறந்த தனுல், தமக்குச் செய்த உதவியை எண்ணிப் பறவைகள் அவன்மேல் வெயில் படாவாறு நிழல் செய்தன என்றும் கொள்ளலாம் என்பர். ஆயின், நன்னன் பறவைகளைக் கடிந்ததன் காரணம் தெரியவில்லை. நிற்க, ஆய் எயினன், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்குச் சேனுபதியா யிருந்தான் என்றும், அவன், நன்னன் படைத்தலைவனுகிய மிஞிலி மிக்க வீர முடையவன் என்று பிறர் தடுத்துக் கூறியதையுங் கேளாமல், அவனோடு (மிஞிலியோடு) போர் தொடங்கினன் (அகம். 396) என்றும், போரில் எயினன் இறந்துபட, 'அவன் உரிமைமக்களிர் திரண்டெழுந்து காவிரி யாற்றுக்கு வந்து தங்கள் வழக்கப்படி சரமக்கிரியை முடித்து, அலங்கரித்த எயினன் போன்ற வடிவமொன்றனை அந்நீரிற் போகட்டு, நீராடிப் பெயர்ந்து போயினர் (அகம். 181)' என்றும், 'இப்பெரும் பூசல் கேட்டு, மதுரையில் அடங்கிக் கிடந்த அருதை அச்சம் நீங்கி மகிழ்வானுயினன் (அகம். 208)' என்றும், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (நற்றிணை.

வேள்மகளிர் வருந்தி அழுத பூசலை அகுதை என்பவன் தீர்த்து, அவர்களுக்கு ஆறுதல் செய்தான்.

---

பாடப்பட்டோர் வரலாறு : பக்கம். 92, 93.) எழுதியுள்ளார். அவர், மேலே குறித்த அகம். 396-ஆம் பாட்டில் கூறப்பட்டுள்ள வரலாறு,

'கொடித்தேர்ப்
பொலம்பூ ணன்னன் [1]புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்ச லென்ற ஆஅ யெயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன், உயிர்கொடுத் தனனே சொல்லிய தமையாது'

என்னும் இத்துணையே. பிறர் தடுத்துக் கூறிய செய்தி, இப்பாட்டினால் அறியப்படவில்லை. ஆய் எயினன், சேரலன்சேனாபதி என்பதும் யாண்டும் கூறப்படவில்லை. இனி, அகம். 181-ஆம் பாட்டில்,

'பொய்கை சூழ்ந்த [2]பொழின்மனை மகளிர்
கைசெய் பாவை துறைக்க ணிறுக்கும்
மகர நெற்றி வான்றோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
புகாஅர் நன்னாட் டதுவே'

எனக் கூறப்பட்டுள்ளதே யன்றி, ஆய்எயினன் உரிமைமகளிர், அவனைப் போலச் செய்த வடிவ மொன்றனை நீரிற் போகட்டனர் என்பது கூறப்பட்டிலாமை யறிக. இனி, அகம். 208-ஆம் பாட்டில்,

'உருவினை நன்ன னருளான் கரப்பப்
பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தார் அருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு'

எனக்கூறப்பட்டுளது. இதனால், 'வேள் மகளிர் பைந்தார் அருக்கிய பூசலை அகுதை களைந்தான்' என்பது பெறப்படும். நாராயணசாமி ஐயர், 'அகுதை மகிழ்வானாயினான்' என்று எழுதியிருத்தலின், அவர், 'களைதந் தாங்கு' என்னும் பாடத்தைக் 'களிதந் தாங்கு' எனக் கொண்டனர் போலும்; அவ்வாறு பாடங்கொள்ளின், 'வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை' என்ற அடைமொழிக்கும்,

'அகுதை களைதந் தாங்கு மிகுபெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே'

என, வந்து நல்கினள் என்பதற்கும் பொருந்துதல் இல்லை. இக் கூறியவற்றால், நாராயணசாமி ஐயர் எழுதியவை அமையாமை அறிக.

---

1. புன்னாடு. பாடாந்தரம்
2. பொழின் மனை. பாடாந்தரம்.

'வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
விசும்பிடை தூர வாடி' (அகம். 181)

எனவும்,

'புள்ளொருங்
கங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்
றெண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல்' (அகம். 208)

எனவும் கூறியிருத்தலின், பறவைகள் வானத்தில் பறந்து திரிந்து, எயினன்மேல் வெயில்படாவாறு நிழல் செய்தது அறியப்படும்.

ஆய் எயினன் வாய்மொழி தவறாதவன். இதனை,

'பொலம்பூ ணன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன், உயிர்கொடுத் தனனே சொல்லிய தமையாது
தெறலருங் கடவுள் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்
தார்வ நெஞ்சம் தலைத்தலைச் சிறப்ப
நின், மார்புதரு கல்லாய் பிறனா யினையே' (அகம். 396)

என்னும் அடிகளால் பரணர் நயம்படக் கூறியுள்ளார். எயினன், மிஞிலியால் இறந்துபட்டபோழ்து, வேள்மகளிர் பலர் அழுது கவன்றனர் எனக் கூறியிருத்தலானும், 'வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்' என்று கூறியிருத்தலானும், இவன் வேள் மரபினன் என்பது நன்கு விளங்கும். அங்கனமாகவும், 'எயினன் என்றமையால், வேடர் மரபின னாவான்' என்று அகநானூற்றுப் பதிப்பாசிரியர் (அரசர் முதலியோர் வரலாறு : பக்கம். 39.) எழுதியிருப்பது பொருந்துவதாகக் காணவில்லை.

## அகுதை

இவன் பெயர், அஃதை எனவும் சில விடங்களிற் காணப்படுகின்றது. இவன், நாளோலக்கத்தி லிருக்கையில், தன்பால் வரும் புலவர்களுக்கு இனிய கள்ளுண வீந்து களிறும் வழங்கு மியல்பினன்.

அகுதை, அகவன்மகளிர்க்குப் பிடியானைகளை நல்கினவன்[1]. ஆய் எயினன், மிஞிலியால் இறந்துபட்டபொழுது, எயினனைச் சார்ந்த வேண்மகளிர் பலர் அழுது புலம்பினர். அவ்வொலியைக் கேட்டும் நன்னன் அங்குச் செல்லாததனை யறிந்து, இவன்

1. குறுந். 298

(அகுதை) ஆண்டுச் சென்று, அம் [1]மகளிரின் பெருந்துயரைப் போக்கி [2]ஆறுதல் செய்தான். இதனால், இவனது போருட்டிறன் புலனாகும்.

மிஞிலி

இவன் பெயர் மிஞிலி யென்பதுவே யாகும். ஞிமிலி என ஓரிடத்திற் காணப்படுவது எழுத்துநிலை மாறியதனால் நேர்ந்தது என்று கொள்ளுதல் பொருந்தும். இவன், ஆய்எயினனைப் பொருது வெல்வதற்குத் தனக்குத் துணை புரிந்தால், தான் [3]ஊட்டுப்போடுவ தாக, நன்னனது பாழியிலுள்ள பேயை வேண்டிக்கொண்டான். அவ் வாறே வெற்றி கிடைத்ததனால், அப் பேய்க்குப் பிறரால் செய்தற் கரிய ஊட்டு எதிர்ந்தான். இவன் வாய்மை யுடையவன். இவை,

'நன்னன் பாழி
ஊட்டரு மரபி னஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி ஞிமிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்

---

1. அகம். 208.

2. 'அகுதை என்பவன், தான் மிக்க வீரமுடையவனா யிருந்தும் இவ்ஆய்எயினனுக்கு நடுங்கி ஒடுங்கி யிருந்தனன். . . . . இப்பெரும் பூசல் (ஆஅய்எயினன் இறந்ததனாலாய பூசல்) கேட்டு, மதுரையில் அடங்கிக்கிடந்த அகுதை அச்சம் நீங்கி மகிழ்வானாயினன்' (அகம். 208) என்று, அ. நாராயண சாமி ஐயர் (நற்றிணை. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 92, 93.) எழுதியுள் ளார். அகுதை, ஆய்எயினனுக்கு நடுங்கி ஒடுங்கி யிருந்த செய்தி அறியப்பட வில்லை; எயினன் இறந்ததுகேட்டு அகுதை மகிழ்ந்தான் என்பதைக் குறித்து மேலேயே எழுதியுள்ளேன்.

3. 'காளி யூட்டும் கணியான் ஆட்டும்' என வழங்கும் வழக்கானும் காளிக்கு ஊட்டுப்போடுதல் அறியப்படும்.

'அப்பொழுது (ஆய்எயினன் மிஞிலியோடு போர் தொடங்கிய பொழுது), அந்நன்னன் தனது பேய்க்கூட்டருகில் (அகம். 142) நின்று கூறிய கட்டளையை மேற்கொண்டு, அவன் படைத்தலைவனாகிய மிஞிலி வந்து எதிர் நின்று போர்தொடங்கி . . . . கொன்றான்' என்று, அ. நாராயணசாமி ஐயர் (பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 93.) எழுதியுள்ளார். அவர், அகம். 142-ல், 'நன்னன் பாழி, ஊட்டரு மரபி னஞ்சுவரு பேஎய்க், கூட்டெதிர் கொண்ட வாய் மொழி ஞிமிலி' என்றுள்ள அடிகளில், 'பேஎய்க், கூட்டெதிர் கொண்ட வாய்மொழி ஞிமிலி' என்னும் பகுதிக்கு, 'பேய்க்கூட்டருகில் நின்று கூறிய கட்டளையை மேற்கொண்ட ஞிமிலி' என்று பொருள்கொண்டுள்ளார் என்பது புலனாகின்றது. இப் பகுதிக்கு இவ்வாறு பொருள்கொள்ளுதல் பொருந்தும் எனத் தோன்றவில்லை.

வெள்ளத் தானை எயினற் கொன்றவக்
தொள்வா ளமலே யாடிய ஞாட்பின்' (அகம். 142)

என்னும் அடிகளால் விளங்கும். வெற்றி வேண்டிக் கொற்றவையை நேர்தலும், அவ்வாறே விழவெடுத்தலும் வழக்காதல் அறிக. பொங்கல், ஊட்டு, கொடை, விழா இவை ஒவ்வொன்றும் சிறு தெய்வங்களுக்கெடுக்கும் பூசனைகளுள் முறையே ஒன்றனி னென்று உயர்வுடையனவாக வழங்குகின்றன.

மிஞிலி, பகைவரின் பல அரண்களை அழித்தவன்; பெரும் படைகளை யுடையவன். இவன், நன்னனுக்கு ஆற்றவேண்டுவன வெல்லாம் முறைப்படி வழுவாது ஆற்றி, பாழி, பாரம் என்னும் ஊர்களை அவனிடமிருந்து பெற்றான் எனத் தெரிகின்றது[1].

'பாரத்துத் தலைவன் ஆர நன்னன்
ஏழி னெடுவரைப் பாழிச் சிலம்பு' (அகம். 152)

என, பரணர் கூறுதலின், பாரம் என்னும் ஊர் நன்னனுடையது என்பது விளங்கும். ஆயின், அவரே,

' மிஞிலி காக்கும்
பாரத் தன்ன ஆர மார்பின்
* * * ஓரி' (நற். 265)

என்று கூறியிருத்தலின், அவர் காலத்திலேயே, அது (பாரம்), மிஞிலிக்கு உரியதாயிற்று என்பது அறியப்படும். ஆதலின் மிஞிலி, பாரத்தையும், பாழியையும் நன்னனால் அருளப்பெற்றான் என்று கொள்ளுதலே பொருந்தும். மிஞிலி, நன்னனால் பாழியை அருளப்பெற்ற வரலாறும், அவன் வாய்மையுடையவன் என்பதும்,

---

1. 'நன்னனுடைய பாழியும் பாரமும் பிறவும் சேனாபதி மிஞிலி என்பவனால் முன்பு காக்கப்பட்டு வந்தன' என்று அ. நாராயணசாமி ஐயர் (பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 93.) எழுதியுள்ளார். 'சேனாபதியால் முன்பு காக்கப்பட்டு வந்தன' எனவே, அவை, நன்னனால் பின்பு காக்கப்பட்டு வந்தன என்பது அவர் கருத்துப் போலும். நன்னன் காலத்தில், மிஞிலி இறந்துபட்டான் என அறியப்படவில்லை; தன் சேனாபதியாகிய மிஞிலியினிடமிருந்து பாழி முதலிய ஊர்களை நன்னன் பெற்ற செய்தியும் தெரியவில்லை. 'முறையியல் வழாஅ தாற்றிப் பெற்ற,...நன்னன் பாழி' என்பதற்கு, 'நன்னனிடமிருந்து பெற்ற பாழி' எனப் பொருள்கொள்ளுதல் அமைவுடையதாகத் தோன்றுதலின், படைத்தலைவனாகிய மிஞிலி, நன்னனுக்கு ஆற்றவேண்டுவனவற்றை வழுவாது ஆற்றி, அவன்பால் பாழியையும் பாரத்தையும் பெற்றான் என்றலே பொருந்துமென அறிக. இனி, முன்பு மிஞிலியாற் காக்கப்பட்ட பாழி முதலியவற்றைப் பின்பு களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் ஆண்டு வந்தான் எனின், அதற்கும் சான்று இலது என்க.

'முறையியல் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி' (அகம். 142)

என்னும் அடிகளால் அறியப்படும். மிஞிலி, தான் நேர்ந்திருந்த படியே ஊட்டு எதிர்ந்ததனாலும் அவனது வாய்மை அறியலாகும்.

நன்னன்

இவன் [1]வேள்மாபினன் ; [2]நன்னன்உதியன் என்றும் வழங்கப் படுவான். கொண்கானத்து நன்னனும் இவனே. இது, மலைநாட்டி லுள்ள எழில் மலையைக் கூறும்பொழுது ஓரிடத்தில், அது [3]நன்ன னுடையது என்றும், பிறிதோரிடத்தில், அது கொண்கானத்து நன்னனுடையது என்றும் கூறியிருப்பதனால் துணியலாகும். மலைபடு கடாத்தின் தலைவன் இவன் அல்லன்[4]. எழில்மலையும், பாழியும், பார

1. 'இவன் (நன்னன்) சிற்றரசனாதலின் வேள் என்னும் பட்டமெய்தி னான்' என்றனர் (நற்றிணை. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 91.) நாராயண சாமி ஐயர். 'நன்னன் வேண்மான்' (அகம். 97) எனப்படுதலின், இவன், வேள் மரபினன் என்று கொள்ளுதல் அமைவுடையதாகும்.

2. 'நன்ன னுதிய னருங்கடிப் பாழி' (அகம். 258)
'நன்னன் பாழி' (அகம். 142 ; அகம். 152.)

என்னும் இடங்களில், நன்னன், பாழியை யுடையவன், என்றும், நன்ன னுதியன் என்னும் பெயருடையவன் என்றும் கூறியிருத்தலின், இஃது அறியப்படும்.

3. 'பாரத்துத் தலைவ னார நன்னன்
ஏழி னெடுவரைப் பாழிச் சிலம்பில்' (அகம். 152)
'நன்ன னன்னாட், டேழிற் குன்றத்து' (அகம். 349)
'பொன் படு கொண்கான நன்ன னன்னாட்
டேழிற் குன்றம்' (நற். 391)

கொண்கானம் என்பதுவே கொங்கணம் என மருவி வழங்குகின்றது.

4. மலைபடுகடாத்தின் தலைவனாய நன்னனுக்குத் தகப்பன் ஆகிய நன்னன் என்பவனும் கொண்கானத்து நன்னனும் ஒருவனே என மஹா மஹோபாத்யாய வே. சாமிநாத ஐயரவர்கள் (புறநானூறு. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 72 ; பத்துப்பாட்டு. மூன்றும் பதிப்பு. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 56, 57.) எழுதியிருக்கின்றார்கள். மலைநாட்டின் ஒரு பகுதி யை யாண்ட சிற்றரசனாகிய நன்னன், நெடுந்தூரத்ததாகிய—தொண்டை நாட்டிலுள்ள—பல் குன்றக் கோட்டத்தையும் ஆண்டு வந்தான் எனக் கொள் வதில் ஐயம் உண்டாகின்றது. அக்காலத்தில் முடிவேந்தராய் விளங்கிய சேர வேந்தரும் தமிழ் நாட்டில் இத்துணை நெடுந்தூரம்வரை ஆண்டனர் எனத் தெரிய வில்லை. பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்து வேள் என்னும் அடைமொழி, கொண்கானத்து நன்னனினின்றும் இந்நன்னனைப் பிரித்துக் காட்டுதற்காகவே கொடுத்தது போலத் தோன்றுகின்றது.

மும் இவனுக்கு உரியவையா யிருந்தன. மிஞிலி யென்பவன், இவனுக்குப் பல உதவிகள் செய்து, இவனது பாழியையும் பாரத்தையும் பெற்றான் என்ற வரலாறு, மிஞிலியைக் குறித்துக் கூறுமிடத்திற் கூறியுள்ளேன். மிஞிலி, இந் நன்னனது பாழியிலேயே ஆய் எயினனைக் கொன்று, பேய்க்கு ஊட்டு எதிர்கொண்டான்.

பிண்டன் என்பவன் எஞ்ஞான்றும் இடையூறு செய்து கொண்டிருந்தான் எனவும், அவனது வலிமையை இந் நன்னன் அடக்கினான் எனவும் தெரிகின்றது[1]. நன்னனது பாழியில், வேளிர், அருங்கலனையும் பொன்னையும் புதைத்து வைத்திருந்தனர்; அவை பிறரால் கைப்பற்ற முடியாதனவாயிருந்தன என்பது,

'நன்ன னுதிய னருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினு மருமைநற் கறிந்தும்' (அகம். 258)

எனவும்,

'பாழி யாங்கண்
வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த
அருங்கல வெறுக்கையின் அரியோள்' (அகம். 372)

எனவும் வரும் பகுதிகளால் விளங்கும்.

நன்னனது பறம்பில், பணையான் (சாணைக்கல் செய்பவன்), பயினொடு சேர்த்திய கல் உறுதிப்பாடுடையதாயிருக்கும் என்று கூறப்பட்டுளது[2]. நன்னன், புன்னாட்டைக் கடிந்ததன்பொருட்டு ஆய்எயினனுக்கும் நன்னனுக்கும் பகைமை யுண்டாயிற்று. அதனால், நன்னனைச் சார்ந்த மிஞிலி, ஆய்எயினனோடு பொருது, அவனைக் கொன்றான். அப்பொழுது புட்கள் அவ்வெயினன்மேல் வெயில்படாவாறு மறைத்துப் பறந்து திரிந்தன. அவற்றைக் காணப் பொறாத நன்னன் வெளியே செல்லாது, கோயிலினுட் கரந்திருந்தான். இவை,

'வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
* * * *
* வீழ்ந்தெனப் புள்ளொருங்
கங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்
றொண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்
துருவினை நன்னன் அருளான் கரப்ப' (அகம். 208)

1. அகம். 152.

2. நெடுவேளாவியின் பொதினி (பழநி) மலையைக் கூறுமிடத்தும் இவ்வாறு கூறப்பட்டுளது. அகம். 1.

என்னும் பகுதியினுல் விளங்கும்.

'கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
கடும்பகல் வழங்கா தாஅங்கு' (அகம். 148)

என்னும் அடிகளால், ஆய்எயினன் வீழ்ந்த போழ்து, பறவைக ளெல்லாம் வெயில் மறைத்ததைக் காண்டற்குச் செல்லாத கூகை, அதனுல் நாணமுற்றுப் பகலில் வெளிப்படாததாயிற்று என்பது போதரும். இதனை ஆராயுமிடத்து, இங்குக் கூகை எனப்பட்டவன் நன்னனே என்றும், ஆய்எயினன் இறந்துபட்ட பொழுது அவனைக் காணச் செல்லாதது பற்றி ஊரவர் பழிகூற, அதற்கு நாணி, அவன் வெளிச்செல்லாதிருந்தான் என்றும் கொள்ளலாம் எனத் தோன்றுகின்றது. நன்னன், இறந்துபட்ட எயினனைக் காணச்செல்லாதது, மேற்காட்டிய அகம். 208-ஆம் பாட்டால் நன்கு விளங்கும். ஆகவே, தான், எயினனைக் காணச்செல்லாததுபற்றிப் பிறர் கூறிய பழிமொழிக்கு நாணி, நன்னன் பகலில் வெளிப்படா திருந்தானுகலின், அவன் பகலில் வெளிப்படாத கூகை எனப் பரண ரால் இழித்துக் கூறப்பட்டான் என்று கொள்ளுதல் பொருத்த முடையதாகும்.

ஒரு காலத்தில், நன்னனது தோட்டத்திலிருந்த நறுமாவின் காயொன்று கீழேவீழ்ந்து ஆற்றுப் புனலில் அலைப்புண்டு செல்ல, அங்கே நீராடச் சென்ற பெண்ணொருத்தி, அஃது அரசனுக்கு உரியது என அறியாது எடுத்து உண்ட பிழைக்காக, எண்பத்தோர் யானைகளும், அவள் நிறைக்குப் பொற்பாவையும் தருகின்றேம் என்று கூறி அப்பெண்ணின் தமர் வேண்டிக்கொண்டதனையும் மறுத்து, நன்னன் அவளைக் கொன்றுன் என்னும் வரலாறென்று அறியப்படுகின்றது.

'புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றென்பது களிற்றொ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை' (குறுந். 292)

என்னும் அடிகளைக் காண்க.

இவ்வாறு நன்னன் தன் நறுமாவின் பசுங்காயைத் தின்ற பெண்ணைக் கொலைபுரிந்த கொடுமையை யறிந்த கோசர், சூழ்ச்சி செய்து, அம் மரத்தை வெட்டி யழித்து, அதனை நாட்டிற் போக்கினர். இது,

'நன்ன
[1]னறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமோல்' (குறுந். 73)

என்னும் அடிகளால் விளங்கும். நாட்டிற் போக்கியதாவது-கோசர், அம் மாமரத்தை வேரோடு வெட்டி அதனைத் தம் நாட்டிற்குப் போக்கினர் எனக் கொள்ளல்வேண்டும். அல்லது, கோசர் அம் மரத்தை வெட்டி, நன்னது நாட்டிற்போக்கினர் என்றும் கொள்ளலாம். நறுமா என்றதனால், அது மாமரமே என்பது தெளிவாகும். கோசர், நன்னனது மாமரத்தை வெட்டிய வரலாறு கூறப்பட்டிருத்தலானும், நன்னன், தனது தோட்டத்துப் பசுங்காயைத் தின்றதன் பொருட்டுப் பெண்ணைக் கொலைபுரிந்தான் என்னும் செய்தி அறியப் படுதலானும், அம் மாமரத்தையே கோசர் வெட்டியழித்தனர் என்று கொள்ளுதல் பொருந்துவதாகும்; இங்கனம் நடத்தலும் இயல்பே. இனி, இவ் வடிகளுக்கு, நன்னனது மாமரத்தை வெட்டி, அவனையும் நாட்டில்நின்று காட்டிற்குப் போக்கிய கோசர் எனப் பொருள் கொள்ளுதல் இத்துணைப் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை.

'விழைதக வோங்கிய கழைதுஞ்சு மருங்கின்
கானமர் நன்னன்' (அகம். 392)

என்பதனால், நன்னன், காட்டில் இருந்தமை பெறப்படுதலின், 'இவன் (நன்னன்), தன் நாட்டினின்றும் வெளியே துரத்தப் பெற்ற வரலாறு குறுந்தொகை 73-ஆம் பாட்டிலும் குறிப்பிட்டுள்ளது' என்று அகநானூற்றின் பதிப்பாசிரியர் எழுதியுள்ளார்[2].

நன்னன், கானத்தி லிருந்தமை கூறும் பாட்டில்,

'பிரியுந ரையின்
வினைதவப் பெயர்ந்த வென்வேல் வேந்தன்
முனைகொல் தானையொடு முன்வந் திறுப்பத்
தன்வரம் பாகிய மன்னெயி லிருக்கை
யாற்றா மையிற் பிடித்த வேல்வலித்
தோற்றம் பிழையாத் தோல்புகழ் பெற்ற
விழைதக வோங்கிய கழைதுஞ்சு மருங்கிற்
கானமர் நன்னன் போல
யானா குவென்நின் நலந்தரு வேனே' (அகம். 392.)

1. மாமரம், நன்னனது காவன்மரம் போலும். 'ஓட்டிற் போக்கிய' என்னும் பாடத்திற்கு, 'நன்னனைப் போரில் தொலைத்த' என்று பொருள் கொள்க.

2. அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 53.

என்னும் பகுதியில், வேந்தன், தனது தானையொடு வந்து இறந்ததுவும், நன்னன், பிடித்த வேல் பிழையாது புகழ்பெற்றதுவும், நலந்தந்ததுவும் கூறப்பட்டுள்ளன. குறுந்தொகைப் பாட்டில், நாட்டிற் போக்கியவர் கோசர் எனக் கூறப்பட்டுளது. ஆதலின், அகநானூறு கூறும் வாலாற்றேடு, குறுந்தொகை கூறும் வாலாற்றை இணைத்தல் அமையாமை அறிக.

நன்னன், வேந்தரை வென்று, [1]அவர் உரிமை மகளிரின் கூந்தலால் கயிறு திரித்தவன். இச் செய்தி,

'பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்த ரோட்டிய எஃகுவேல் நன்னன்
கூந்தன் முரற்சியிற் கொடிதே' (நற். 270)

என்னும் அடிகளால் அறியப்படும்.

## கூகை (நன்னன்).

'ஆய் எயினன் மிஞிலியோடு பொருது வீழ்ந்த காலத்தில், அவனைக் காணப்போகாமையின், கூகை நாணிப் பகலில் வெளியே செல்லுதல் ஒழிந்து மிக்க இடும்பை அடைந்தாற்போல்'[2] என்பது மட்டுமே கூகையைப்பற்றிப் பரணர் கூறியிருக்கும் செய்தி. இங்கு, கூகை எனக் கூறியிருப்பது நன்னனைக் குறித்ததாகக் கொள்ளுதல் பொருத்தமாகும் என்று மேலேயே எழுதியுள்ளேன். நன்னன், ஆய் எயினனைக் காணப் போகாமையின், ஊரார் கூறும் பழிக்கு நாணிப் பகலில் வெளிச்செல்லாதிருந்ததைக் கருதி, பகலில் வெளிச்செல்லாத கூகை என அவனைப் பரணர் கூறினர் எனக் கொள்ளுதல் இயைபுடையதாகும். இவ்வாறன்றி, நன்னனுக்குக் கூகை என்றும் ஒரு பெயர் இருந்திருக்காலம் என்று கருதுவாரும் உளர். இவ்வாறு ஊகிப்பதனினும் மேற்கூறிய எனது கருத்துப் பொருத்த முடையதாதலறிக.

## பிண்டன்.

இவன், பெருவேந்தன் அல்லன். ஆயினும், பெருமை மிக்க தலைவர்களுக்கு இடையூறு இழைத்துக் கொண்டிருந்தான்.

---

1. 'பிண்டன் முதலானோருடைய உரிமைமகளிரைப் பற்றி வந்து, அம் மகளிர் தலையைச் சிரைத்து அக் கூந்தலைக் கயிறாகத் திரித்து அக் கயிற்றினால் அப் பகையாசரின் யானையைப் பிணித்து வந்தவன் (நற். 270)' என்று நாராயணசாமி ஐயர் (பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 92.) எழுதியுள்ளார். பிண்டன் மனைவியர் கூந்தலாற் கயிறு திரித்தமை இப் பாட்டினால் அறியப் படாமை காண்க. இச் செய்தி யாண்டும் கூறப்படவில்லை.

2. அகம். 148.

'தனந்தரு நன்கலம் சிதையத் தாக்கும்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்' (அகம். 152)

என்பதனல், இவன் இடையூறு செய்துவந்தான் என்பது அறியப்படும். இவனை, பாரத்துத் தலைவனுகிய நன்னன் வென்றான்.

### வேளிர்.

வேள்மரபின ராகிய வள்ளல்கள் பலர் ; தலைவர் பலர். நன்னனும் வேள்மரபினன் என்பது மேலே கூறப்பட்டது. [1]நன்னனது பாழியில், வேளிர் அருங்கலங்களைப் புதைத்து வைத்திருந்தனர் என்பதும், அவை பிறரால் கொள்ளுதற்கு அரியனவா யிருந்தன என்பதும் மேலே நன்னனைக் குறித்து எழுதிய விடத்தில் குறிக்கப் பட்டன.

வேளிருள் பதினல்வர் ஒருங்கு கூடி, [2]கழுவுள் என்பவனது காமூரை யழித்தனர் என்றும், சோழன் கரிகாலனோடு வெண்ணி வாயிலில் வேந்தர் போர் செய்த காலத்து, அவ் வேந்தரோடு சென்ற வேளிர் பதினொருவர் அப்போரில்[3] கெட்டோடினர் என்றும் அறியப்படுகின்றன. பதினல்வர், பதினொருவர் என்னும் தொகையினர், இன்ன வூரினர் என விளங்கவில்லை. [4]குன்றூர் என்னும் ஊர் வேளிருடையது எனத் தெரிகின்றது.

---

1. 'இவன் (நன்னன்), ஆற்றலாற் பிண்டன் முதலானோரை வென்று மிகுந்த பொருளீட்டி, அப் பொருளைப் பாழியிற் சேமித்து, வேளிர் பலரைக் காக்குமாறு வைத்திருந்தனன் (அகம். 258)' என்பர் (நற்றிணை. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 92) நாராயணசாமி ஐயர். அவர் குறித்த அகப்பாட்டு, அவ்வாறு பொருள் தாராமை யறிக. 'இவனது பாழியாங்கண் வேண் முதுமாக்கள் நிரம்பப் பொன்னைவைத்துக் காப்புள்ளதாய்ச் செய்திருந்தனர்' என அகநானூற்றுப் பதிப்பாசிரியர், நன்னனைப் பற்றிக் கூறுமிடத்து எழுதியிருத்தலை (அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 53.) நோக்குக.

2. அகம். 135 ;

3. அகம். 246.

4. நற். 280.

இவ்வூர், கீழ்கடலையடுத்தது என்பது,

'தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணஅது
தண்பெரும் பௌவம் அணங்குக' (குறுந். 164)

என்னும் குறுந்தொகைச் செய்யுளாலும் அறியப்படுகின்றது.

## கழுவுள்.

இவன், இடையர் தலைவன் என்பது [1]பதிற்றுப்பத்தால் அறியப்படுகின்றது. இவனது ஊர் காமூர். அது, வேளிர் பதின்ல்வர் ஒருங்குகூடிப் பொருத போரில் அழிவுற்றது.[2]

தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, கழுவுளை அடக்கி, இவன் மதிலைக் கைக்கொண்டான்[3] என்று பதிற்றுப்பத்து கூறுகின்றது.

## தித்தன் வெளியன்.

இவன், தித்தன் மகன்[4] போலும். இவன், உறையூரிலிருந்து அரசு செய்தவன். இவனது நாளோலக்கம் மிக்க சிறப்பாக நடைபெறும். அங்குக் கிணை முதலிய பல இயங்கள் ஒலிக்கப்படும். ஒருகால், கட்டி என்பவன் பாணனைத் துணைக்கொண்டு இவனோடு பொருதற்குவந்து, இவனது நாளவையி லுண்டான கிணையோசையைக் கேட்டு, இவன் பெருமையை அறிந்து, போர்புரியாதே யோடிவிட்டான். அச் செய்தி ஊர் முழுவதும் பரவி, பேரொலியை உண்டாக்கிற்று[5].

தித்தன்வெளியன், பாணரைப் புரந்து புகழ் பெற்றவன்; பெரும்படையை யுடையவன். இவனது கானலம் பெருந்துறையில்

---

1. பதிற் 71.
2. 'வீயா விழுப்புகழ் விண்டோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போல
விளிந்தன்று' (அகம். 135)
3. பதிற். 71.
4. தித்தன் என்பவனும் தித்தன் வெளியன் என்பவனும் ஒருவனே யெனக் கருதி, அகநானூற்றுப் பதிப்பாசிரியர் (அரசர் முதலியோர் வாலாறு. பக்கம். 50.) எழுதியுள்ளார். தித்தன்வெளியன் எனப் படுதலின், இவன், தித்தன்மகன் எனக் கொள்ளுதலே அமைதி எனத் தோன்றுகின்றது. வீரை வெளியன் தித்தன் என்பவனும் இவனே என்றும் அகநானூற்றுப் பதிப்பாளர் எழுதியுள்ளார். அவன், வெளியன் மகனாகிய தித்தன் என்றலே அமைதியாகும். தித்தன், தித்தன்வெளியன், வெளியன்தித்தன் என்னும் பெயர்களை நோக்குமிடத்து, முதலில் தித்தன் என்பவனும், அவனுக்குப் பின் தித்தன் மகனாகிய வெளியன் என்பவனும், அவனுக்குப் பின் வெளியன் மகனாகிய தித்தன் என்பவனும் வாழ்ந்திருத்தல் வேண்டும் எனத் தோன்றுகின்றது. வெளியன்தித்தன் என்பவன், தித்தனுக்குப் பெயரனுவானாகலின், பாட்டனாகிய தித்தனது பெயர் இடப்பெற்றான் எனக் கொள்ளுதல் சிறக்கும். இவ்வாறாயின், இம் மூன்று பெயரும் தித்தனையே குறிப்பதாகக் கொள்ளுதல் அமையாதாகும்.
5. அகம். 226.

மரக்கலங்கள் வந்திருக்கும். அங்கே இருக்கள் திரளாயிருக்கும் என்றும், அவை கலங்கள் சிதையத் தாக்கும்[1] என்றும் கூறப்பட்டுளது.

### கட்டி.

கட்டி என்பவன், உறையூரிலிருந்து ஆட்சி புரிந்த தித்தன் வெளியனோடு போர் புரிய எண்ணி, தனக்குத் துணையாகப் பாணன் என்பவனைக் கூட்டிக்கொண்டு சென்றான். சென்றவன், தித்தனது நாளவைக்கட் காலையில் ஒலிக்கும் கிணைகளின் ஓசையைக் கேட்டதும், அவனது பெருமையை உணர்ந்து, அஞ்சி, ஓடிவிட்டான். அச் செய்தி, நகரெங்கும் பரவிப் பேரொலியை யுண்டாக்கிற்று.[2]

### பாணன்.

இவன், வடநாட்டினன்[3]; மிக்க வலியுடையவன்; தித்தன் வெளியனோடு கட்டி என்பவன் பொருதற்குச் செல்கையில், அவனுக்குத் துணையாகச் சென்றவன்; மற்போர் செய்வதில் கைதேர்ந்தவன்; ஒருகால், ஆரியப்பொருநனொருவனோடு மற்போர் புரிந்து அவனை வென்றான்.[4] அவன் தோள்கள், இவன் கையிடத் தகப்பட்டு ஒழிந்தன. இதனை,

‘ பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருந
னிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை ’ (அகம். 386)

என்னும் அடிகளால் அறியலாம். இவ்வடிகளை நோக்கின், பாணனுக்கும் ஆரியப்பொருநனுக்கும் நேர்ந்த மற்போரில், பாணன், பொருநனைத் தன்மார்புறச் சேர்த்து, அவன் தோள்களைத் தன் இரண்டு கைகளாலும் இறுகப் பிணித்துக்கொள்ள, பொருநன், பாணனிடத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளும்பொருட்டு முழு வலியோடும் தன் தோள்களை அசைத்து இழுக்க முயன்றானாக, முயன்றபோது, பாணன் தான் இறுகப் பிடித்திருந்த பிடியை நழுவவிடாமையின், பொருநன்தோள்கள் பாணன் கையினிடத்தனவாயொழிய, பொருநன் வெளிப்பட்டான் என்பது போதரும்.

---

1. அகம். 152.
2. அகம். 226.
3. அகம். 325.
4. ‘ ஆரியப்பொருநனுல் (பாணன்) மற்போரில் தோல்வியுற்றான் ’ என்று அகநானூற்றுப் பதிப்பாசிரியர் (அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 55.) கூறுகின்றார்.

மற்போரில் இவ்வாறு நேர்ந்திருத்தலும் கூடும். இதனால் பாணனது வலிமை புலனாகும்.

கணையன்.

இவன், தன்னைச் சேர்ந்த ஆரியப்பொருநனை, மற்போரில் தேர்ந்தவன் என்று கூறி, கொண்டாடினான். அப்பொழுது பாணன் என்னும் வலிய வீரன், அப்பொருநனைத் தன்னோடு மற்போர் செய்யுமாறு விழைந்தான். அப்போரில் ஆரியப்பொருநனே வெல்வான் என்று, கணையன் உறுதி கூறினான். ஒருவர்தோள்களை மற்றவர் இறுகப் பிடித்துக்கொண்டிருக்க, அப் பிடியினின்றும் நீங்கி வெளிப்பட்டுவிடுபவர் வென்றவராவர் என்று அறுதி செய்திருந்தனர்; அவ்வாறே ஆரியப்பொருநன்தோள்களைப் பாணன் தன் மார்போடு அணைத்து இறுகப் பிடித்திருந்தான்; அப் பிடியினின்றும் தன்னை விடுவித்துக்கொள்ளும்பொருட்டுப் பொருநன் தன் முழு வலியோடும் முயன்றானாக, பாணன் பிடித்த பிடி விடாததனால், பொருநன்தோள்கள் பாணன் கையிடத்தனவாக, அவன் விலகி வெளிப்பட்டான்; தோள்கள் இரண்டும் அவனுடலினீங்கி வேறே கிடந்தன. இவை,

'பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட வாரியப் பொருந
னிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் நாணி யாங்கு' (அகம். 386)

என்னும் அடிகளால் அறியப்படுகின்றன. இவ் வடிகள், 'பாணன் வலியுறுதலால் (அது கேட்கப் பொறாது) வருந்தி, அவனோடு எதிர்த்த பொருநனின்தோள்கள், பாணன் கையினிடத்தனவாய் வேறு கிடத்தலைக் கண்டு, கணையன் நாணினாற்போல' என்னும் பொருளைத் தருதல் காண்க. இவ்வாறன்றி, இப்பகுதி, 'பாணன், (ஆரியப் பொருநனது) மார்பின் வலியுற வருந்தி, அப் பொருநனது முழவுத்தோட் கையினிடத்து ஒழிந்த கிடக்கை' எனப் பொருள் படுதல் அரிது. அன்றியும், 'பாணன், பொருநனது முழவுத் தோட்கையினிடத்து ஒழிந்த கிடக்கை' எனப் பொருள் கூற வேண்டுமாயின், 'தோட் கையகத் தொழிந்த' என்னும் பாடம் பொருந்துவதன்றி, 'தோள் கையத் தொழிந்த' என்னும் பாடம் பொருந்தாமை அறிதற்பாலது. இப்போழ்துள்ள பாடத்திற்கு, ஆரியப்பொருநன் தோற்றான் என்று பொருள் கோடல் சிறப்பாதல் போல, [1]பாணன் தோற்றான் என்று பொருள் கோடல் சிறப்பாதல் இன்று.

1. அகநானூறு. அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 55.

கணையன் என்போன் ஒருவன், சேரன் படைமுதலியாகக் காணப்படுகின்றான்.[1]

## ஆரியப்பொருநன்.

இப் பெயராலேயே இவன் வடநாட்டினன் என்பது விளங்கும். இவன், மற்போரிற் பயின்றவன்; கணையனை அடுத்து, அவனால் மதிக்கப் பெற்று, விளங்கினவன்; ஒருகால் பாணன் என்பவனோடு பொருத மற்போரில், அவன் பிடித்த பிடியினின்று வெளிப்பட முயன்றதனால், இவன் தோள்கள் வேறாய் வீழ்ந்து கிடந்தன.[2] இவ் வரலாறு, கணையனைக் குறித்து எழுதியவிடத்தில் விளக்கமாக எழுதியிருத்தலின், ஈண்டும் எழுதுதல் மிகை யெனக் கருதி விடுக்கின்றேன்.

## அன்னிமிஞிலி.

இப் பெயர், பெண்பாற்பெயர் எனத் தெரிகின்றது. 'கோடுங் குழை அன்னி மிஞிலி' (அகம். 196) என்பது காண்க. இவள் தந்தையின் பசு, கோசர்களின் பயிரை மேய்ந்து அழித்ததற்காக அவர்கள், இவள்தந்தையின் கண்ணைக் களைந்து விட்டனர். இவள், அச்செயலைப் பொறுக்க முடியாமையால், அவர்களை ஒறுக்க உறுதி கொண்டு, தான் சினத்தால் மேற்கொண்ட படிவத்தை மாற்றாமலும், கலத்தில் உண்ணாமலும், வெள்ளிதான தூயவுடையை யுடுக்காமலும் ஒரே நிலையிலிருந்து சூழ்ச்சி செய்தாள்; அக்காலத்தில் அழுந்தூரிலிருந்த வீரனாகிய திதியனது வலிமையை யறிந்து, [3]அவனிடம்

1. அகம். 44.

2. அகம். 386. இவன், மற்போரில் பாணனை வென்றான் என்று அகநானூற்றுப் பதிப்பாசிரியர் (அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 41.) எழுதியுள்ளார்.

3. 'மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன், செருவியல் நன்மான் திதியற் குரைத்தவ, ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய, அன்னி மிஞிலி' (அகம். 262) என்னும் அடிகளுக்கு, 'குறும்பியன், திதியன் ஆகிய இருவரிடமும் (இருவர் என்றே, அகநானூற்றில் அரசர் முதலியோர் வரலாற்றிலும், பதிற்றுப்பத்தில் நூலாசிரியர்கள் வரலாற்றிலும் எழுதப்பட்டுளது.) கூறி, அவர் செகுப்பக் கண்டு சினமாறிய அன்னிமிஞிலி' எனப் பொருள் கூறுதலும் அமையும். இப்பொருளில், அவர் என்றது, குறும்பியனையும் திதியனையும் குறிப்பதாகும்; அவர் என்பதற்கு முன் கோசர் என்பதை வருவிக்க வேண்டும். அன்றியும், 196-ஆம் பாட்டில், 'தந்தை, கண்கவி னழித்ததன் றப்பற் றெறுவர, வொன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய, கடுந் தேர்த் திதியன் அழுந்தை' என்று காணப்படுதலால், கோசரைக் கொன்றவன் திதியனே என்பது தெளிவாதலின், அன்னிமிஞிலி, திதியனிடமே தன் குறையைக் கூறினாள் எனக் கொள்ளுதல் பொருந்தும். அவ்வாறு கொண்டால், குறும்பியன் என்றது திதியனுக்கு அடையாகும். இனி,

சென்று, தன் குறைகளைச் சொல்லி வேண்டிக்கொண்டாள். அவன், கோசரின் கொடுஞ்செயலையும், அன்னிமிஞிலியின் உள்ளத்

அன்னி என்பவன், திதியனது புன்னை மரத்தை வெட்டினமை காரணமாக நிகழ்ந்த 'போரில், திதியன் வெற்றிகொண்டு, அன்னியைப்பற்றி அவன் கண்ணைப் பிடுங்கிவிட்டான். (அகம். 196.) அன்னியின் புதல்வனாகிய மிஞிலி கடுஞ்சின மடைந்து வெற்றி மிக்க குறும்பியன் என்பவனால் திதியனை மரபோடழியக் கொல்லுவித்து மிக்க மகிழ்ச்சியுடையவனாகித் திருவழுந்தூரில் பெரிய ஆரவாரத்தோடு சென்று வந்தான்' என்றனர் (நற்றிணை. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 86.) அ. நாராயணசாமி ஐயர்.

> 'பாசிலை யமன்ற பயறு புக்கென
> வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
> தூர்முது கோசர் நவைத்த சிறுமையின்' (அகம். 262)

என்பதனால், கண்ணைச் சிதைத்தவர் கோசரே என்பது தெளிவாதலானும், அப் பாட்டிலேயே,

> 'மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
> செருவிய னன்மான் திதியற் குரைத்தவ
> ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
> அன்னி மிஞிலி போல'

என்பதனால், திதியனிடம் கூறி, கோசருயிரைச் செகுக்கக் கண்டு, அன்னி மிஞிலி சினம் மாறினாள் எனக் கூறப்பட்டிருத்தலானும்,

> 'தந்தை
> கண்கவி னழித்ததன் றப்பற் றெறுவா
> ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
> கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
> அன்னி மிஞிலியின் இயலும்' (அகம். 196)

என்னும் பகுதியினால், அன்னி மிஞிலி, தன் தந்தையின் கண்ணைக் கவினழித்த தப்பிற்காக அக் கோசருயிரைக் கொல்வித்து, திதியனது அழுந்தூரில் பெருமிதமாக உலவினாள் என அறியப்படுதலானும், கண்ணைச் சிதைத்தவர் கோசரே என்பதும், அவர்களைத் திதியன் கொன்றான் என்பதும் தெளிவாகும். ஆதலின், நாராயணசாமி ஐயர் எழுதியிருப்பது பொருந்தாமை நன்கு புலனாகும்.

இன்னும் அவர், மிஞிலியை அன்னிக்கு மகன் என்றார். 'கொடுங்குழை அன்னி மிஞிலியின் இயலும், நின்னலத் ததவியை' என்னுமிடத்து, 'கொடுங்குழை' என்ற அடையானும், தலைவிக்கு உவமானமாகக் கூறியிருத்தலானும் பெண்மக ளென்றலே பொருந்தும் என அறிக. அகநானூற்றுப் பதிப்பாசிரியர், 'இவள் (அன்னி மிஞிலி) ஓர் அழகு வாய்ந்த பெண்மணி' என்று எழுதியிருப்பது காண்க. மேற் பாட்டில், 'கொடுங்குழை' என்று அடைமொழி கொடுத்தது, கோசரை ஒறுக்குமளவும், தான் மேற்கொண்ட படிவத்தால் குழையணியாதிருந்தவள், அவரைக் கொன்றதன் பின், பெருமிதம் தோன்றக் குழையை யணிந்து உலவினாள் என்பதைக் குறித்தற்குப் போலும்!

துறுதியையும் அறிந்து, கோசரின் உயிரைச் செகுத்தான். அது கண்ட அன்னிமிஞிலி, தன் சினம் தணியப் பெற்று, உவகை பொங்கியெழ, காதில் குழையணிந்து, அத் திதியனது அழுந்தூரில் உலவித் திரிந்தாள்.

'வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்தும் உண்ணுள் வாலிதும் உடாஅள்
சினத்திற் கொண்ட படிவம் மாறுள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற் குரைத்தவ
ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
அன்னி மிஞிலி' (அகம். 262)

'தந்தை
கண்கவி னழித்ததன் தப்பற் றெறுவர
வொன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்' (அகம். 196)

என்னும் பகுதிகளால், இவள் மனத்திட்பமும், மறமும் பிறவும் நன்கு புலனாகும். இவளுக்கு வழங்கியுள்ள பெயரை நோக்குங் கால், இவள் [1]தந்தையின் பெயரும் உடன் சேர்த்து வழங்கி யிருக்கலாமோ என்று ஐயம் தோன்றுகின்றது.

## கோசர்.

இவர்கள், வாய்மொழிக் கோசர் என்று புகழ்ந்து கூறப்படுகின் றனர். இதனால் இவர்களது வாய்மை விளங்கும். இவர்கள் வஞ்சின மொழி கூறி, நன்னனது மாமரத்தை வெட்டி, அதனை நாட்டிற் போக்கிய சூழ்ச்சியினர்[2].

கோசர்களில் ஒரு சாரார், அன்னிமிஞிலியின் தந்தையைக் கண்களைந்த செய்தி, மேல், அன்னிமிஞிலியின் வரலாற்றிற் கூறப் பட்டது. தங்கள் பயிரில், பசு மேய்ந்து அழித்ததன்பொருட்டு, அப் பசுவினை யுடையவனது கண்ணைச் சிதைத்தது கொடுஞ்செயலே யாகும். இக்கொடுஞ்செயல் புரிந்த கோசர், அழுந்தூரில் வாழ்ந்த திதியனாற் கொல்லப்பட்டனர். இவர்களைப் பற்றிய வரலாறுகளுள் பரணர் கூறியிருப்பது இத்துணையே.

1. அன்னியின் மகளாகிய மிஞிலி என்று விரிக்கலாம்.

2. இவ்வரலாறு, நன்னனைப்பற்றிக் கூறுமிடத்து (பக்கம் 92, 93) விரிவாக எழுதப்பட்டுளது.

## திதியன்.

பரணர் பாட்டுக்களில் திதியன் என்னும் பெயருடையவர் இருவர் காணப்படுகின்றனர். அவருள், ஒருவன் அழுந்தூரினன்; மற்றவன் பொதியிலினன்.

## அழுந்தூர்த் திதியன்.

அன்னிமிஞிலி என்பவள், தன் தந்தையின் கண்ணைக் கோசர் அழித்ததை அறிவித்து முறையிட, இவன், அதற்கிரங்கி அக் கொடுஞ்செயல் புரிந்த கோசரைக் கொன்று, அவள் சினத்தைப் போக்கினான். இச் செயலால் இவனது அருட்டிறமும் பெருமிதமும் வலிமையும் நன்கு விளங்கும். இவன் செயலாகப் பரணர் பாட்டுக்களில் காண்பது இத்துணையே.

## பசும்பூட்பாண்டியன்.

தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, இடைக் குன்றூர் கிழார் பாடியுள்ள பாட்டில்,

‘நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வலம் அடங்க
ஒருதான் ஆகிப் பொருதுகளத் தடலே’ (புறம். 76)

என்று பாடியிருத்தலின், இவனுக்குப் பசும்பூட்செழியன் என்னும் பெயர் உண்டு என்பது அறியப்படும். ஆதலின், பரணர் பாட்டுக் களில் குறிக்கப்பட்டுள்ள பசும்பூட் பாண்டியன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழிய னுவான்.[1]

இப் பசும்பூட்பாண்டியன், யானைப்படைகளை மிகுதியாக வுடையவன் என்பதும், இவன் போருக்குச் செல்லுங்கால் அவ் யானைகளின் மேல் உயர்த்த கொடிகள் நெடுந்தொலைவினும் விளங்கும் என்பதும்,

‘அதிகன் * * *
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறணி வேல்கொடி கடுப்பக் காண்வர
ஒளிறுவன விழிதரும் உயர்ந்துதோன் றருவி’

என்னும் அடிகளால் விளங்கும். (அகம். 162)

---

1. இவன், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனுக்குப் பாட்டன் எனக் கூறுவாரும் உளர்.

இவ்வடிகள், 'அதிகனது வெற்பகம் பொலியுமாறு, பசும்பூட் பாண்டியனுடைய களிறுகளின்மே லெடுத்த கொடிகள் போல, விளங்குவனவாய் உயர்ந்து தோன்றும் அருவி[1]' என்னும் பொருளைத் தரும். இவற்றிற்கு, 'இவனது (அதிகனது) வெற்பகத்தில் பசும்பூட் பாண்டியன் தன் களிறுகளைப் பரப்பினதாக அறியலாவது' என்று அகநானூற்றுப் பதிப்பாசிரியர் [2]எழுதியிருத்தல் அமைதியாதல் இல்லை.

அதிகன் ஒருவன், இப் பசும்பூட்பாண்டியனுடைய [3] வினைவலனாய் (படைத்தலைவனாய்) இருந்தான். இவன், அதிகமான் நெடுமான் அஞ்சி அல்லன். இவ்வதிகன், கூகைக்கோழியின் வாகைப்பறந்தலையில், கொங்கரோடு பொருத போரில் இறந்து பட்டான்.

'கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே.' (குறுந். 393)

என்னும் அடிகளைக் காண்க. [4]வேங்கைமலை, இவ்வதிகனுக் குரியதே யாகும்.

பசும்பூட் பாண்டியன், தன் ஏவலை மேற்கொள்ளாதிருந்த எவ்வியை மடக்கி, உறத்தூரில் பெருஞ்சோறு கொடுத்த வரலாறு, பரணரால் கூறப்பட்டுளது. எவ்வி, நீடூரில் வாழ்ந்தவன். இச் செய்தியை,

---

1. 'மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்க' (பதிற். 69)

என்பது காண்க.

2. அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 37.

3. 'இவன் (தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்), கோங்கர்தலைவனன் அதிகனை (குறுந். 393) வென்று . . .' (அரசர் முதலியோர் வரலாறு. பக்கம். 49.) என்று அகநானூற்றுப் பதிப்பாசிரியர் எழுதியுள்ளார். மேற்குறித்துள்ள குறுந்தொகைப் பாட்டில், பசும்பூட் பாண்டியன் வினைவலதிகன் பட்ட ஞான்றைக் கொங்கர் பெரிதும் ஆர்த்தனர் எனக் கூறப்பட்டுள்ளது காண்க. அதில், பசும்பூட்பாண்டியன் அதிகனைக் கொன்றான் எனக் கூறப்படவில்லை. அன்றியும், அதிகன் கொங்கருக்குத் தலைவனாயின், அவன் பட்டபோது கொங்கர் வருந்தாமல் ஆர்ப்பரோ? ஆர்த்தல், வென்றோர் செயலாக அன்றோ யாண்டும் கூறப்படுகின்றது? இவற்றால், அதிகன், கொங்கர் தலைவன் என்றும், பசும்பூட்பாண்டியனால் கொல்லப்பட்டான் என்றும் கூறும் கூற்றுப் பொருத்தமானது அன்று என்பது தெளிவாகும்.

4. அகம். 162.

'யாழிசை மறுகின் நீடூர் கிழவோன
வாய்வா ளெவ்வி ஏவல் மேவார
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பெருந்திறல்
அரிமணை வாயில் உறத்தூ ராங்கட்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி ழன்ன
கவ்வை யாகின்றாற் பெரிதே' (அகம். 266)

என்னும் அடிகளிற் காண்க.

செழியன் ஒருவன், கூடற்பறந்தலையில், தன்னோ டெதிர்த்த இரு பெரு வேந்தரையும் வென்று, அவருடைய முரசுகளைக் கைக் கொண்டான் என்னும் செய்தி கூறப்பட்டிருக்கின்றது.[1] இச் செழியன், மேற் கூறப்பட்ட பசும்பூட்பாண்டியன் போலும்!

எவ்வி.

இவன், நீடூரில் வாழ்ந்தவன். இது,

'யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வா ளெவ்வி' (அகம். 266)

என்பதனால் விளங்கும். இவன், பசும்பூட்பாண்டியனுடைய ஆணையை யேற்றுக்கொள்ளாமல், நெடுமிடலோடு விளங்கிய காலத்தில், அப் பாண்டியன் இவனது மிடலைச்சாய்த்து, வெற்றி பெற்றான். இதனை,

'நீடூர் கிழவோன்
வாய்வா ளெவ்வி ஏவல் மேவார
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பெருந்திறல்' (அகம். 266)

என்னும் அடிகளால் தெளியலாம்.

'எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி' (குறுந். 19)

என்னும் அடிகளால், பாணரைப் புரந்தவனாகிய எவ்வி யொருவன் இறந்துபட்ட செய்தி அறியப்படுகின்றது. அவன், இந் நீடூர் எவ்வியோ, அல்லனோ, நன்கு விளங்கவில்லை. எவ்வி என்பது, அதிகமான் என்பது போல, குடிப் பெயராக வழங்கி யிருக்கலாம். 'எவ்வி தொல்குடிப் படீஇயர்' என்பது (புறம். 203) காண்க. அவ்வாறாயின், எவ்வி என்னும் பெயருடையார் பலர் இருந்திருத்தல் கூடும்.

---

1. அகம். 116.

### [1]அதிகன்.

இவன், இரவலர் விரும்பிய பொருளை, இல்லை என்னாமல் ஈந்தவன். வேங்கைமலை இவனுக்கு உரியது. இவற்றை,

'வாய் மொழி
நல்லிசை தருஉம் இரவலர்க் குள்ளிய
நசைபிழைப் பறியாக் கழறொடி யதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம்' (அகம். 162)

என்னும் அடிகளிற் காண்க. இங்கு, 'வேங்கை சேர்ந்த வெற்பகம்' என்றது, வேங்கைமலை என்றபடி. இதனை, [2]முன்னர்க் கூறுவேன்.

அதிகன், பசும்பூட்பாண்டியனுக்கு வினைவலனா யிருந்து, வாகைப்பறந்தலையிற் கொங்கரோடு பொருது இறந்து பட்டான்[3]. இதனை, மேல், பசும்பூட்பாண்டியன் வரலாற்றிற் குறித்துள்ளேன். இவ்வதிகன், அதிகமான் நெடுமான் அஞ்சி அல்லன் என்றே கொள்க, அவன், பாண்டியன் வினைவலனாயிருந்தான் என்றற்குச் சான்று இன்மையின்.

### கூகைக்கோழி.

இவனுக்கு உரித்தாயிருந்த வாகையூர்ப் பறந்தலையில், அதிகன், கொங்கரோடு பொருத போரில் இறந்து பட்டான் என்பது மட்டும் தெரிகின்றது[4]. இவனைப் பற்றிய வேறு செய்தி ஒன்றுந் தெரியவில்லை.

### கோங்கர்.

இவர், சேர வேந்தரைச் சேர்ந்தவர். 'நாரரி நறவிற் கோங்கர் கோவே' (பதிற். 88) என்றும், 'கட்டிப் புழுக்கிற் கோங்கர் கோவே' (பதிற். 90) என்றும் சேரவேந்தன் கூறப்பட்டிருத்தலின், இஃது அறியலாகும். இவர்களுக்கும் அதிகனுக்கும் நடந்தபோரில், அதிகன் இறந்து பட்ட செய்தி கூறப்பட்டுளது.

### அழிசி.

இவன், சேந்தன் என்பவனுக்குத் தந்தை ; போர்வீரர் பலருக்குத் தலைவன். இவை,

---

1. இவன் பெயர், அதகன் எனக் குறிக்கப்பட்டுளது. பதிற்றுப்பத்து-நூலாசிரியர்கள் வரலாறு. பக்கம். 8 ; நற்றிணை—பாடினோர் வரலாறு. பக்கம். 53 பார்க்க.

2. அத்யாயம். 6-ல் காண்க.

3. குறுந். 393.

4. குறுந். 393.

'சேந்தன் றந்தை * * *
நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்
அழிசி ஆர்க்காடன்ன' (குறுந். 258)

என்பதனால் அறியப்படும்:

'சேந்தன் றந்தை
தேங்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி
* * ஆர்க்காடன்ன' (நற். 190)

என்பதும் இதனை வலியுறுத்தும். ஆர்க்காடு, இவனுடையதாயிருந்தது என்பது மேற்குறித்த இரண்டு பாட்டுக்களிலும் கூறப்பட்டுளது காண்க.

சேந்தன்.

இவன், அழிசியின் மகன்; வலிமை மிக்கவன்; காவிரியாற்றில், பலரும் நீராடும் பெருந்துறையாகிய மருதத்துறையில், நீராடுவோர்க்குத் துன்பஞ்செய்திருந்த யானையை அடக்கி, ஆண்டே அதனை மருதமரத்தொடு பிணித்தான்[1]. இதனால், இவன்புகழ் பரவலாயிற்று. இவனது புகழ் பரவியதனால், இவன்தகப்பனாகிய அழிசியைக் கூறுமிடத்து, 'சேந்தன் றந்தை அழிசி' எனப் புலவர் கூறுவாராயினர். இவ்வாறு கூறும் வழக்குண்மை, 'ஐயை தந்தை,...தித்தன்' (அகம். 6) என்பதனாலும் அறியப்படும். இவற்றால், சேந்தன் புகழ் மிகுந்தவன் என்பது வெளிப்படை.

தித்தன்.

இவன், உறையூரினன் என்றும், இவன் காலத்தில் உறையூர்ப் புறங்காடு, பிறர் புகுதற்கு அரியதாயிருந்தது (அகம். 122) என்றும் கூறப்பட்டுளது. இவனுக்கு ஐயை என்னும் மகள் ஒருத்தி யிருந்தாள் என்பது, 'ஐயை தந்தை,...தித்தன்' என்பதனால் அறியலாகும்.

தித்தன் வெளியன்[2] என்பவன், இத் தித்தனுக்கு மகனாயிருக்கலாம் போலும் என்று மேலேயே (பக்கம். 96) எழுதியுள்ளேன்.

ஐயை.

இவள், தித்தன் மகள்; கற்பு மிக்கவள்[3]. இதனை, 'ஐயை, ஒரு கற்புடைய மகள். இவள்தந்தை என்றது, இவள் கற்புடைமை நோக்கி' (அகம். 6-உரை.) என்று பழைய உரையாசிரியர் எழுதியிருப்பதனால் அறியலாகும். அதனால், தித்தனைச் சொல்லுமிடத்து,

1. குறுந். 258.
2. அகம். 226.
3. அகம். 6.

'அரிபெய் சிலம்பி னும்பலந் தொடலை
அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
இழையணி பணைத்தோ ளையை தந்தை
* * தித்தன்' (அகம். 6)

என்று பரணர் கூறுவாராயினர்.

## மலையன். (காரி)

இவன், தேர்வண்மலையன் எனவும் கூறப்பட்டுள்ளான். இவனுடைய போர்த்திறன் முதலிய செயல்கள் பலவற்றுள்ளும் பரணர் பாட்டிற் காணப்படுவது, இவன், பகைவர்களின் ஆனிரைகளைத் தன் விற்றிறத்தால் கவர்ந்து, உய்த்துக்கொடு போகும் செயல் ஒன்றே.

'முனையூர்ப்
பல்லா நெடுநிரை வில்லி னொய்யுந்
தேர்வண் மலையன்' (நற். 100)

என வருவது காண்க. 'தேர்வண் மலையன்' என்றது, இரவலருக்குத் தேரை வழங்கும் வள்ளியோனாகிய மலையன் என்றபடி.

மலையன், பகைவரின் ஆனிரைகளைக் கவரும் செயலை,

'மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்
தெல்லித் தரீஇய இனநிரை' (நற். 291)

என்று கபிலரும் கூறியுள்ளார்.

## ஓரி.

இவன், வல்வில்லோரி என்று சிறப்பித்துக் கூறப்படுவான். இவ்வாறு சிறப்பித்துக் கூறத்தக்க இவனது விற்றொழிற்றிறமையைக் குறித்து வன்பரணர் பாடியிருக்கும் பாட்டு[1] பாராட்டத் தக்கது. இவன், முதன்மை பெற்ற வள்ளல்களுள் ஒருவன். இவனது பூஞ்சோலை, நறுமலர் மிக்குடையதாய், சுற்றுப்புறங்களிலெல்லாம் நறுநாற்றம் கமழ்வதாய்த் திகழ்ந்திருந்தது. இதனைத்,

'திண்டேர்
கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழுங் கூந்தல்' (குறுந். 199)

'வல்வில் லோரி கானம் நாறி
இரும்பல் லொலிவருங் கூந்தல்' (நற். 6)

என்பவற்றால் அறியலாகும். கொல்லிமலை, இவனுக்கு உரியதாயிருந்தது.

1. புறம். 152.

'மாரி வண்மகிழ் ஓரி கொல்லி' (நற். 265)

எனவும்,

'ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி' (அகம். 208)

எனவும் பரணராற் கூறப்பட்டுள்ளன. இம் மலையை இவனிட மிருந்து பொறையன் என்னும் சேரலன் அடைந்தான். இதனை, முன்னர்ப் பொறையனைக் குறித்துக் கூறுமிடத்தும் காண்க.

மாந்தரன் பொறையன் கடுங்கோ.

இவன், மாந்தரன் என்னும் அரசன்மரபின னுவான். அன்றி, அவனுக்கு மகனுயினும் ஆகலாம். கடுங்கோ என்பது, சேர வேந்தர் சிலருக்குப் பெயராகக் காணப்படுகின்றது. [1]பாலை பாடிய பெருங் கடுங்கோ, [2]மருதம் பாடிய இளங்கடுங்கோ என்னும் பெயர்களை நோக்குக. இவன், தன் பால் வந்து குறையிரப்போரின் கொள்கலம் நிறைய நல்குபவன். இதனை,

'நிறையருந் தானை வெல்போர் மாந்தரன்
பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே' (அகம். 142)

என்னும் அடிகள் தெரிவிக்கும். இவனைப்பற்றிப் பரணர் பாட்டுக் களிற் காணப்படுவது இத்துணையே.

பொறையன்—பெரும்பூட்பொறையன்.

பரணர் பாட்டுக்களில், 'பொறையன்' என்றும், [3]'பெரும்பூட் பொறையன்' என்றும் சேரன் ஒருவன் கூறப்படுகின்றுன். மாந்தரன் பொறையன் கடுங்கோ எனக் குறிக்கப்பட்டவன் இவனே, அல்லனே, தெரியவில்லை.

'பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லி'

எனவும், (குறு. 89)

'வென்வேற்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி' (அகம். 62)

எனவும், கொல்லிமலை பொறையனுக்கு உரியது என்று கூறும்

1. புறம். 11-ஆம் பாட்டுக் காண்க.

2. நற். 50; அகம். 96 காண்க.

3. இவன், பசும்பூட் பொறையன் என்றும் கூறப்படுகின்றுன். 'மறமிகு தானைப் பசும்பூட் பொறையன் . . . மாயிருங் கொல்லி' (அகம். 303) என்பது காண்க.

பரணரே, அஃது, ஓரிக்கு உரியது என்றும் கூறியுள்ளார்[1]. காரி என்பவன் ஓரியைக் கொன்று, இம்மலையைச் சேரனுக் கீந்தான்[2] என்னும் வரலாறு அறியப்படுதலின், இது, முதலில் ஓரிக்கு உரியதாயிருந்தது எனவும், பின்னர், சேரனுக்கு உரியதாயிற்று எனவும் போதரும்.

பெரும்பூட்பொறையன் என்பவனும் பெருஞ்சேரல் இரும்பொறை என்பவனும் ஒருவனே எனக் கொள்ளுதல் பொருந்துமாயின், பரணராற் பாடப்பட்ட இப் பொறையன், அதிகமான்தகடூர் எறிந்த பெருஞ்சேர லிரும்பொறை என்னும் அரசனுவான். அரிசில் கிழார், 'கோல்லிப் பொருந கொடித்தேர்ப் பொறைய' (பதிற். 73) என்றும், 'இயல்தேர்ப் பொறைய' (பதிற். 75) என்றும், 'சினப் போர்ப் பொறையன்' (பதிற். 77) என்றும், பாடியிருத்தலின், தகடூ ரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறையின் பெயர், பொறையன் என்றே வழங்குதல் அறியலாகும்.

இப் பொறையன் (தகடூரை எறிந்தவன்), கழுவுளை வென்றவன். இதனை, பதிற்றுப்பத்தில், 71-ஆம் பாட்டினுல் அறியலாகும்.

இளஞ்சேர லிரும்பொறையைப் பாடிய பெருங்குன்றூர் கிழார், அவனை,

'கழுவுள் புறம்பெற்றுக்
*    *    *
கொற்றம் எய்திய பெரியோர் மருக' (பதிற். 88)

என்று பாடியிருத்தலின், அவன் (இளஞ்சேர லிரும்பொறை), பெருஞ்சேர லிரும்பொறையின் மரபினனுதல் துணியப்படும். அவ் விளஞ்சேர லிரும்பொறை, மாந்தரன் மரபினன் என்பது,

'விறன்மாந்தரன் விறல்மருக' (பதிற். 90)

என்னும் அடியினுல் போதருகின்றது. ஆதலின், பெருஞ்சேரலிரும் பொறையும் மாந்தரன் மரபினனே என்னத் தட்டில்லை.

பரணரால், பெரும்பூட்பொறையன் என்று குறிக்கப்பட்டவன், அதிகமான் தகடூர் எறிந்த பெருஞ்சேர லிரும்பொறை யாவான் என்று கருதுதற்குக் காரணம் [3]பெயரொற்றுமையும், பரணர் காலத்

---

1. நற். 265; அகம் 208.
2. அகம். 209.
3. பெரும்பூட் பொறையன், பெருஞ்சேர லிரும்பொறை என்னும் பெயர்களைக் காண்க.

தில், பொறையன் என்னும் பெயர் கொண்ட மற்றொரு சேர வேந்தன் வாழ்ந்திருந்தானென அறியப்படாமையும் ஆகும். இவை யல்லாமல், அதிகமான்தகடூர் எறிந்த பெருஞ்சேர லிரும் பொறையே, பெரும்பூட் பொறையன் என்று தெளிவாகக் கூறுதற்கு வேறு ஏது யாதும் காணப்படவில்லை.

இனி, பொறையனைக் குறித்துப் பரணர் கூறியுள்ளவற்றை இங்குக் குறிக்கின்றேன்:

கொல்லி மலை, இவனுக்கு உரியது[1]. அங்கே, தெய்வ வடிவில் எழுதப்பட்ட பாவை ஒன்று உண்டு[2]. மேலைக் கடற்கரையில் விளங்கிய தொண்டிநகர் இவனுக்குரியது[3].

## ஆய்.

இவன், ஆய் அண்டிரன் என்றும் வழங்கப்படுவான். இவன், தன்பால் வரும் இரவலர் வல்ல ராயினும் வல்லரல்ல ராயினும் அவர் வேண்டுமளவு நல்கும் இயல்பினன்; இவன், தென்னாட்டில் வாழ்ந்திருந்தான். இவன் நாட்டிலுள்ள பொதியில்மலையில், கவிரம் என்னும் பெயருடையதோரிடத்தில், பல மலர்களையுடைய சுனை யுண்டு; அம் மலையில், சூர்மகளிர் வாழ்ந்திருந்தனர்[4]. அங்கு, வேய்கள் மிக்க செழுமையாக வளர்வன[5].

## நள்ளி.

இவன், வில்வீரர் பலருக்குத் தலைவன்; இவனுடைய சோலை யில் காந்தட்பூ மிக்க மண முடையது[6] என்பது மட்டுமே பரணர் பாட்டிற் காணப்படுகின்றது; வேறொன்றும் இவராற் கூறப்பட வில்லை.

## அஞ்சி.

இவனைக் குறித்துப் பரணர் கூறியிருப்பது,

‘நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி
கடுமுனை யலைத்த கொடுவி லாடவர்
ஆகொள் பூசலிற் பாடுசிறந் தெறியும்
பெருந்துடி வள்பின்’ (அகம். 372)

---

1. குறுந். 89.
2. நற். 201.
3. குறுந். 128.
4. அகம். 198.
5. அகம். 152.
6. அகம். 152.

என்னும் பகுதியே[1]. இதனுல், இவன் வீரர், பகைவரின் ஆனிரைகளைக் கவர்ந்து வருதலும், அப்பொழுது துடி முதலியன அறைதலும் அறியப்படும். 'நெடுநெறி' என்னும் அடைமொழியால், குதிரை என்பதைக் குதிரைமலை எனக் கோடல் அமையும். குதிரைமலை, பிட்டங்கொற்றனுக்கும் (புறம். 168), அதிகமான் எழினிக்கும் (புறம். 158) ஓரோர் காலத்தில் உரியதாயிருந்தது எனத் தெரிகின்றது. பரணரால் குறிக்கப்பட்ட அதிகன், இந்த அஞ்சி என்பவனே எனக்கருதி அகநானூற்றுப் பதிப்பாசிரியர் எழுதியிருப்பது[2] பொருந்துவதன்று.

## தழும்பன்.

இவன், ஊணூரில் வாழ்ந்தவன். பரணர், இவனைத் தழும்பன் என்றே பாடியுள்ளார். ஆயினும், இவன் பெயர், வழுதுணங்காய்த் தழும்பன் என்பது என அறியப்படுகின்றது.

[3] 'பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்' (அகம். 227)

என்பது காண்க. அஃதாவது, பிடியானை மிதித்ததனுல் ஆயதும், வழுதுணங்காய் போன்ற வடிவினதும் ஆகிய தழும்பினை யுடையவன் என்பதாம்.

'பெரும்பு, ணேஎர் தழும்பன்' (நற். 300)

என்பதனுலும் இது வலியுறும். ஆயினும், இவனது இயற்பெயர் இன்னது எனத் தெரியவில்லை.

இவன் வாய்மையுடையவன். இது,

'வாய்மொழித் தழும்பன்' (புறம். 348)

என்பதனுல் அறியலாகும். இவன், பாணர்களைப் புரந்து காத்தவன் என்பது,

'இரும்பாண் ஒக்கற் றலைவன்' (நற். 300)

என்னும் அடியினுல் அறியப்படும்.

---

1. அதிகமானெடுமானஞ்சி திருக்கோவலூரிற் பொருதுவென்றதைக் குறித்துப் பரணர் பாடினர் என அவ்வையார் பாடியுள்ள புறப்பாட்டால் அறியப் படுகின்றதே யன்றி, பரணர் பாடிய அப் பாட்டுக்கள் காணப்படவில்லை.

2. சர் முதலியோர் வரலாறு. பக்கம். 37.

3. 'பிடிமகி ழுறுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்' என்னும் பாடம் (நற்றிணை. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 91.) காணப்படினும், 'பெரும்பு, ணேஎர் தழும்பன்' என்பதனுலும், தழும்பன் எனவே பெயர் வழங்கியிருத்தலானும், அகநானூற்றிற் காணும் பாடமே பொருத்த முடையதாகத் தோன்றுகின்றது.

## விரான்.

இவன், வலி மிக்கவன் ; அதனால், [1]வயவன் என்றும் கூறப்படுவான்; இவன், பகைவர்களை வென்றவன். இருப்பை என்னும் ஊர் இவனுடையது. இது, 'விராஅன் இருப்பை யன்ன' என்னும் ஐங்குறுநூற்றுச் செய்யுளாலும் (58) அறியப்படும். இப்பொழுது 'விராலி மலை' என வழங்குவது, 'விரான் மலை' என்னும் சொல்லின் சிதைவா யிருக்கலாம் போலும்! இவன் வள்ளன்மை யுடையவன் என்பது, பரணர் பாட்டால் தெரிகின்றது[2].

## விச்சியர் பெருமகன்.

இவன் விச்சிக்கோன் எனப்படுவான். இவன், வேந்தர்களோடு பொருதான்[3] என்பது மட்டுமே தெரிகின்றது ; பொருத வேந்தர் இன்னவர் என்பது புலப்படவில்லை. போரின் முடிவில், குறும்பூரார் ஆர்த்தனர் என்பது கூறப்பட்டுளது. இவன் வரலாறு கூறப்பட்டுள்ள பாட்டுப் பிழைபட்டிருத்தலின், இதனினும் அதிகமாக ஒன்றும் அறிதற்கு இடனில்லை.

## பழையன்.

இவன், சோழஅரசர் மறவன் ; காவிரியை யடுத்ததாகிய போர் என்னும் ஊரில் வாழ்ந்தவன். இவன், மழை பொழிவதுபோல, கணைகளை விரைய எய்பவன் என்று புகழ்ந்து கூறப்பட்டுள்ளான்[4]. இவன் வேல், தப்பாது பகைவருயிரை வாங்கும் திறத்தது என்பதை,

> 'பழையன் ஒக்கிய வேல்போற்
> பிழையல கண்ணவ ளேக்கியோர் திறத்தே' (அகம். 326)

என்னும் அடிகளில் உபமானமுகத்தால் விளக்கியுள்ளார். இவனது போரூர் மிக்க அழகினையுடையதா யிருந்தது என்பது, 'போஒ ரன்னவென் செறிவளை' (அகம். 186) என்பதனால் விளங்கும். பழையன் எனக் கூறின், மோகூர்மன்னன் என்று கருதவுங் கூடு மாகலின், அவனை நீக்க, [5] 'சோழர் மறவன், கழையளந் தறியாக் காவிரிப் படப்பைப்...போஒர் கிழவோன், பழையன்' என்றும், [6]'மாரி யம்பின் மழைத்தோற் பழையன், காவிரி வைப்பிற் போஒர்' என்றும், அடைமொழி கொடுத்துக் கூறியுள்ளார்.

1. நற். 260.
2. நற். 350.
3. குறு். 328.
4. அகம். 186.
5. அகம். 326.
6. அகம். 186.

## வல்லங் கிழவோன்.

இவனது இயற்பெயர் தெரியவில்லை; இவன், சோழர் மரபினன் என்பது மட்டும் தெரிகின்றது.

'நற்றேர்க்
கடும்பகட் டியானைச் சோழர் மருகன்
* * வல்லங் கிழவோன்' (அகம். 356)

என்பதனால் இது விளங்கும். இவன், தன்னாட்டில் கொடுஞ்செயல் நடவாது காத்து வந்தான் என்பது,

'வல்லங் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவும் ஒல்லார்
[1]கதவ முயறலு முயல்ப' (அகம். 356)

என்று கூறியிருப்பதனால் அறியப்படும். இது, தலைவியிடம் தோழி வலிதாகக் கூறிய துறையாகலின், 'ஒன்னார் கதவ முயறலு முயல்ப' எனக் கூறப்பட்டுளது. 'நல்லடி யுள்ளா னாகவும்' என்பதனால், அவனது காவற்சிறப்புக் கூறப்பட்டதாகும்.

## பொதியில் திதியன்.

இவன், பொதியில்மலையை யுடையவன்; வெற்றிகொள்ளும் படையினன். இவன், ஒல்லையூர் தந்த பூதபாண்டியனுக்கு நண்பன். இஃது, அப் பாண்டியன் பாடிய செய்யுளால் (அகம். 25) அறியப் படும். இவனது பொதியில்மலை, ஏறுதற்கரிய சிகரங்களையுடையது.[2] அம்மலையில், புலிகள் திரிந்துகொண்டிருக்கும். அங்கே தேன் மிகுதி. அத் தேனைக் குறவர் அழித்து அருந்துவர்.

---

1. 'கதுவ முயறலும்' எனப் பாடம் இருப்பின் சிறக்கும்.
2. அகம். 322.

# VI

இனி, பரணர் பாட்டுக்களிற் கூறப்பட்டுள்ள மலைகளையும், அவற்றைப்பற்றிய செய்திகளையும் ஆராய்கின்றேன் :

மலைகள்.

## இமயமலை.

இம் மலையைப்பற்றி இவர் பாட்டுக்களிற் காண்பவை,[1] முன்னர் எழுதப்படுமாகலின், ஈண்டு எழுதாமல் விடப்படுகின்றன.

## கொல்லிமலை.

இம்மலை, முதலில் ஓரிக்கு உரியதாயிருந்தது. பின்னர், காரி என்பவன் அவ் வோரியைக் கொன்று, இம் மலையைச் சேரனுக்கு உரிமையாக்கினன்.

'செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி' (அகம். 209)

என்னும் கல்லாடனர் பாட்டினால், இவ்வரலாறு அறியப்படும். இம் மலையில், கடவுட்பாவை ஒன்று உண்டு என்று புலவர் பலர் கூறியுள்ளனர். அவருள் பரணர், அப் பாவையின் நிலைமையை அழகாக வருணித்திருக்கின்றார். அது,

'செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வங் காக்குந் தீதுதீர் நெடுங்கோட்
டவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினும்
உருமுடன் றெறியினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினுந் திருநல வுருவின்
மாயா வியற்கைப் பாவை' (நற். 201)

என்பதாம்.

இதனால், அப் பாவையின் தன்மை நன்கு அறியப்படும். 'மாயா வியற்கைப் பாவை'யும் மாய்ந்தது. 'பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி' (அகம். 208) என்றதனால், கொல்லி மலையில்,

---

1. ஏழாவது அத்யாயத்திற் காண்க.

பலாமரம் மிகுதி என்பதும், அங்கு அம் மரம் சாலப் பயன் தரும் என்பதும் அறியப்படும்.

## வேங்கை மலை.

வேங்கை மலை, [1]அதிகனுக்கு உரியது. அதில், மாறாது பயன் தரும் பலாமரம் மிகுதி. அங்கே, உயர்ந்து தோன்றும் அருவியுண்டு; சூரரமகளிர் வாழ்ந்திருந்தனர். இவை

'அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
* * * *
ஒளிறுவன இழிதரும் உயர்ந்துதோன் றருவி
நேர்கொள் நெடுவரைக் கவாஅன்
சூரர மகளிரிற் பெறற்கரி யோளே' (அகம். 162)

என்பதனால் அறியலாகும். இதில், 'வேங்கை சேர்ந்த வெற்பகம்' என்பது, வேங்கை மலை என்றபடி.

'விறன்மலை, வேங்கை வெற்பின்' (புறம். 336) என இவரே (பரணரே) கூறியிருத்தலின், ஈண்டும், 'வேங்கை சேர்ந்த வெற்பு' என்பதனை மலையின் பெயராகக் கோடலே சிறக்கும்[2].

## ஏழில்மலை.

இம்மலை, பாரத்துத்தலைவனாகிய நன்னனுக்கு உரியதாயிருந்தது. இது, மலையாளம் ஜில்லாவிலுள்ள கன்னனூருக்கு 18 மைல் வடக்கே உளது[3].

'பாரத்துத் தலைவன் ஆர நன்னன்
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பு' (அகம். 152)

என்னும் அடிகளைக் காண்க. இம் மலையில், சிறந்த மயில்கள் வதிந்திருந்தன.

## பறம்பு.

இது, பறம்பு மலை என்றும் வழங்கும். இதுவும் நன்னனதே.

'நன்னன் பறம்பில்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினே னாகி' (அகம். 356)

---

1. இவன் பெயர் அதகன் என்றும் கூறுவர்.
2. நற்றிணை. பாடினோர் வரலாறு. பக்கம். 53 பார்க்க.
3. நற்றிணை. பாடப்பட்டோர் வரலாறு. பக்கம். 91.

என்பதனால், இம்மலையில் பயினொடு சேர்த்திய கல், உறுதிப்பாடுடையதாயிருக்கும் என்பது அறியலாகும்.

### பொதியில்.

இம்மலை, திதியனுக்கு உரியதாயிருந்தது.

'ஒளிறுவேற் றானைக் கடுந்தேர்த் திதியன்
*   *   *   *
முயலுநர் முற்றா வேற்றரு நெடுஞ்சிமைப்
புகலரும் பொதியில் போல' (அகம். 322)

என்பது காண்க.

'கழறொடி ஆஅய் மழைதவழ் பொதியில்' (புறம். 128),

என்று, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியிருப்பதனால், பொதியில்மலை ஆய்க்கு உரியது எனவும் தெரிகின்றது[1].

### கவிரம்.

இது, தென்னாட்டில் வாழ்ந்தவனாகிய ஆய் என்பவனது பொதியில்மலையின் நடுவிடத்தது; கவிரமலை என வழங்குவது. இம்மலையில், சூரரமகளிர் வாழ்ந்திருந்தனர்[2].

இனி, பரணர் பாட்டுக்களில் வந்துள்ள யாறுகளைக் குறிக்கின்றேன்: இவர் பாட்டுக்களில் காவிரியாறொன்றே பலவிடங்களில் கூறப்பட்டுளது.

யாறுகள்.

### காவிரி.

இவ் யாறு, பெரும்புனல் பாய்வது.

'கழைநிலை பெறாஅக் காவிரி' (அகம். 6)

'கழையளந் தறியாக் காவிரி' (அகம். 326)

என்பன காண்க. இவ் யாற்றில் கழார் என்னும் பெரிய துறையின்கண் அத்தி என்பானொருவன், விழா நாளில் ஆடிக்கொண்டிருக்கையில், யாற்றுப்புனல் அவனை ஈர்த்துக்கொண்டு போய்விட்டது. இவ்வுண்மையைக் கவிநயம் பட,

'கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்டன் அத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்' (அகம். 222)

---

1. இம்மலை, அரசர் பலருக்கும் பொதுவாயிருந்ததனால், இதற்குப் பொதியில் (பொது இல்=பொதியில்)மலை என்று பெயராயிற்றுப்போலும்.

2. அகம். 198.

எனவும்,

'புனல்நயக் தாடும் அத்தி யணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு' (அகம். 376)

எனவும்,

'கடுந்திறல் அத்தி ஆடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்கு' (அகம். 396)

எனவும் வருணித்து உரைத்திருக்கின்றார்.

கழார்த்துறை, [1]மத்தி என்பவனுக்கு உரியது.

பதிற்றுப்பத்தில்,

'பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூடல் அனையை' (பதிற். 50)

என்று, மூன்று யாறுகள் கூடிய கூடல் ஒன்று கூறப்பட்டுளது. ஆயினும், அவற்றின் பெயர் கூறப்படவில்லை. அப் பாட்டின் உரையில், காவிரி, ஆன்பொருநை, குடவனாறு எனப் பெயர் எழுதப்பட்டிருத்தலின், அவற்றையே பெயராகக் கொள்ளுதல் கூடும். அங்ஙனம் கொண்டால், பரணர் பாட்டுக்களில், காவிரியோடு இவ்விரண்டு யாறும் வந்தனவாகும்.

## பேராறு.

இது, குட்டுவன் நாட்டது. இதில், கோடைக் காலத்தும் நீர் வற்றுதவரும்[2].

## காஞ்சியம் பெருந்துறை.

இது, பேரியாற்றில் (பேராற்றில்) உள்ளதொரு துறை[3]. அரசர்களை வாழ்த்துகையில், அவர் நாட்டுட் பாயும் யாற்றைக் கூறி, அதன் மணலினும் பல காலம் வாழுமாறு வாழ்த்துதல் மரபாகலின், இத்துறையின் மணலினும் பல நாள் வாழ்ந்திருக்கவேண்டும் என்று குட்டுவனைப் பரணர் வாழ்த்தியுள்ளார்.

'எங்கே வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே' (புறம். 9)

என்று நெட்டிமையார், பாண்டியனை வாழ்த்தியிருத்தல் அறிக.

---

1. அகம். 6.
2. பதிற். 43.
3. காஞ்சி என்பது ஓர் யாறு என்ப. பதிற். பக்கம். 168.

இனி, பரணர் பாட்டுக்களில் வந்துள்ள ஊர்களைக் குறிக்கின்றேன்:

ஊர்கள். இவர் பாட்டுக்களிற் காணும் ஊர்களுட் பலவற்றைக் குறித்துப் பிறர் பாட்டுக்களிலும் பல செய்திகள் கூறப்பட்டுள்ளன. அவ்வெல்லாவற்றையும் தொகுத்து எழுதின் 'மற்றொன்று கூறல்' ஆகுமாதலின், பரணர் பாட்டுக்களில் வந்துள்ள செய்திகளைமட்டுமே இங்கு எழுதுகின்றேன்.

### அரிமணவாயில்.

இஃது ஒரு பெரிய ஊர்; இதனையடுத்து, உறத்தூர் என்னும் ஊர் உளது[1].

### அலைவாய்.

இது, முருகக்கடவுளின் தலம் என்று கூறப்பட்டிருக்கின்றது[2]. திருமுருகாற்றுப் படையில் வரும் அலைவாய் என்பதற்கு, ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'நாமனூரலைவாய்' என்று பொருளெழுதியிருக்கின்றார். அலைவாய் என்பது திருச்செந்தூர் என்ப.

### அழுந்தை. (அழுந்தூர்.)

இது, திதியனுக்கு உரித்தாயிருந்தது. [3]அன்னி மிஞிலி, தன் தந்தையின் கண்ணைச் சிதைத்த கோசர்களைத் திதியன் கொன்றவுடனே, சிறந்த குழைகளைத் தரித்துக்கொண்டு இவ்வூரில் (அழுந்தையில்) உலவினாள். வெண்ணியில் கரிகாலன் வெற்றி பெற்றபோது, இங்கே விழாவெடுக்கப்பட்டது. இவ்வூர், மாயூரத்தையடுத்து உளது.

### ஆர்க்காடு.

இஃது, அழிசியினுடையது[4]; சிறந்த நகரம். [5]ஆர் (ஆத்தி) என்னும் மரங்கள் அடர்ந்த காடாயிருந்ததனால் ஆர்க்காடு என வழங்கலாயிற்று. இதனை, ஆறுகாடு என மயங்கி, வடமொழி

---

1. அகம். 266.
2. அகம். 266.
3. அகம். 196.
4. குறுந். 258.
5. இவ்வூர் ஆலமரத்தின் தொடர்புற்று ஆற்காடு (ஆல் காடு) என்னும் பெயருடையதாயிருக்கலாம்போலும்.

'ஷடாரண்யம்' என மொழிபெயர்த்துள்ளனர். இவ்வூர், வேலூர் ஜில்லாவில் பாலாற்றங்கரையில் உள.

## ஆலமுற்றம்.

இங்கே, சிவபெருமான் கோயில் உண்டு[1]. ஆய் எயினன், மிஞிலியோடு பொருது வீழ்ந்தபோது, பறவைகளெல்லாம் ஒருங்கு கூடி வானத்தில் ஞாயிற்றை மறைத்து, அவன்மேல் வெயில் விழாத படி செய்து, அவ்வழியே சென்று, ஆலமுற்றத்துத் தங்கியிருந்தன. ஆலமுற்றம் என்பது, இன்ன ஊர் என நன்கு விளங்கவில்லை.

## இருப்பை.

இது, விரானுடையது[2]. இவ்வூர், புதுக்கோட்டை ராஜ்யத்தில் [3]விராலிமலைக்குப் பக்கத்தில் உளது.

## உறத்தூர்.

இஃது, அரிமணவாயிலை யடுத்தது. பசும்பூட்செழியன் தன் ஏவலை மேற்கொள்ளாதிருந்த எவ்வியின் வலிமையை யடக்கி, இங்கே பெருஞ்சோறு எடுத்தான்; அது, பேரார்ப்பொடு நடந்தது[4]. இவ்வூர், தஞ்சாவூர் ஜில்லாவில் உளது.

## உறையூர்.

இவ்வூர், தித்தனுக்கு உரியதாயிருந்தது. இவ்வூரில், தித்தன் வெளியனது நாளோலக்கம் சிறப்புடன் நடந்து வந்தது[5]. இவ்வூர், திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் உளது.

## ஊணூர்.

இது, தழும்பனுடையது[6].

## கழார்.

இது, மத்தியினுடையது[7]; கடலை யடுத்தது; காவிரிப்பூம்பட்டினத்துக்கு நான்கு அல்லது ஐந்து மைல் தூரத்தில் இருக்கின்றது.

---

1. அகம். 181.
2. நற். 350.
3. விரான்மலை என்பது, விராலிமலை எனத் திரிந்து வழங்குகின்றது போலும்.
4. அகம். 266.
5. அகம். 226.
6. புறம். 348.
7. அகம். 6.

இவ்வூர்த்துறையில்தான், ஆட்டனத்தி என்பவன் ஆடுகையில் காவிரியாற்றால் ஈர்த்துக்கொண்டு போகப்பட்டான்.

காழூர்.

இது, கழுவுள் என்பவனுக்கு உரியதாயிருந்தது. வேளிர் பதினால்வரால் இவ்வூர் அழிவுற்றது[1].

குறும்பூர்.

விச்சிக்கோன் வேந்தரோடு பொருத காலத்தில், இவ்வூரார் (குறும்பூரார்) ஆர்த்தனர்[2] என்று தெரிதலின், இவ்வூர், விச்சிக்கோனுக்கு உரியதாயிருக்கவேண்டும்; இதனைக் கூறும் பாட்டு மிக்க பிழைபாடுடையதாயிருத்தலின், இச்செய்தி நன்கு விளங்க வில்லை.

குன்றூர்.

இது, பழமையான வேளிர் குலத்தவருடையது[3]; கீழ் கடலை அடுத்துளது[4].

கூடல்.

இது, பாண்டியர்களின் தலை நகரம்; மதுரை என்னும் பெயரும் உடையது. இவ்வூரில், செழியன் என்பவன், தன்னோடெதிர்த்து வந்த சேர சோழ வேந்தரை வென்றான்[5].

தொண்டி.

இது, மேலைக் கடற்கரையை யடுத்தது; பொறையனுடையது[6].

நீடூர்.

இஃது, எவ்வியினுடையது[7]. 'எவ்வி நீழ லன்ன' என்றும் காணப்படுகின்றது[8]; நீழல் என்பது 'நீடல்' என்று இருப்பின் அமைதியாகும். நீடல் = நீடூர்.

'நீடூர் கிழவோன் வாய்வாள் எவ்வி' (அகம். 266)

என்பது காண்க.

---

1. அகம். 135.
2. குறுந். 328.
3. நற். 280.
4. குறுந். 164.
5. அகம். 116.
6. குறுந். 128.
7. அகம். 266.
8. அகம். 366.

### பாரம்.

இது, நன்னனுடையது. 'பாரத்துத் தலைவன் ஆர நன்னன்' (அகம். 152) என்பதனால் இது விளங்கும். ஆயினும், இவ்வாறு கூறிய பரணர் தாமே,

'பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்
பாரத் தன்ன' (நற். 265)

என்று கூறியிருத்தலின், பாரம் என்னும் ஊர் மிஞிலிக்கும் உரியதாயிருந்தது என்று தெரிகின்றது.

மிஞிலி என்பவன், நன்னனுக்காக ஆய்எயினனைக் கொன்றான் என்று தெரிதலின், அவ்வென்றியின்பொருட்டு இவ்வூர், நன்னனால் மிஞிலிக்குக் கொடுக்கப்பட்டிருக்கவேண்டும்.

### பாழி.

இது, நன்னனுடையது. இவ்வூர்ப்பறந்தலையில், மிஞிலி என்பவன் ஒரு பேய்க்கு ஊட்டுவிழவினைச் சிறப்பாக நடத்தினான்[1]. இவன், நன்னனுக்குத் தான் முறைதவறாது ஆற்ற வேண்டுவன ஆற்றி, இவ்வூரைப் பெற்றான்[2]. வேளிர், நன்னனுடையது பாழியில், பெரும்பொருளைப் புதைத்து வைத்திருந்தனர்; அது சிறந்த காவலையுடையதாயிருந்தது[3].

### புகார்.

இது, சோழர் தலைநகரமாயிருந்தது. இவ்வூரில் உயர்ந்த மதிலும் சிறந்த வீடுகளும் இருந்தன[4].

### போர்.

இது, சோழநாட்டில் காவிரியை யடுத்தது; சோழர் மறவனாகிய பழையன் என்பவனுக்கு உரியது[5].

### மட்டவாயில்[6].

இவ்வூர், கொடிகள் அசைந்து விளங்கின தெருக்களை யுடையது. இவ்வூரில் செல்வர் பலர் வாழ்ந்திருந்தனர்[6].

---

1. அகம். 142.

2. 'முறையியல் வழாஅ தாற்றிப் பெறற...நன்னன் பாழி' (அகம். 142.) என்பது காண்க.

3. அகம். 258, 372.
4. அகம். 181.
5. அகம். 186.
6. அட்டவாயில் எனவும் கொள்ளலாம். அகம். 326.

## மரந்தை.

இது, குட்டுவனுடையது[1]. இவன், கடலோட்டிய வேல் கெழு குட்டுவனவான். இவ்வூரின் பெயர், மரந்தை என்பதுவே என்றும், மாந்தை என்பது தவறு என்றும் மேலே (பக்கம். 56.) கூறியுள்ளேன்.

## முசிறி.

இதுவும் குட்டுவனுடையதே[2]. இது, மேல்கடற் கரையினுள்ள கொடுங்கோளூரை யடுத்துளது. இது, முற்காலத்தில் சிறந்த துறை முகப்பட்டினமாயிருந்தது.

## மோகூர்[3].

இது, பழையனுக்கு உரியது. குட்டுவன் இவ்வூரிலிருந்த வேம்பினை வெட்டித் துணித்து வண்டிகளில் ஏற்றி, யானைகளைப் பூட்டிக் கொண்டுபோயினன்[3].

## வஞ்சி.

இது சேருடையது[4]. பரணர் பாட்டில் இவ்வூர், குட்டுவனுடையது என வெளிப்படையாகக் கூறப்பட்டிலதாயினும், அவர் காலத்தில், குட்டுவனுடையதாகவே யிருந்தது என்று ஊகித்தல் கூடும்.

## வாகை.

வாகைப் பறந்தலையில் கரிகாலனோடு எதிர்த்த மன்னர் ஒன்பதின்மரும் தோற்றுத் தங்கள் குடையையும் ஒழித்து ஓடிப் போயினர்[5]. இப்பெயர் கொண்ட மற்றோரூர் கூகைக்கோழிக்கு உரியதாயிருந்து. அங்கே, பசும்பூட்பாண்டியனுடைய வினைவலனாகிய அதிகன் என்பவன் களிற்றால் இறந்துபட்டான்[6].

## வெண்ணி.

இது, கோயில்வெண்ணி என வழங்கும். இவ்வூரில், கரிகாலனோடு வேளிர் பதினொருவரும் வேந்தரும் பொருது தோற்றனர். அதுபற்றி அழுந்தூரில் பெரியதோரார்ப்பு உண்டாயிற்று[7].

---

1. அகம். 376.
2. புறம். 343.
3. பாண்டிநாட்டில் மோகூர் என்னும் திருப்பதி ஒன்று உளது. பதிற். 44.
4. அகம். 396.
5. அகம். 125.
6. குறுந். 393.
7. அகம். 246.

இவ்வூர்களே யன்றிப் பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தின் பதிகத்தால் வேறுசில ஊர்களும், அவ்விடங்களில் குட்டுவன் செய்த செயல்களும் தெரியவருகின்றன. அவையாவன:

### இடும்பில்.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், கடவுட்பத்தினிக்குக் கற்கொள்ளவேண்டி வடநாடு சென்று திரும்புகையில், இவ்வூர்ப் புறத்தில் தங்கினன்.

### வியலூர்.

இது, குட்டுவனல் அழிக்கப்பட்டது.

### கொடுகூர்.

இவ்வூரையும் குட்டுவன் வென்றெறிந்தான்.

### வாயில்.

வாயிற்புறத்தில், சோழர் மரபினர் ஒன்பதின்மர் மடியும்படி, அங்கே குட்டுவன் தங்கியிருந்து போர்புரிந்து வெற்றி பெற்றான்.

### உம்பற்காடு.

இதன் வருவாயைக் குட்டுவன் பரணருக்கு நல்கியிருந்தான்.

விலங்குகள்.

பரணர், விலங்கு பறவை முதலிய உயிரினங்களை நன்கு கண்டறிந்து, அவற்றின் இயல்புகளை உளங்கொண்டவர் என்பது, அவர் பாட்டுக்களை நோக்குவோர்க்கு எளிதிற் புலனுகும். அவற்றுள், விலங்குகளைக் குறித்து அவர் கூறியிருப்பவற்றை முதற்கண் எழுதுகின்றேன்:

எருமை—நீர்நிலைகளில் இறங்கிச் சென்று, அங்குள்ள தாமரைப் பூவைத் தின்னும்; கழுநீர்ப்பூக்களை மேயும்[1].

குதிரை—குதிரைகளைப் போரில் பயன்படுத்துவர்; அவற்றின் வாயில் கடிவாளம் இடுதல் உண்டு[2].

நரி—நரிகள், போர்க்களத்திற்குக் கூட்டமாகச் சென்று, அங்கே கிடக்கும் பிணங்களை அழித்துத் தின்னும் இயல்புடையன[3].

நாய்—நாயின்வால் வலப்பக்கமாகச் சுரிந்திருக்கும்[4]. நாய், இரவில் வேற்றுமனிதர்களைக் காணின் குரைக்கும் இயல்புடையது[5].

நீர்நாய்—வாளைமீனை உணவாகக்கொள்ளும்[6].

---

1. நற். 260.
2. புறம். 4.
3. புறம். 369.
4, 5. அகம். 122.
6. அகம். 386.

பன்றி—பன்றியின் மருப்பு, வயிரம்போல் உறுதியுடையது; அதன் மயிர், வெதிரின் (மூங்கிலின்) வேர் போலப் பருத்திருக்கும். பன்றி, சேப்பங்கிழங்கைத் தின்னும்; தினைக்கதிரை மேயும்; சுனை நீரைக் குடிக்கும்[1].

புலி—பன்றியைக் கொன்று தின்னும்[2]. எருத்தை வாயாற் கவ்விக்கொண்டு செல்லும் வன்மையுள்ளது[3].

மான்—குமிழம்பழத்தைத் தின்னும்[4].

யானை—தினைப்பயிரைமேயும்; மூங்கிலைத்தின்னும்[5]. யானையின் மருப்பில் இருப்புத்தொடியை அணிதல் உண்டு[6]. யானை, தன் மருப்பினால் பகைவரது கோட்டைக் கதவினை இடித்துத் தகர்க்கும். காட்டுயானைகள் கூட்டமாகச் சென்று, கயங்களிற் படிந்து, நீரைக் கலக்கும் இயல்புடையன[7]. வலிமிக்க யானை, புலியைக் கொன்றுவிடும்[8]. யானை, புலி முழக்கம் கேட்பின் சினங்கொண்டு மேற்செல்லும்; புலியைக் காணுவிடின், அதன் நிறவொப்புமை பற்றி எதிரிற்காணும் வேங்கைமரத்தின் கிளையை வளைத்துப் பிளந்து தலையிற் சூடிப் பிளிறும்[9].

வெருகு—இது, குவிந்த அடியினையுடையது[10]. பிணவின் பசியை நீக்குதற்காக உணவு தேடும்பொருட்டு, மாலைக்காலத்தில் வரகின் கொல்லையில் மறைந்து நின்று, அங்கு மேயும் சேவலை (கோழி) அற்றம் பார்த்துப் பிடிக்கும்[11].

இனி, பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன ஆகிய உயிரினங்களைக் குறித்துக் கூறப்பட்டுள்ளவற்றை எழுதுகின்றேன்:

அன்னம்—இமயமலையிலிருக்கும் அன்னப்பறவைகள், தம் இளங்குஞ்சுகளுக்கு உணவினைத் தேடிச்சென்று, கடலில் மேய்ந்து, தம் வாயில் இரைகொண்டுபோகும்[12].

கூகை—இஃது, இராக்காலத்தில் இரை தேடும்; வீட்டெலிகளை உணவாகக்கொள்ளும்[13].

கொக்கு—மாரிக்காலத்தில், கொக்கு தன் சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு இருக்கும். அத்தோற்றம், ஆம்பலின் முகைபோலத் தோன்றும்[14].

---

1. அகம். 178.
2. அகம். 322.
3. புறம். 4.
4. நற். 6.
5. அகம். 148.
6. புறம். 369.
7. அகம். 6, 212.
8. அகம். 148
9. பதிற். 41.
10. 11. அகம். 367.
12. நற். 356.
13. அகம். 122.
14. நற். 280.

சிரல் (மீன்குத்திப் பறவை)—சிரல், கயத்தில் சுழன்று திரிந்து கொண்டே பாய்ந்து, நீரில் மீனைக் கவ்விக்கொண்டு வெளிப்படும்[1].

சேவல்—கதிருள்ள சென்னியை உடையது[2].

நாரை—இது, வாளைமீனைப் பிடிக்கச் செல்லுகையில், தன் காலடியின் ஓசை கேளாதவாறு பையப்பைய அடிவைத்துச் செல்லும்[3]. கயல்மீன், அயிரைமீன் இவற்றைத் தின்னும்[4].

வண்டு—வண்டுகள், யானை மதத்தில் வீழும்[5].

ஓதி—ஓதியின்வால் கூர்மையானது; அதன் அணல், நீல நிறமுடையது[6].

பாம்பு—இரவில் இரை தேடும்[7]; இரை தேடுகையில், தன் தலையிலிருக்கும் மணியை உமிழ்ந்து வைத்திருக்கும்; அஃது, அம் மணியை யிழந்துவிடின் மிகவும் வருந்தும்[8].

ஞெண்டு—இது, ஞாழலின் வேரின்கீழ் உள்ள அளையில் சிறு வீடு அமைத்து, அதில் தங்கியிருத்தல் உண்டு[9].

யாமை—யாமையின் மேற்புறம் கருங்கற்போல் உறுதியானது[10]. யாமை, பிறழும்போது கிணைபோலத் தோன்றும்[11].

இரு—வெண்ணிறமுடையது[12]. அது, நெல் வயலில் கதிரின் மேல் தெறித்துவிழுதல் உண்டு[13]. இருக்கள் பல ஒருங்கு கூடி, மரக்கலமும் சிதையும்படி தாக்கும் இயல்பின[14].

மீன்—கடல்மீன் நள்ளிரவில் துஞ்சும்[15].

வாளைமீன்—இரையை விரும்பி நீரில் மேலே எழும்[16].

இனி, பரணர் பாட்டுக்களில் மரம் முதலியவற்றைக் குறித்துக் கூறப்பட்டிருப்பவற்றை எழுதுகின்றேன் :

ஆம்பல்—இதன் இலை அகன்றது. இலையில், சோறு உண்ணுதல் உண்டு[17]. ஆம்பற்றண்டு துளையுடையது[18]. அத்தண்டினுல் வளை

---

1. பதிற். 42.
2. அகம். 367.
3. அகம். 276.
4. புறம், 354, குறுந். 128.
5. அகம். 148.
6. அகம். 125.
7. அகம். 258.
8. அகம். 372
9. குறுந். 328.
10. நற். 280.
11. அகம். 356.
12. அகம். 152.
13. அகம். 376.
14. அகம். 152.
15. அகம். 142.
16. அகம். 276.
17. அகம். 196.
18. நற். 6.

செய்து மகளிர் கையில் அணிந்து கொள்வர்[1]. ஆம்பலின்முகை, சிறகுகள் கூம்பியிருக்கும் கொக்கினை ஒத்திருக்கும்[2].

இருப்பை—இதன் பூ, வெண்ணிறமுடையது; குவிந்திருக்கும்; கோட்டாற் கடையப்பட்ட கழங்குபோலத் தோன்றும்[3].

இலவு—இலவம் பூ, செந்நிறமுடையது. மக்களது நாவின் செந்நிறத்திற்கு இதனை உவமை கூறியுள்ளார்[4].

ஈங்கை—ஈங்கையின் அரும்பு, இரவமரத்தின் வித்துப் போல்வது; அதன் பூ, ஆலி (ஆலாங்கட்டி) போல வெள்ளை யானது[5].

குமிழ்—குமிழமரம் பாலைநிலத்தில் உண்டாவது. இதன் கனி யின் மூக்கு வளைந்திருக்கும்; கனியை மான்கள் தின்னும்[6].

கூதளி—இது, மலை நிலங்களில் உண்டாவது ; குறுகிய தாளை யுடையது[7]. வெண்கூதாளத்தின் பூ, குருகுபோல் இருக்கும் ; அதன் தாது, பொன்போல் தோன்றும்[8].

சேம்பு—சேம்பின் இலை, நீல நிறமுடையது; அகலமானது. சேப்பங்கிழங்கு பிண்டம் போல் இருக்கும்[9].

ஞாழல்—இதன் பூ, சிறியதாயிருக்கும்[10].

தாமரை—இது, நெல்வயல்களிலும் உண்டாகும். இதனை எருமைகள் மேயும்[11].

பலா—பலாமரங்களின் வேர்களிலும் பழம் உண்டாகும்[12]. [இத்தகைய பலவினை, 'வேர்ப்பலா' என்று வழங்குவர்.]

பிரம்பு—பிரப்பம்பழத்தைப் பாணர் சோற்றுடன் வைத்து உண்பர்[13].

பீர்க்கு—இதன் பூவின் நிறம், பசலை நிறத்துக்கு ஒப்பிடப் பட்டுளது[14].

புன்கு—இதன் பூ, பொரி போல் தோன்றும்[15].

---

1. புறம். 63.
2. நற். 280.
3. அகம். 135.
4. அகம். 142.
5. அகம். 125.
6. நற். [illegible] .
7. குறுந். 60.
8. அகம். 178.
9. அகம். 178.
10. குறுந். 328.
11. நற். 260.
12. நற். 201.
13. அகம். 196.
14. அகம். 135.
15. அகம். 116.

பைஞ்சாய்க்கோரை—இது, பழனத்தில் வளர்வது. சிறுமியர் இப்புல்லை வாயில் வைத்துக் கோதி விளையாடுவர்[1].

மா—மாமரத்தை நீர்நிலைகளின் அருகிலும் வளர்ப்பர்[2].

மாணைக்கொடி—இது, மலைப்பக்கங்களில் உண்டாவது; அறைகளிலும் துறுகல்லின்மேலும் படரும்[3].

முள்ளி—இதன் மலர், நீலமணிபோன்ற நிறமுடையது[4].

மௌவல்—மௌவற்கொடி (முல்லைக்கொடி), மரங்களிற் படரும் தன்மை யுடையது; இதனை, வீட்டுமனைகளில் வைத்து வளர்ப்பர்[5].

வள்ளை—இக்கொடி, உள்ளே துளையுள்ளது[6]. இது, நீரில் இருப்பது.

---

1. அகம். 226.
2. நற். 280.
3. குறுந். 36.
4. அகம். 236.
5. குறுந். 19.
6. அகம். 376.

## VII

இனி, பாணர் செய்யுட்களில் கூறப்பட்டுள்ள நிலமக்களின் செயல்களை ஆராய்கின்றேன்: இவர் பாட்டுக்களுள், மகட்பாற் காஞ்சித்துறை யமைந்த பாட்டுக்கள் ஆறு காண்கின்றன. அவற்றுட் காணப்படும் செய்திகளுட் சிறந்தவற்றை முதற்கண் எழுதுகின்றேன்.

மறவர். மறவர், தம்மகளை விரும்பி வேந்தர் வரினும், அவர் பெருந்தகைமை யுடையரல்ல ராயின், அவருக்குத் தம் மகளைக்கொடுக்க உடன்படார்[1]. அதனால், பெரும்போர் நிகழ்தலாயினும் பின்னிடாது எதிர்த்துநின்று பொருவர்[2]. தகுதியில்லாதவர் எத்துணைப் பெரும்பொருள் தரினும் அவர்க்குத் தம் பெண்ணை மணஞ்செய்து கொடுத்தல் இலர்[3]. தம்மை ஒத்த வீரரோடன்றி இழிந்தோருடன் பொருது வெற்றி பெறுதலை விரும்பார்[4].

---

1. 'நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானும்'

என்னும் பகுதிக்கு, 'ஒத்து மாறுபட்டு வந்த வேந்தனொடு தன் தொல்குலத்து மகட்கொடை அஞ்சிய மகட்பாற்காஞ்சியும்' என்று உரையெழுதி, 'முதுகுடி-வேளாளர் குடியினைக் குறித்தது' என்று விளக்கம் எழுதினர் இளம்பூரணர். (தொல். புறத். 19.) இனி, நச்சினார்க்கினியர், 'பெண்கோளொழுக்கத்தின் ஒத்து, மறுத்தல்பற்றிப் பகைவனுய் வலிந்து கோடற்கு எடுத்து வந்த அரசனோடு முதுகுடித்தலைவராகிய வாணிகரும் வேளாளரும் தத்தம் மகளிரைப் படுத்தற்கு அஞ்சிய மகட்பாற்காஞ்சியானும்' என்று உரை கூறி, பின்னர், சங்கர ஜாதியார்கண்ணும் இத்துறை நிகழும் என்றார். ஆசிரியர் தொல்காப்பியனர், 'முதுகுடி' என்றது மறவர்குடியையே குறிக்கும் என்பது,

'கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி' (புறப்பொருள் வெண்பா. கரந்தைத். 14.)

என்பதனான் அறியப்படும். அன்றியும், கலம்பகங்களில், மகட்பாற் காஞ்சித்துறை யமைந்த மறத்தில், அரசன், மறவர்பெண்ணைக் கேட்டுத் தூதுவிடுத்ததாகவே கூறியிருத்தலும் ஈண்டைக்கு நோக்கத் தகும்.

2. புறம். 354.
3. புறம். 343.
4. பதிற். 42.

பரதவர், கடலையடுத்த இடங்களில் வாழ்பவர். இவர், தம் குடில்களுக்குத் தாழையினால் கூரைவேய்தல் உண்டு[1].

பரதவர்.

பரதவர் கடலிற்சென்று வலை வீசி மீன்களைப் பிடித்து வருவர்; பரத்தியர், அவற்றைக் கொண்டுபோய் ஊர்களில் நெல்லுக்கு மாற்றி வருவர். பரதவர்களே மீன்களை நெல்லுக்கு மாற்றி, அந்நெல்லைத் தோணியிற் கொண்டுவருதலும் உண்டு[2]. பரதவர் குளங்களிலும் மீன் பிடிப்பர்[3]. இவர், வானம் வேண்டாமலேயே வாழும் வாழ்க்கையுடையவர்[4] என்று புகழ்ந்து கூறப்பட்டுள்ளார்.

உமணர்—உப்பினை வண்டியிற் கொண்டுபோய் விற்றுவருவர்.

உழவர்—உழுதொழில் புரிபவர், பழங்கொல்லைகளில், செடி கொடி முதலியவற்றை அழித்து உழுது பயிரிடுதல் வழக்கம்[5].

நெல்லரிவோர்—நெல்லரிகையில் தண்ணுமை யறைந்து ஒலியெழுப்புவர்[6]. அவர், கட்குடித்தல் உண்டு. அதனால் உழவர், கட்குடங்களை வண்டியில்வைத்துக் கொண்டுபோய், அவர்களைப் பருகுவிப்பர்[7]. நெல்லரியும் வினைஞர், குளங்களிலுள்ள மீனைப்பிடித்து உணவாகக் கொள்ளுவர்[8]. வயல்களைக் காப்பவர், நத்தையைச் சுட்டுத் தின்னுதலும் உண்டு[9].

இனி, பாணர் முதலியோரைக் குறித்துப் பரணர் கூறியிருப்பவற்றை எழுதுகின்றேன்.

பாணர்.

பாணர், காலையில் நீர்த்துறைகளுக்குச் சென்று, அங்கு வரால் முதலிய மீன்களைப் பிடித்து விற்பர்[10]; மீன்களைத் திருத்தி உலர்த்துதல் உண்டு[11]. பாணர், சிறந்த வுணவு உண்பவர்[12].

பாண்மகளிர், கையில் [13]சிறு கோலை வைத்திருப்பர். அக்கோலின் நுனியில், வெள்ளிப்பூண் கட்டியிருக்கும்[14]. பாட்டியர், காலையில் தங்கணவரைத் துயிலுணர்த்தி, அவருக்கு உணவிட்டு, அவரை மீன்பிடிக்க அனுப்புவர்[15]. விறலியர், அரண்மனையில் ஆடு

1. நற். 270.
2. புறம். 343.
3, 4. அகம். 186.
5. அகம். 262.
6. நற். 350.
7. அகம். 116.
8. அகம். 236.
9. நற். 280.
10. அகம். 196.
11. புறம். 348.
12. நற். 310.
13. இக்கோல், பிறப்புணர்த்தன் கோல் எனப்படும்.
14. குறுந். 298.
15. அகம். 196.

வர்[1]. அவர், தலைவர்களுக்குப் பரத்தையரைச் சேர்த்துவைத்தலும் உண்டு[2].

கூத்தர்—கூத்தாடுவோர், ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்குச் செல்லும் பொழுது, சிறுவர் கையில் யாழைக் கொடுத்துவிட்டு, முழவு பதலை கொம்பு முதலியவற்றைத் தாம் சுமந்து செல்வர். அவர்கள், சிறுவர்களை ஓரிடத்தில் தங்கியிருக்கவிடுத்து, அரசர் முதலிய தலைவரைக் காணச்செல்லுவர். கூத்தச்சிறார் ஒருங்கு கூடிக் கடவுளை வாழ்த்திப் பாடுவர்[3].

வழக்கங்கள்.

இனி, பரணர் செய்யுட்களிற் காணும் பண்டை வழக்கங்களை ஆராய்கின்றேன்: முதற்கண், அரசர் வழக்கங்களாக வந்துள்ளவற்றைக் குறிக்கின்றேன்.

அரசர், தம் விருப்பத்திற்குப் பெண்ணின் சுற்றத்தார் உடன்படாவிடின் போர் தொடங்குவர்[4]. போருக்குச் செல்பவர், வழியில் மர நிழலில் தேரை நிறுத்தி, யானைகளை அங்குள்ள மரங்களிற் கட்டுவர்[5]. போர் புரிகையில் அஞ்சினோர், பகைவர் தேர் செலுத்தி வருதற்கு அரிதாகிய சுரத்தில் படையொடு தங்கியிருத்தல் உண்டு[6].

அரசர், வீரருக்காகவும், இரவலருக்காகவும் இனிய நறவினைக் குடங்களில் நிறைத்து, அவற்றைக் [7]கோக்காலியில் வைத்திருப்பர்[8]. நறவினையருந்தும் பொழுது இடையிடையே கடித்து இன்புறுதற்கு இஞ்சியும், மோந்து இன்புறுதற்கு நறுமலரும் விரவித்தொடுத்த மாலையை, கட்குடத்தின்மேல் சார்த்தியிருப்பர்[9]. அரசர், தம்மைப் பாடுவோருக்குப் பிடியும் கன்றும் களிறும் பரிசிலாக வழங்குவர்[10]. வெற்றிமுரசிற்குப் பலியிடுதல் வழக்கம்[11]. பெருவேந்தர், வேனிற்காலத்திற் கோயிலினீங்கி, வளம் பொருந்திய பொழில்களில் வதிந்து இன்புறுவர்[12]. இறந்த அரசரது உடம்பினைத் தாழியில் வைத்துப் புதைப்பர்[13]. தேர்களில் மணிகளைக் கட்டுதல் உண்டு[14]. தேர்க்குதிரைகளுக்குக் காலிற் கெச்சை கட்டுவர்[15].

---

1. பதிற். 47.
2. நற். 310.
3. பதிற். 41.
4. புறம். 336.
5. புறம். 348.
6. பதிற். 46.
7. கோக்காலி, ஏணி போன்ற வடிவமுடையது. அதனை, இரண்டு நெடுஞ்சுவர்களுக்கு இடையே குறுக்காக அமைத்திருப்பர்.
8. பதிற். 43.
9. பதிற். 42.
10, 11. புறம். 369.
12. பதிற். 48.
13. பதிற். 44.
14. புறம். 145.
15. அகம். 122.

ஊர்கள்—காவலர், இராக்காலங்களில் தூங்காமல் ஊர்களைக் காத்துவருவர். பேரூர்களில் விழா இல்லாத காலத்திலும் இரவில் கடைத்தெருவின்கண் மாந்தர் திரிந்துகொண்டிருப்பர்[1].

மகளிர்—மகளிர், ஆம்பற்றண்டாற் செய்த வளையைக் கையில் அணிதல் உண்டு[2]. தலைவனற்ற மகளிர், வளையை நீக்கிவிடுதல் வழக்கம்[3]. பெண்டிர், கூந்தலில் தகரம் முதலிய மணமுள்ள பொருள்களைப் பூசுவர்[4]; அவர், நீர்நிலைகளில் நீராடும் பொழுது வாளைமீன் பிறழ்தலைக் காணினும் அஞ்சியோடும் இயல்பினர்[5].

இளமகளிர், சிறு குன்றின்மேல் ஏறி நின்று புனலிற் பாய்ந்து விளையாடுவர்[6]; அவலை வாயிற் போட்டுக்கொண்டே புனலிற் குதித்து விளையாடுதலும் உண்டு[7]. நீர்த்துறைகளில், பாவைசெய்து வைத்து விளையாடுவர்[8]; கழனிகளில் குருகோட்டும் சிறுமியர், கோரைப்புல்லை வாயில் வைத்துக் கோதுதலும், நீரில் விளையாடுதலும் வழக்கம்[9].

இனி, பரணர் பாட்டுக்களிற் காணும் வேறு சில வழக்கங்களைக் குறிக்கின்றேன்:

விற்றொழிலிற் பழகுவோர் இலக்கு வைத்து அதன்மேல் எய்து பழகுதல்[10].

அரண்மனையில், கால்விளக்கின்கண் திரிக்குழாயில் நெய் விட்டு எரித்தல்[11].

மாலையில், செவ்வழிப் பண் பாடுதல்[12].

---

1. அகம். 122.
2. புறம். 63, 352.

இவ்வழக்கம் மிகப் பழமையான காலத்தில் உண்டு. முதன்முதலில், மக்கள் தங்களுக்கு எளிதிற்கிடைக்கும் பொருள்களையே அணியாக அணிந்து வந்தனர் என்பது, குழை, ஓலை, கோடி என்னும் அணிகளின் பெயரால் அறியக்கூடும். இன்றும் சிலர், பனையோலையைக் காதில் அணிந்துகொண்டிருத்தல் இதனை வலியுறுத்தும்.

3. அகம். 186.
4. அகம். 181.
5. நற். 310.
6. புறம். 352.
7. புறம். 63.
8. அகம். 181.
9. அகம். 226.
10. புறம். 4.
11. பதிற். 47.
12. புறம். 144.

பண்டை நூல்களிற் பலவிடங்களிலும் செவ்வழிப்பண், மாலைக் காலத்திற் பாடும் பண்ணாகவே காண்கின்றது. ஆயின், கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர், 'தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை' (நாட்டுப். 14.) என்று கூறியிருக்கின்றார். புறம். 149-ஆம் பாட்டிற்கு, செவ்வழிப்பண் காலையிற் பாடுதற்கு உரியது எனப் பொருள் கூறினும் அமையும். ஆயினும், உரைகாரர் அங்ஙனம் எழுதவில்லை.

பாடுவோர், கடையாமத்திற் பாடுதல்[1].

யாழ்வாசித்தலைக் கேட்போர், தலை அசைத்துக் கேட்டல்[2].

மண்ணை அரைத்து மதில் கட்டுதல்[3].

மட்கலத்திற் பால் கறத்தல்[4].

பனங்குடையில் அவலை வைத்திருத்தல்[5].

பனங்குடையில் பூப்பறித்தல்[6].

குறிஞ்சிநிலத்து வீடுகளில் முல்லைக்கொடி வைத்து வளர்த்தல்[7].

உரலில் குற்றுகையில், தலைவனைக் குறித்துப் பாடுதல்[8].

கோட்டால் கழங்கு கடைதல்[9].

மாடங்களின்மேல் மகாமீன்போலச் செய்து வைத்தல்[10].

பாம்பினை அடித்த கோலைத் தனியாக வைத்திருத்தல்[11].

பஞ்சினை வில்லால் எஃகுதல்[12].

பெற்றோர், ஒருவற்கு நேர்ந்த பெண்ணைப் பிறருக்குக் கொடாமை[13].

மணமகளுக்கு விலை கொடுத்தல்[14].

மணமகளுக்கு விலையாகத் தேர்கொடுத்தல்[15].

முரசுகளுக்கு மயிர் சீவாத தோலைப் போர்த்தல்[16].

மிளகினை உலக்கையால் குற்றி எடுத்தல்[17].

வாளால் உண்டான வெட்டினை ஊசியால் தைத்துக் குணப் படுத்துதல்[18].

அகப்பொருட் பாட்டிற் கூறப்படும் தலைவர் முதலியோர்.

தலைவன்—தலைவன், ஒரு பொழிலில் தலைவியைக் கண்ணுற்று, அவளோடு கூடுகின்ற முதனாளில், அவளைப் பிரிந்துறைதல் இல்லை என்று சூளுறவு செய்வான்[19]; முருகக்கடவுளைச் சார்த்திச் சூள் செய்

---

1. அகம். 208.
2. புறம். 145.
3. புறம். 341.
4-6. புறம். 352.
7. குறுந். 19.
8. குறுந். 89.
9. அகம். 135.
10. அகம். 181.
11. அகம். 322.
12. நற். 247.
13-15. நற். 300.
16. புறம். 63.
17. பதிற். 41.
18. பதிற். 42.

இஃது, இக்காலத்தில் மேனாட்டாரின் மருத்துவ முறைகளுள் முக்கிய மானதாகக் காணப்படினும், பண்டைக் காலத் தமிழ்மக்கள் இப்பயிற்சி யுடையராயிருந்தனர் என்பது மிகவும் பாராட்டத் தக்கதே யாகும்.

19. குறுந். 36.

தலும் உண்டு[1]. அவன், அவள்பால் வைத்துள்ள அன்பு மறுமையிலும் நிலையாயிருக்கவேண்டும்[2] என்னும் எண்ணங்கொண்டு அவளைக் காதலித்துச் செல்லுவான்; பின்னர், தன் கருத்தைத் தலைவிபால் நேரேவெளியிடப் பெறுமல், தோழியினிடம் குறையிரந்து நின்று அவளால் தலைவியைக் கூடுதல் வழக்கம். தோழி, தலைவியினிடம் நயமாக மென்சொற்களாலும் வன்சொற்களாலும் தலைவன் கருத்தினைத் தெரிவிப்பாள்.

களவொழுக்கத்தில் தலைவன், தலைவியின் சேரிக்குச் சென்று தோழிபால் குறையிரத்தலும், அங்கே வெவ்வேறிடங்களில் தங்கியிருத்தலும்[3] உளவாகும். களவொழுக்கம் இராக்காலத்தும் நிகழுமாகலின், தலைவன் நள்ளிரவில் காவலர் சோர்ந்திருக்கும் அற்றங் கண்டு செல்வான்[4]. அவன் அறிவித்திருந்தபடியே தலைவியும் குறியிடத்தைச் சேர்ந்திருப்பாள்.

தலைவியை மணந்து அவளோடு கூடிவாழும் தலைவன், பரத்தையர் சேரியில், இளமகள் கூத்தாடுதலைக் காண விரும்பி, அங்குச் சென்றிருத்தலும்[5], அவளொடு புணையிற் சென்று புனலாடுதலும்[6], உண்டு என அறியப்படுகின்றது. தலைவன் [7]கடவுளர் வினையை மேற்கொண்டு பிரிதலும் உண்டு.

பாங்கன்—அரியளாகிய தலைவியைக் கருதிக் கவன்ற தலைவனை நோக்கி, 'நீ கவலாதி' என்று அறிவுறுத்திய செய்தி காண்கின்றது[8].

தலைவி—தலைவனைக் கண்டு, அவனோடு இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த நாளில், அவன் உரைத்த சூளினை நம்பித் தெளிந்திருப்பாள்; தலைவனைப் பலமுறை காணுதலையே தனக்கு உவப்பாகக் கருதும் இயல்பினள்[9]. தலைவி, தனக்குத் தலைவன் கூறியனுப்பியவாறே, நள்ளிரவில் குறியிடத்திற்குச் சென்று, அவனைக் கூடுதலும் உண்டு[10]. அயலார் கூறும் பழிமொழிகளைக் கேட்டு மிகவும் வருந்துதலும்[11], தலைவன் எத்துணைத் தீமைசெய்யினும் அவனையன்றி வேறு அறியாமையும்[12], தலைவன் பிரிந்திருக்குங் காலத்தும் தம் இல்லத்திற்கு வரும் விருந்ினரைப் பேணி

---

1. அகம். 266.
2. குறுந். 199.
3. குறுந். 298.
4. அகம். 162.
5. அகம். 76.
6. அகம். 246.
7. அகம். 125.
8. நற். 201.
9. குறுந். 60.
10. அகம். 142.
11. குறுந். 24.
12. நற். 247.

விருந்தோம்புதலும்[1], பண்டைத் தமிழப்பெண்டிர்பால் அமைந்திருந்த நல்லியல்புகளாகும்.

தோழி—தலைவனைத் தன் வயப்படுத்த அறியாத தலைவிக்குச் சூழ்ச்சி சொல்லுதல்[2], தலைவன் குறையைத் தலைவிபால் மெலிதாகவும்[3] வலிதாகவும்[4] கூறுதல், 'தலைவனோடு புலத்தல்ஆகாது' என்று தலைவிக்கு அறிவுரை கூறுதல்[5] ஆகிய இவை, தோழியின் கூற்றாக வந்துள்ளன.

தாய்—மகளின் களவொழுக்கம் அறிந்து கவன்று, இரவில் உறங்குதலில்லாமல் மகளைக் காவல் காத்தலும், தலைவன் விருந்தினனாகவரினும் அதனை அயிர்த்தலும்[6], தாயின் செயல்களாக வந்துள்ளன.

பரத்தையர்—விழா நடக்கும் இடங்களுக்குச் செல்லுவர்[7].

பாணர் பாட்டுக்களால், வேறு சில செய்திகளும் தெரிய வருகின்றன. அவையாவன:

இமயமலையில் பொற்கோடு உளது[8].

இமயமலையில் அரமகளிர் வாழ்தல்[9].

இமயமலையில் வாழும் அரமகளிர் அன்னப்பார்ப்புக்களை விரும்புதல்[10].

இமயமலையில் யானை மிகுதி[11].

இமயமலையில் அன்னப்பறவைகள் வதிந்திருத்தல்.[12]

அன்னப் பறவைகள் இமயமலையினின்று கடலுக்குப்போய் மேய்ந்து, பார்ப்புக்களுக்கு இரை கொண்டுபோதல்[13].

---

1. நற். 280.
2. குறுந். 73.
3. குறுந். 298.
4. அகம். 356.
5. நற். 280.
6. குறுந். 292.
7. அகம். 326.
8. புறம். 369. பொற்கோட்டினை, வடமொழியில் காஞ்சன சிருங்கம் என வழங்குவர். அதுவே ஆங்கில மொழியில், 'Kinchin Junga' என மருவி வழங்குகின்றதுபோலும்.
9. நற். 356.
10. நற். 356.
11. பதிற். 43.
12. நற். 356.
13. நற். 356.

கொல்லிமலையில் தெய்வப்பாவை உண்டு[1].

கொல்லிமலையில் பலா மிகுதி[2].

மலைகளில் சூரரமகளிர் வாழ்ந்திருத்தல்[3].

பூழியர் (சேரர்), யானைகளை யுடையவர்[4].

கவரிமான்மயிர் கறுப்பாயிருத்தல்[5].

கின்னரப்புள்ளின் சிறையோசை இசையுடையது[6].

மதுவைத்திருக்குங்கலம் அதன் களிப்பின் மிகுதியால் அசைதல்[7].

மிக்க மழை பெய்த முகில்கள் வெளுத்து, வைகறையில் மலைமேல் அசைதல்[8].

பொற்பாவை, வெயிலில் நிற்பின் ஒளி தருதல்[9].

மகளிர்க்கு, புணர்ச்சியினால் மேனி ஒளி செய்தலும், பிரிவினால் நிறம் வேறுபடுதலும்[10].

அழகு குறைந்த மாமை நிறம், ஆம்பற்றண்டினை யுரித்தாற் போல்வது[11].

பசலை, நுதலிற் பரவுதல்[12].

## கவிமரபான செய்திகள்.

சில செய்திகளைப் புலனெறி வழக்கமாகப் புலவர் கூறுவர். அவ்வாறு கூறுதலை வடமொழியில் கவி ஸமயம் என்பர். பரணர் பாட்டுக்களில் அம்மரபினில் வந்துள்ளவற்றை ஈண்டுக் குறிக்கின்றேன்:

உயிர்களை உண்ணுதலின் யமன்பற்கள் மழுங்குதல்[13].

பேய் பிணந்தின்னுதல்[14].

பேய், யாமத்தில் இயங்கும். அதுவும் இயங்காதுவைகும் நள்ளிரவு உண்டு[15].

---

1. நற். 201, குறுந். 89.
2. நற். 201.
3. அகம். 162.
4. அகம். 6.
5, 6. பதிற். 43.
7. பதிற். 42.
8. நற். 247.
9. அகம். 212.
10. அகம். 62.
11. நற். 6.
12. அகம். 135.
13. புறம். 4.
14. புறம். 369.
15. அகம். 122, 62.

## VIII

பண்டைக்காலத்துப் புலவர் பாட்டுக்களில், பிற்காலத்துப் புலவர் பாட்டுக்களிற்காணும் சொல்லணிகளைக் காணுதலரிது. பிற்காலத்தில், பொருட் சிறப்பினை நோக்காமல், சொல்லழகினை மட்டுமே கருதிப்பாடிய புலவரும் பலர். பண்டைப் புலவர், சொல்லணியில் மனங்கொண்டவரல்லர்; ஆயினும், சிலவிடங்களில், எதுகைத் தொடை முதலியவற்றை அமைத்துள்ளனர்.

நயமுள்ள பாட்டுக்கள்

பரணர் பாடியுள்ள அகப்பொருட் பாட்டுக்கள் அறுபத்திரண்டனுள், தலைவர்களின் செய்தியோ, அன்றி, யாதேனும் ஒரு வரலாறோ கூறப்படாத செய்யுட்கள் பதினொன்றே. யாதாவதொரு வரலாற்றை யறிவித்தற்காகவே, இவர் பெரும்பாலும் அகப் பொருட்பாட்டுக்களை இயற்றுவர் என்பதை இதனால் அறியலாகும். பரணர், வரலாறுகளை யறிவித்தலிலேயே தமது நோக்கம் முழுவதையும் செலுத்தியிருப்பினும், சொற்பொருள் நயங்கள் பிறர் பாட்டுக்களிற் காணப்படுதல் போலவே தம்பாட்டுக்களிலும் அமைவரப் பாடியிருக்கும் திறமை பாராட்டத் தக்கதே. அவற்றுட் சில வற்றை இங்கே எழுதுகின்றேன்:

பரணர், தம் பாட்டுக்களிற் பெரும்பாலும் எதுகை மோனைகளை அமைத்துப் பாடியிருக்கின்றார். சிலவிடங்களில், பல அடிகளிலும் எதுகை காணப்படுகின்றது.

'ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோ என வினவ லானுக்
காரே றெக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே இனியே
இன்னே மாயினேம் மன்னே என்றும்
உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅம் மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்' (புறம். 141)

'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேகன்' (புறம். 145)

'முகைவனப் பேந்திய முற்று இளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தஇப் பண்பில் தாயே.' (புறம். 336)

இவ்வடிகளிற் காணும் எதுகைத்தொடைநயம் நோக்கத் தக்கதாகும்.

பரணர் கூறும் உவமையும் மிக்க அமைவுடையதாகக் காண்கின்றது. பேகனைக் குறித்துப்பாடிய,

'அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கோடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே' (புறம். 142)

என்னும் செய்யுளில், அவனது கொடைமடத்திற்கு, மாரியின் வரையாத இயல்பினை ஒப்பிட்டிருத்தல் மிக்க அமைவுடையதாதல் அறிக.

பரணர் செய்யுட்களுள், மகட்பாற்காஞ்சித் துறையில் ஆறு செய்யுட்கள் காண்கின்றன. அவற்றுள், புறம் 341-ஆம் பாட்டின் பொருட்பொலிவு மிக்க இன்பந்தருவதாகலின், அப்பாட்டிற் சில அடிகளை இங்கே குறிக்கின்றேன் :

'புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்றம் மாறான் மறலிய சினத்தன்
பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுதல் ஒன்றெனப்
படைதோட் டனனே குரிசில் ஆயிடைக்
களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருங்கவி னிழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பின் இத் தண்பணை யூரே'

இவ்வடிகளிற் காணும் மறமும், வஞ்சினமொழியும் அறிந்து இன்புறற்பாலன.

### தலைவன் கூற்று.

தலைவன், களவொழுக்கத்தில் தன்னைத் தலைவி முயங்கிச் சென்றதைக் குறித்துக் கூறும் துறை யமைத்துப் பாடப்பட்ட செய்யுட்களுட் சில பகுதிகள் இன்பம் பயப்பனவா யிருத்தலின், அவற்றை இங்கே எடுத்து எழுதுகின்றேன்:

'விளிவிட னறியா வானுமிழ் நடுநாள்
அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கிப்
பனிமயங் கசைவளி அலைப்பத் தந்தை
நெடுநக ரொருசிறை நின்றனெ னாக
அறலென அவிர்வரும் கூந்தல் மலரென
வாண்முகத் தலமரும் மாயிதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண் டிலங்கும் நலங்கெழு துவர்வாய்க்
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
காலுறு தளிரின் நடுங்கி ஆனாது
நோயசா வீட முயங்கினள்.' (அகம். 162)

இச்செய்யுட் பகுதியில், தலைவியின் அழகினையும், அவள், தன்பால் வந்த இயல்பினையும் தலைவன் கூறியிருப்பது நயமுடையதாகும்.

'மிகு பெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்திகழ் ஒண்ணுதல் மாஅ யோளே.' (அகம். 208)

இப்பாட்டில், நாணுவரை நில்லாக் காமத்திற்குக் கூறியுள்ள உவமை மிக்க இயைபுடையதாதல் அறிக. இவ் வுவமை, இவர் செய்யுளிலேயே காண்கின்றது.

தலைவன், தலைவி அரியளாகிய நிலையைக் குறித்துச் சொல்லும் துறை அமைந்துள்ள செய்யுட்களுள், இன்பந் தருவதாகிய செய்யு ளொன்றனை இங்கே எழுதுகின்றேன்:

'குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
சேயள் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.' (குறுந். 128)

## தலைவி கூற்று.

இனி, தலைவி கூற்றாக வரும் செய்யுட்களுட் பொருணயம் மிகுந்த சிலவற்றை எடுத்து எழுதுகின்றேன்:

'குறுந்தாட் கூதளி ஆடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருங்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே.' (குறுந். 60)

'முடவன் கொம்புத்தேனை விரும்பினது போல' என்னும் உவமை, புலவர் பிறர் செய்யுட்களிலும் காணுமாயினும், 'முடவன் கையைக் குடையாக வளைத்துத் தேனைச் சுட்டிக்கொண்டு நக்கி இன்புற்றது போல' என்பது, இவர் செய்யுளிலேயே காண்கின்றது.

இப்பாட்டில், தலைவி தலைவன்மாட்டுக்கொண்டுள்ள காதலின் மிகுதியைக் கூறியிருக்கும் முறை மிக்க நயமுடையதேயாகும்.

தலைவி, தலைவன் பிரிவினால் உடனே உண்டாகும் பசலையின் தன்மையைக் குறித்துக் கூறும் துறையமைந்த பாட்டு மிக்க இன்பம் ஊட்டுவதாகும். அஃது,

'ஊருண் கேணி உண்டுறை தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழி தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே.' (குறுந். 399)

என்பது. பசலை, துறைக்கணிருக்கும் பாசியை ஒக்கும் என்பதும் இவர் செய்யுளிலேயே காண்கின்றது.

தலைவி சூல்கொண்ட காலத்துப் பரத்தையிற் பிரிந்துறைந்து, அவள் மகப்பெற்றுச் சின்னாளானதன்பின் அவள்பாற் சென்ற தலைவன் உரையாடக்கேட்டு, அவள் (தலைமகள்), ஊடலாற் கூறும் கூற்று, பொருட்சிறப்புற்றுப் பொலிவுறுகின்றது. அது,

'குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்
கேந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே இன்றுவந்
தாக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாயென

மாயப் பொய்மொழி சாயினை பயிற்றி
எம் முதுமை யெள்ளல் அஃ தமைகும் தில்ல
*            *            *            *
எம் இளமை சென்று தவத்தொல் லஃதே
இனியெவன் செய்வது பொய்மொழி எமக்கே.'

(அகம். 6)

என்பது.

இதில், தலைவன், தலைவியைப் 'புதல்வன் தாய்' என்று கூறிய தற்கு, தலைவி கொண்ட கருத்தும், அவள் கூறிய கூற்றும் இன்பம் பயப்பனவாகும்.

பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டின்கண் தலைவர், மகளிர் கருவுற்றிருக்கும் காலத்தில் அவரொடு கூடுதல், கருவிற்குத் தீங்கு பயக்கும் என்றறிந்து, அக்காலங்களில் தலைவியினீங்கி, பரத்தையருடன் கூடியிருந்து, தலைவிமகப்பெற்று, வாழ்க்கைக்குத் தக்கவளாய காலத்தில், அப் பரத்தை யரினின்றும் பிரிந்து தம் மனைப்புக்குத், தலைவியோடு இன்புற்று வாழ்ந்து வருதல் வழக்காறு. இஃது இலக்கியங்களாலும் இலக்கணங்களாலும் அறிய வருகின்றது. இவ்வாறே, தலைவிக்குப் பூப்பு நிகழ்ந்து பதினறுநா ளாயினபின்னர்க் கருவுறுதாகலின், அக் காலத்தும் தலைவர் பரத்தையில்லம் புகுவர். கருத்தங்கும் நாட்களில் மனைவியரை விட்டகலுதல் முறையன்று என்பது அவர் தங் கொள் கையாதலின், அக்காலத்தில் தலைவியரைப் பிரிந்து செல்வா ரல்லர். இவ் வழக்கத்தால், பண்டைக்காலத் தமிழர், மகப்பேற்றினை வேண்டியே தம்மனைவியருடன் கூடுவர் என்பதும், மற்றை நாட்களில் அவரொடு கூடுவாரல்லர் என்பதும் தெளிவாகும்.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனொடு தலைமகள் ஊடிக் கூறும் துறை யமைந்த மற்றொரு பாட்டின் ஒரு பகுதியைக் கீழே குறிக்கின்றேன்:

'என் தோல்கவின் தோலையினும் தோலைக சார
விடேஎன் விடுக்குவே னுயிற் கடைஇக்
கவவுக்கை தாங்கும் மதுகைய குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
ஆசி லகலந் தழீஇபற்று
வாரல் வாழிய கவைஇநின் றோளே'

(நற். 350)

இதில், 'யான் நின்னை உள்ளே விடமாட்டுகிலேன்; யான் விடினும், என் கைகள் உன்னை உட்புக வொட்டாமல் தடுக்கும் வலிமைய' என்பதும், பிறவும் இன்பந்தருவனவாதல் அறிக.

## தோழி கூற்று.

இனி, தோழி கூற்றாக வந்துள்ள செய்யுட்களுள் நயமுள்ள தொன்றனைக் குறிக்கின்றேன் :

தோழி, வாயிலாகப் புக்க விறலியை நோக்கிக்கூறும் பகுதியிற் பொருளும் உவமையும் சிறப்புடையனவாகக் காண்கின்றன:

'உண்டுறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழு மூரற்கு நாளை
மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரோ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
களிறுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யாதும் இல்லதோர் போர்வையஞ் சொல்லே.'
(நற். 310)

இவ்வடிகளில், விறலியை நோக்கி, 'நீ பரத்தையரின் தாய்மார் களிடம் நின் பொருளற்ற வெற்றுரையைச் சொல்வாயல்லைகொல் ?' என்று கூறும் கூற்றும், பொருளற்ற சொல்லிற்குக் கூறியுள்ள உவமையும் இன்பம்பயப்பன வாதல் அறிக.

## பரத்தை கூற்று.

பரத்தை, தலைமகட்குப் பாங்காயினர் கேட்பக் கூறும் துறை யில் இன்பம் பயக்குஞ் செய்யுளை இங்கே எழுதுகின்றேன்:

'நீளிரும் பொய்கை இரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறாத லஞ்சிப் பையப்பயக்
கடியிலன் புகூஉம் கள்வன் போலச்
சாஅ யொதுங்கும் துறைகே ழூரனொ
டாவ தாக இனிநாண் உண்டோ
வருகதில் லம்ம எஞ் சேரி சேர
அரிவே யுண்கண் அவன் பெண்டிர் காணத்
தாரும் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்
றிரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துகதில்ல யாய் ஓம்பிய நலனே.' (அகம். 276)

இப்பாட்டில், பரத்தை, 'தலைவனைப் பிணித்துக் காவல்கொள் வேன்' என்று கூறும் கூற்றும், 'வாளைமீனை யுண்ண விரும்பிய நாரை, தன் அடி அறிவுறு வண்ணம் பையப்பைய ஒதுங்கும்' என்னும் உள்ளுறை யுவமமும், 'கடியிலன் புகூஉங் கள்வன் போல' என்னும் ஏனையுவமமும், பொருளும், பொலிவுற்று விளங்குதல் அறிந்து இன்புறற்பாலது.

'உள்ளுதோறும் நகுவேன் தோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
தேங்கமழ் ஐம்பால் பற்றி என்வயின்
வான்கோ லெல்வளை வெளவிய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்று
நின் மனையோட் குரைப்பல் என்றலின் *
* * *
புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்களுர் நிலையே.' (நற். 100)

இப்பாட்டில், தலைவன் நடுங்கிய நிலைமைக்கு, 'முழவின் மண்ணார் கண்ணின் அதிரும்' எனக் கூறியுள்ள உவமையின் நயமும் தலைவனது இயல்பும் அறிக.

காதற் பரத்தை கூற்று.

இனி, காதற் பரத்தை கூறும் துறையில், எடுத்துக்காட்டாக ஒரு செய்யுளினின்று சில அடிகளை எழுதுகின்றேன்:

'தொடுத்தேன் மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன் உயிர்கொடுத் தனனே சொல்லிய தமையாது
தெறலருங் கடவுள் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்
தார்வ நெஞ்சம் தலைத்தலைச் சிறப்ப
நின் மார்புதரு கல்லாய் பிறனா யினையே
இனியான் விடுக்குவெ னல்லேன் * *
* * *
நின் மனையோள் வவ்வலும் அஞ்சுவல் *
* வஞ்சி யன்ன என் நலந்தந்து சென்மே.' (அகம். 396)

இப்பகுதியில், தலைவன் தன்மையும் தலைவியின் திறனும் பாத்தை கூறியுள்ளவாறும், தலைவனது பொய்மையை எடுத்துக்காட்டி, அவள் அறிவிக்கும் முறையும் அறியத்தக்கன.

களவொழுக்கத்தில், இரவுக்குறியின் இடையீடுகளெல்லா வற்றையும் ஒரு பாட்டிற் கூறி யிருப்பது அருமையும் இனிமையும் உடையதாகும். அதனால் அதனை யீண்டுத் தருதல் மிகையாகாது என்று கருதி எழுதுகின்றேன்:

'இரும்பிழி மாரி யழுங்கன் மூதூர்
விழவின் றாயினும் துஞ்சா தாகும்
மல்ல லவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோ ளருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்
எல்லாம் மடிந்த காலை ஒருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே
அதனால் * * * *
பன்முட் டின்றால் தோழி நங் களவே.' (அகம். 122)

இப்பாட்டில், இரவுக்குறியின் இடையீடாக ஊர் துஞ்சாமை, தாய் துஞ்சாமை, காவலர்கடுகுதல், நாய்குரைத்தல், நிலவு வெளிப் படுதல், கூகை குழறுதல், கோழி கூவுதல் ஆகிய எல்லாவற்றையும் ஒருங்கே கூறியிருக்கும் அழகு அறியத்தக்கது.

அறவுரை.

பரணர் தமது பாட்டுக்களில் தலைவன் கூற்றாகவும் தோழி கூற் றாகவும் பிறர் கூற்றாகவும் கூறுமிடங்களில் ஆங் காங்குக் காணப்படும் அறவுரைகளுள்,

'இரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்ல யா யோம்பிய நலனே.' (அகம். 276)

என்பது சிறந்ததாகும்.

பெண்கொலை புரிதல் மிகவும் கொடியதென்பதும், அதனைச் செய்வோர் மீளா நிரயத்து வீழ்ந்து வெந்துயருறுவர் என்பதும்,

'பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை' (குறுந். 292)

என்னும் அடிகளிற் கூறியுள்ளார்.

'தலைவன் அருள் செய்யினும் அன்றித் தீங்கிழைப்பினும் மனைவி அவன்வழிப் படுதல் வேண்டும்' என்னும் பொருளை,

'நீ நல்கா யாயினும் நயனில செய்யினும்
நின்வழிப் படூஉம் என் தோழி' (நற். 247)

என்னும் தோழிகூற்றால் அறிவித்துள்ளார். வேறு பல அறவுரை களையும் ஆங்காங்குக் காணலாகும். நிற்க.

இயற்கை நவிற்சி.

பரணர்பாட்டுக்களிற் பலவிடத்தும் இயற்கைப் பொருள்களைப் பற்றிய தன்மைநவிற்சி அமைந்துளது. எடுத்துக் காட்டாகச் சிலவற்றை இங்கே குறிக்கின்றேன்:

'இலங்குசுடர் மண்டிலம் புலந்தலை பெயர்ந்து
பல்கதிர் மழுகிய கல்சே ரமையத்
தலைந்தலை மூதே றுண்குரல் விளிப்ப
மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய
முனையுழை இருந்த அங்குடிச் சீறூர்க்
கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்
மிருபதம் நிறைந்த தொகுகூட் டொருசிறைக்
குவியடி வெருகின் பைங்க ணேற்றை
ஊனசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்
தளிர்புரை கொடிற்றிற் செறிமயி ரெருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன
நெற்றிச் சேவ லற்றம் பார்க்கும்
புல்லென் மாலையும் இனிதுமன் றம்ம.' (அகம். 367)

இவ்வடிகளில், மாலைக்கால வருணனையும், வெருகு, சேவல் இவற்றின் இயல்பும் சுருக்கமாகவும் அழகாகவும் கூறப்பட்டிருத்தல் அறிக.

'இரங்கா மூன்ன அரும்புமுதி ரீங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையண லேப்பத்

தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅம் மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய வோங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்.' (அகம். 125)

இப் பகுதியில், பனிக்கால வருணனையோடு, ஈங்கையரும்பு முதலியவற்றைக் குறித்தும் கூறியிருப்பது, இவருடைய இயற்கைப் பொருளறிவை நன்கு புலப்படுத்தும்.

பொருளணிகள்.

பண்டைப்புலவர் செய்யுட்களில், பெரும்பாலும் தன்மையணி, உவமையணி, உருவகவணி, தற்குறிப்பணி முதலிய சில அணிகளே காண்கின்றன ; அவற்றுள்ளும் உவமையணி யொன்றே பெருவரவிற்று. 'உவமையணி யொன்றே பல அணிகளாக அமைகின்றது' என்று வடமொழி வாணரும் கூறுவர்[1]. பரணர்செய்யுட்களுள் உவமைகள் பல்கி வந்துள்ள பாட்டுக்களை முதற்கண் எழுதுகின்றேன்:

'வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப்போன்றன
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ இலக்கம்போன்றன
மாவே, எறிபதத்தான் இடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்
எருத்துவவ்விய புலிபோன்றன
களிறே, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, அலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிந்துதோன்றி

---

1. சித்ர மீமாம்ஸா என்னும் அலங்கார ஶாஸ்திரத்தில்,

'உபமைகா ஶைலூஷீ
ஸம்ப்ராப்தா சித்ரபூமிகாபேதாந்
ரஞ்ஜயதி காவ்யரங்கே
ந்ருத்யந்தீ தத்விதாம் சேத:'

என்று கூறப்பட்டுள்ள சுலோகத்தை யறிக.

மாக்கடல் நிவந்தெழுதரும்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ
அனையை யாகன் மாறே
தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே.' (புறம். 4)

இப்பாட்டில், குருதியால் மறைப்பட்ட வாள் முதலியவற்றிற்குக் கூறப்பட்டுள்ள உவமைகளின் சிறப்பு ஆராய்ந்து அறிந்து இன்புறற்பாலது.

இனி,

'வயிரத் தன்ன வையேந்து மருப்பின்
வெதிர்வே ரன்ன பரூஉமயிர்ப் பன்றி
பறைக்கண் அன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன அகலிலைச் சேம்பின்
பிண்ட மன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கன்மிசை யூழிழி
பியாறுசேர்ந் தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்
பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்
தலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வர' (அகம். 178)

என்னும் பகுதியில், பன்றியின் மருப்பு முதலியவற்றிற்கும்,

'அறலென அவிர்வருங் கூந்தல் மலரென
வாண்முகத் தலமரும் மாயிதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண் டிலங்கு நலங்கெழு துவர்வாய்க்
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
காலுறு தளிரின் நடுங்கி யானது
நோயசா வீட முயங்கினள்.' (அகம். 162)

என்னும் பகுதியில், தலைவியின் கூந்தல் முதலியவற்றிற்கும், சிறப்புடைய உவமைகள் வந்துள்ளன காண்க.

இனி, உருவகங்கள் பல இயைந்து வந்துள்ள பாட்டு ஒன்றனை ஈண்டுத் தருகின்றேன்:

'இரும்புமுகஞ் செறித்த ஏந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவர் எறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் பமைந்த
குருதிப் பலிய முரசுமுழக் காக

அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
யீரச் செறுவயிற் றேரே ருக
விடியல் புக்கு நெடிய நீட்டி
நின், செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளம் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள.' (புறம். 369)

இப்பாட்டில், யானை முதலியவற்றை முகில் முதலியனவாக உருவகம் செய்துள்ளமை, மிக்க இன்பம் பயப்பதாத லறிக.

இனி, தற்குறிப்பணி வந்துள்ள செய்யுட்பகுதியைக் குறிக்கின்றேன்:

'கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்ட னத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்' (அகம். 222)

என்னும் அடிகளில், காவிரியாற்றில், கழார்த்துறையின்கண் ஆடிக்கொண்டிருந்த அத்தி என்பவன், ஆற்றில் இழுக்கி வீழ்ந்து வெள்ளத்தால் ஈர்த்துக் கொண்டுபோகப்பட்டான் என்னும் செய்தியைக்கவிநயம்பட, 'காவிரியாறு அவனழகைக் கண்டு விரும்பி இழுத்துக்கொண்டது' எனப் புனைந்து கூறியுள்ளது அறிக. இவ்வாறே,

'கழாஅர் முன்றுறைக்
கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை
ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
கருங்கச் சியாத்த காண்பி னவ்வயிற்
றிரும்பொலம் பாண்டின் மணியொடு தெளிர்ப்பப்
புனல்நயந் தாடும் அத்தி யணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு' (அகம். 376)

என்று, மற்றொரு பாட்டினும் கூறப்பட்டுளது.

இனி, பரணர் பாட்டுக்களில் ஆங்காங்குக் காணும் உவமைகளை ஒருசேர ஈண்டு எழுதுகின்றேன்;

## நற்றிணை.

1. அழகு குறைந்த மாமைநிறத்திற்கு, நாருரித்த ஆம்பற் றண்டின் நிறம்—6.

2. ஆம்பல்முகைக்கு, கார்காலத்துக் கொக்கின் அலகு—100.

3. ஆம்பல்முகைக்கு, கொக்கு உடல் கூம்பியிருக்கும் நிலை—280.

4. கண்ணிற்கு, குவளைப்பூ—6; அகம். 62.

5. தலைவனது நடுக்கத்திற்கு, முழவினதுகண் அதிர்தல்—100.

6. தலைவனது மனத்தினின்று நீங்காத தலைவிக்கு, கண்டோர் மனத்தின் நீங்காததாய கொல்லிப்பாவை—201.

7. மிக்க மழை பெய்தொழிந்த வெண்மேகத்திற்கு, எஃகிய (வில்லாலெறிந்த) பஞ்சு—247.

8. எருமைக்கு, தண்டுசேர் வீரர்—260.

9. கூந்தலுக்கு, மயிலின் கலாவம்—265; அகம். 152.

10. ஆம்பல் தாமரையின்முன் காற்றால் வளைதற்கு, சினங் கொண்ட கோமகட்குமுன் ஆயம் கைதொழுதல்—300.

11. தலைவன் அட்டிலோலை தொட்டு நிற்றற்கு, பெருங்களிறு பொச்சை சூழ்ந்து நிற்றல்—300.

12. தாமரைப்பூ ஒளி செய்தற்கு, விளக்கு ஒளி செய்தல்-310.

13. தாமரையிலைக்கு, களிற்றுச் செவி—310 ; அகம். 186.

14. உட்பொருள் இல்லாத சொற்கு, உள்ளொன்றுமில்லாத தண்ணுமை—310.

15. களவொழுக்கத்திற் சென்று வருந்தும் தலைவன் நெஞ்சிற்கு, பார்ப்புக்கு இரை தேடிச் செல்லும் பறவை (அன்னம்)—356.

## குறுந்தொகை.

1. ஊரார் கூறும் கௌவையால் தலைவி மனங்குழைதற்கு, களிறு மிதித்தலால் அத்திக்கனி குழைதல்—24.

2. தலைவி தலைவனைக் காண்டலினாலேயே இன்புறுதற்கு, முடவன் மலையின்மேலுள்ள தேனைச் சுட்டி நக்கி இன்புறுதல்—60.

3. தலைவன் அரியளாகிய தலைவியை விரும்பினமைக்கு, வறியவன் இன்பம் விரும்பினமை—120.

4. தலைவன் சேயிடத்தாளாய் அரியளாகிய தலைவியை விரும்புதற்கு, கீழ்க்கடற்கரையி லிருக்கும் முதியநாரை மேற்கடலிலிருக்கும் அயிரைமீனை விரும்புதல்—128.

5. தலைவன் தலைவியின் அழகினைக் கண்டு உள்ளம் வெய்துற்ற நிலைமைக்கு, உப்புவண்டி மழையினால் அவிதல்—165.

6. பசலை நீங்குதற்கும் பாத்தற்கும், நீருண்ணும் துறையி லுள்ள பாசி நீங்கிப் பாத்தல்—399.

## அகநானூறு.

1. மகளிர் பற்களுக்கு, நீரில் வளரும் பைஞ்சாய்க்கோரை யின் முருந்து (வேரின் மேற்றண்டு)—62.

2. சிறிய பற்களுக்கு, நாணற்கிழங்கின் முளை—212.

3. தலைவிமுயங்கிய முயக்கத்திற்கு, காவிரிநீத்தத்தில் மண்ணு தல் (குளித்தல்)—62.

4. அழகுமிக்க தலைவிக்கு, கொல்லிப்பாவை—62.

5. தலைவி முதலாயினோர் ஓவாது கழறுதற்கு, (அகுதையின்) அவைபுகு பொருநர் பறையறைதல்—76.

6. தாமரைப்பூவிற்கு, அகையும் எரி—116.

7. புன்கின்பூவிற்கு, பொரி—116.

8. ஈங்கையரும்பிற்கு, இரங்காழ் (இரவமரத்தின் வித்து)—125.

9. ஈங்கைப்பூவின் நிறத்திற்கு, ஆலி (ஆலாங்கட்டி)—125.

10. குவளைப்பூவில் ஈங்கைப்பூத் தாவிய தோற்றத்திற்கு, ஒதி யின் அணல் (மிடறு)—125.

11. பெய்து வறிதாகிய கொண்மூவிற்கு, கடாம் மாறிய யானை—125.

12. பசலைக்கு, பீர மலர் (பீர்க்கின்பூ)—135.

13. இருப்பைப்பூவிற்கு, கோடு (யானை மருப்பு) கடைந்த கழங்கு—135.

14. நாவின் செந்நிறத்திற்கு, இலவமலர்—142.

15. வெள்ளிவளைக்கு, நீர்த்திரள்—142.

16. கூந்தலுக்கு, அறல்—142.

17. கொங்கு(பூந்தாது) சோர்தற்கு, எறியும் பொன் (பொறி) சிதறுதல்—142.

18. இன்சொல்லிற்கு, யாழ்நரம்பின் ஓசை—142, 212.

19. யானையின் கைக்கு, பனையின் திரள்—148.

20. இடும்பை பெரிதுற்ற தலைவியின் நிலைமைக்கு, பகலில் வழங்காத கூகையின் நிலைமை—148.

21. பிண்டன் (தலைவன்), நன்னன் முதலியோருக்கு மிக்க பகை செய்ததற்கு, இருக்கள் கலத்தைத் தாக்குதல்—152.

22. தோளுக்கு, அமையின் (மூங்கிலின்) கண்களின் இடைப் பகுதி—152.

23. விசும்பிற்கு, கடல்—162.

24. மின்னற்கு, அழற்கொடி—162.

25. மலையின்வீழ் அருவிக்கு, யானைமேல் எடுத்த கொடி—162.

26. வண்டு வழிப்படாத் தண்மலர் வேய்ந்த தலைவிக்கு, இள மழை சூழ்ந்த மயில்—198.

27. நாணுவரை நில்லாக் காமத்திற்கு, உப்புச்சிறை நில்லா வெள்ளம்—208.

28. கலங்கிய உள்ளத்திற்கு, களிற்றினம் படிந்த நீர்—212.

29. கீழே வீழும் மாம்பூவிற்கு, மழைத்துளி—236.

30. உள்ளம் மாய்தற்கு, கடுங்காற் றெடுக்கும் குன்றத்து இருளை மாய்தல்—258.

31. தலைவன் இளமகளிரொடு புனலாடினதற்கு, களிறு (பிடிக ளொடு) புனலாடுதல்—266.

32. மீனுண்ணச்செல்லும் நாரை மெல்ல மெல்ல அடிவைத் தற்கு, (களவுசெய்யப் போகும்) கள்ளன் பையப்பைய அடி யெடுத்து வைத்தல்—276.

33. பரத்தை தன் அழகினால் தலைவனைத் தன்வயமாக்குதற்கு, பிடியானையால் களிற்றைப் பிடித்தல்—276.

34. அழகு கெடுவதாதற்கு, இரந்தோர்க்கு ஈயாதவனது பொருள் கெடுதல்—276.

35. அல்லகுறிப் பட்ட தலைவன் நடுங்குதற்கு, இறுவரை வீழுநர் நடுங்குதல்—322.

36. தலைவன் தனித்து வைகுதற்கு, பாம்பினை எறிந்த கோலைத் தனித்துவைத்திருத்தல்—322.

37. பெறுதற் கரியளாகிய தலைவிக்கு, ஏறுதற் கரிய பொதியிற் சிகரம்—322.

38. கண்பார்வை தப்பாமற் பாய்தற்கு, பழையன் ஒக்கிய வேல் தப்பாமற் பாய்தல்—326.

39. யாமைக்கு, கிணை—356.

40. பேசாதிருந்த நாவிற்கு, பயினொடு சேர்த்திய கல்—356.

41. கோழிச்சேவலின் கொற்றிக்கு, கவிர்ப்பூ—367.

42. அல்லகுறியில் பன்முறை சென்றுவரும் தலைவன் நெஞ்சிற்கு, ஊசற் கயிறு—372.

43. வருந்திய நெஞ்சு வீங்கி நெகிழ்தற்கு, அடிக்கும் பெருந் துடியின் வாரின் நிலைமை—372.

44. தலைவி யிலனாய் வருந்திய தலைவனுக்கு, மணி யிழந்த பாம்பு—372.

பதிற்றுப்பத்து.

1. யானை வேங்கைச்சினையைச் சென்னியில் மிலைந்து செல்லுதற்கு, மறவர் தண்டுடையராய்ப் போருக்குச் செல்லுதல்—41.

2. வாளேற்றைத் தைக்கையில் குருதியிடை எழும் ஊசிக்கு, கயமூழ்கி எழும் சிச்சிலிக்குருவி—42.

3. கூந்தலுக்கு, கவரி—43.

4. குட்டுவன் பரிசிலாக நன்கலம் சிதறுதற்கு, வானம் தளி சொரிதல்—43.

5. அம்புறையுள் ளிருக்கும் அம்பிற்கு, புற்றில் அடங்கிய அரவு—45.

6. தோளுக்கு, எழு (கணையமரம்)—45.

7. படைகளுக்குத் தீங்கு நேராதவாறு முன்னின்று பொரும் அரசனுக்கு, தோல் (கிடுகு)—45.

8. மாடத்தில் அவிரும் கொடிக்கு, மலையின் அருவி—47.

9. போர்க்களத்திற் பாயும் குருதிக்கு, மழைநாட் புனல்—49.

புறநானூறு.

1. கொடை மடத்திற்கு, மாரி—142.

2. விரலிற்கு, காந்தள்முகை—144.

3. சிறிய யாழின் கரிய கோட்டுக்கு, களங்கனி—145.

4. இளமுலைக்கு, கோங்கின்முகை—336.

5. போரினால் கவினிழக்கும் ஊருக்கு, களிற்றால் கலங்கி அழகு கெட்ட குளம்—341.

6. சுணங்கிற்கு, வேங்கைப்பூ—352.

7. பெண்ணின் மடநோக்கிற்கு, மான்பிணை நோக்கு—354.

8. தடாரிப்பறைக்கு, தேய்வை வெண்காழ் ?—369.

9. ஓடையானைக்கு, பொற்கோட் டிமயம்—369.

மேற்காட்டிய உவமைகளுட் பல, மிக்க சிறப்பினவாதல் அறிக.

இனி, பரணர் செய்யுட்களில் காணும் பிற உவமைகளை, இங்கே எடுத்தெழுதுகின்றேன்:

1. ஒருநாள், காதலி யுழைய ளாகவும், குணக்குத்தோன்று வெள்ளியின் எமக்குமார் வருமே—நற். 356.

2. எவ்வி யிழந்த வறுமையர் பாணர், பூவில் வறுந்தலை போலப் புல்லென்று—குறு. 19.

3. நன்ன, னறுமா கொன்று நாட்டிற் போக்கிய, ஒன்று மொழிக் கோசர் போல, வன்கட் சூழ்ச்சி—குறு. 73.

4. பெண்கொலை புரிந்த நன்னன் போல, வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை—குறு. 292.

5. அகுதை தந்த, மடப்பிடிப் பரிசில் மானப், பிறிதொன்று குறித்த தவ னெடும்புற நிலை—குறு. 298.

6. அத்தி என்பவனை ஈர்த்த அந்தண் காவிரி போல, தலைவனைக் கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே—அக. 76.

7. உறந்தைக், கன்முதிர் புறங்காட் டன்ன, பன்முட் டின்றால் தோழி நங் களவே—அக. 122.

8. கரிகாலன் முன் நிற்கலாற்றாராய் ஓடிய பீடின் மன்னர் போல, ஓடுவை மன்னால் வாடைநீ எமக்கே—அக. 125.

9. வேளிரால் அழிவுற்ற காமூர் போல, விளிந்தன்று மாது அவர்த் தெளிந்த என் நெஞ்சே—அக. 135.

10. பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற, குறையோர் கொள்கலம் போல நன்றும், உவ—அக. 142.

11. ஞிமிலி, எயினனைக் கொன்ற ஞாட்பிற், பலர் அறி வுறுதல் அஞ்சி, தலைவி இரவில் வந்தது—அக. 142.

12. அன்னி மிஞிலியி னியலும், நின்னலத் தகுவி—அக. 196.

13. வேண்மகளிர் பூசலை அகுதை களைதந் தாங்கு, தலைவி நல்கினள்—அக. 208.

14. ஆதிமந்தி போல, ஏதம் சொல்லிப் பேதுபெரி துறல்—அக. 236.

15. கோச, ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய அன்னி மிஞிலிபோல, ஆறு வுவகையெ மாயினேம். } அக. 262.

16. பசும்பூட்பாண்டியன் கொடுத்த கள்ளுடைப் பெருஞ் சோற் றெல்லிமி ழன்ன கவ்வை—அக. 266.

17. பாழி யாங்கண், வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த அருங்கல வெறுக்கையின் அரியோள்—அக. 372.

18. அத்தி என்பவன் புனலில் ஆடினதற்கு, கல்லா யானை புனலாட்டுக் கற்றது—376.

19. நாணினென் பெரும யானே பாணன், மல்லடு மார்பின் வலியுற வருந்தி, எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன், இறைத் திரண் முழவுத்தோள் கையகத் தொழிந்த, திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க், கணையன் நாணி யாங்கு—அக. 386.

20. உரல்போல் பெருங்கால்...மதமா—பதிற். 43.

இனி,

1. இருப்பை யன்ன என் ஒலிபல் கூந்தல்—நற். 260.
2. பாரத்தன்ன ஆரம்—நற். 265.
3. குன்றா ரன்ன என் நன்மனை—நற். 280.
4. இருப்பை யன்ன என் தொல்கவின்—நற். 350.
5. மத்தி கழாஅ ரன்ன இளமை—அக. 6.
6. போஒ ரன்ன என் செறிவளை—அக. 186.
7. தலைவி, பேகன் மாமலை (போல) நாறி வந்தமை.—அக. 262.

இவை, உவமையுருபுகள் உடையனவாயினும், அணியின்பாற் படாமையின், இவற்றை இலக்கணையாகக்கொண்டு, அழகுடைய கூந்தல், அழகுடைய ஆரம் என்பனபோலப் பொருள் கூறுதல் தகுதி.

இனி,

1. நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்—நற். 300.

2. பாவை, இயல்நற் றன்ன வொ துக்கினள் வந்து—அக. 142.

என்னும் இவை, தற்குறிப்பணியின்பாற்படும், உவமானம் உவமை யணிக்குத் தக்கவாறு அமைந்திலாமையின்.

'முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்' (அகம். 162.)

என்பது, உவமையணியும் மயக்கவணியும் கலந்து வந்த **கலவை யணி** (ஸங்கரம்).

'கைவ லிளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி அணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்' (பதிற். 41.)

என்னும் இப்பகுதியிலும் உவமையணியோடு மயக்கவணி கலந்து வந்துள்ளதனுல் **கலவையணி** (ஸங்கரம்) ஆகும்.

பண்டைத் தமிழ்ப்புலவர் செய்யுட்களில் உள்ளுறையுவமம், இறைச்சி ஆகிய உட்பொருள்கள் அமைந்து விளங்குதலைத் தமிழறிந்தவர் அனைவரும் அறிவர்.

உள்ளுறையுவமம்.

அச்செய்யுட்களில் நாடு, நகரம், காடு, மலை முதலியவற்றின் வருணனைகளாகக் காணப்படும் பகுதிகளுக்கெல்லாம் உள்ளுறைபொருள் உண்டாயினும், அவற்றுட் சிலவற்றிற்குத் தெளிவான உட்பொருள் விளங்குதல் அரிதா யுளது. ஆயினும், அவற்றிற்கு உட்பொருளே உயிராய் விளங்குவது என்பதை நாம் உள்ளத்தில் கொள்ளுதல் வேண்டும். தொல்காப்பிய உவமவியல் 25-ஆம் சூத்திரத்தின் உரையில், பேராசிரியர் வினையுவமப்போலிக்கு,

'கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வ னீன்றவெம் முயங்கல்
அதுவே தெய்ய நின் மார்புசிதைப் பதுவே' (ஐங்குறு. 65.)

என்னும் பாட்டை எழுதி, அதிலுள்ள உள்ளுறையுவமங்களை எடுத்துக்கூறி, முடிவில், 'இங்ஙனம் கூறவே இதனை இப்பொருண் மைத்து என்பதெல்லாம் உணருமாறு என்னை யெனின், முன்னர்த்,

'துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே'
(உவம. 23.)

எனல் வேண்டியது இதன் அருமை நோக்கி யன்றே என்பது. அல்லாக்கால்,

'கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை
சுரும்புபசி களையும் பெரும்புன லூர'

என்பது, பயமில வென்பது கூறலாம் என்பது' என்று எழுதி யிருப்பதை அறிக. இவ்வாறு உள்ளுறையுவமம் அமைத்துக் கூறுதலின் காரணம் என்னை எனின், கூறுவோர், சில செய்திகளில் தமது கருத்தினை வெளிப்படையாகக் கூறுதற்குக் கூசுதலாம் என்க. இதனால், தமிழ்மக்களின் பெருந்தகைமையும் அறியப்படுவதாகும். இங்கே, பரணர் செய்யுட்களிலிருந்து சில உள்ளுறைகளை எடுத்துக் காட்டாக எழுதுகின்றேன்: முதலில், தலைவியின் கூற்றில் வந்துள்ள உள்ளுறையை நோக்குதும்.

'சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்

முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேன் மத்தி கழாஅ ரன்ன' (அகம். 6.)

என்னுமிடத்து, 'நீர்நாய், வாளைக்குக் காவலாகிய வள்ளையினது நிலையை நெகிழ்த்து, இழிந்ததாகிய வாளையை நுகர்ந்து, பிரம்பாகிய முதிய தூற்றிலே தங்கினாற்போல, நீரும், பரத்தையர்க்குக் காவலாகிய தாய் முதலாயினரது நிலைமையை நெகிழ்த்துக், குலமகளிரல்லாத விலைமகளிரை நுகர்ந்து, முன்பு நுமக்குண்டாகிய எங்கள் பழமையைப் பற்ற ஒரு பயன் கருதாது தங்குதல்மாத்திரத்திற்கு எம்மில்லில் வந்தீர் என்றுளாம்' (அகம். 6-உரை.) என்று உரையாசிரியர் எழுதியிருத்தல் அறிக.

'கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை
பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்
தண்டுசேர் மள்ளரி னியலி யயலது
குன்றுசேர் வெண்மணற் றுஞ்சும் ஊர
வெய்யைபோல முயங்குதி' (நற். 260.)

என்னும் தலைவிகூற்றில், 'கழுநீர்ப்பூவினை மேய்ந்த எருமை, தாமரைப்பூவினை வெறுத்துவிட்டு, தண்டுசேர்ந்த வீரர்களைப் போலச் சென்று, பக்கத்திலுள்ள மணற்குன்றில் தங்கும் ஊரனே' என்றது, 'நீர், இழிவினையுடையளாகிய காதற்பரத்தையின் இன்பத்தைத் துய்த்தலான் என் நலனையும் வெறுத்து, பீடுடையார்போற் சென்று, அக் காதற்பரத்தையின் இல்லிடத்தும் தங்காமல், சேரிப்பரத்தையினிடத்தில் தங்கியிருந்தீர்' என்று தலைவி கூறியவாறுதல் அறிந்து கொள்க.

இனி, தோழி கூற்றாக உள்ள பாட்டுக்களில் வந்துள்ள தொன்றனைக் குறிக்கின்றேன் :

'சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்பாய் முரசி னிரங்குந் துறைவன்.' (குறுந். 328.)

இவ்வடிகளில், 'ஞாழலின் வேரின்கண் உள்ள அளையை, ஞெண்டு தனக்கு வீடாகக்கொண்டிருக்க, அது கெடும்படி அலை மோதி ஒலிக்கின்றது' என்றது, 'தலைவன் தலையளியையே தலைவி தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டிருக்க, அது கெடும்படி ஊரார் அலர் தூற்றுகின்றனர்' என்பதாம்.

இனி, சேரிப் பரத்தையின் கூற்றுள் ஒன்றனை எழுதி, இப் பகுதியை நிறுத்துகின்றேன்.

'நீளிரும் பொய்கை இரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரை
தன், அடியறி வுறுத லஞ்சிப் பையப்பயக்
கடியிலன் புகூஉங் கள்வன் போலச்
சாஅ யொதுங்குந் துறைகே ழூரன்.' (அகம். 276.)

இவ்வடிகளில், 'இரைவேட் டெழுந்த வாளைமீனை உண்ண வேட் டெழுந்த நாரை, தனது ஓசையை அவ் வாளைமீன் அறிதற்கு அஞ்சிப் பையப்பையச் செல்லும்' என்றது, வேறு பரத்தையர்பால் செல்வோனாகிய தலைவனைத் தன்வயமாக்குதற்கு விரும்பிய பரத்தை, தனது எண்ணத்தை அவன் அறிதற்கு அஞ்சி, மெல்ல அடங்கி யிருந்து முயன்ற தன்மையைத் தெரிவிக்கும். முன்னர்,

'ஆவ தாக இனிநா ணுண்டோ
வருகதில் லம்ம எஞ் சேரி சேர
அரிவே யுண்கண் அவன் பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி *
* * * *
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின்'

என வரும் அடிகளை நோக்குக. 'கடியிலன் புகூஉங் கள்வன் போல' என்ற ஏனையுவமம், உள்ளுறையுவமத்தைச் சிறப்பித்து நின்ற தறிக. இவ்வாறே உள்ளுறையுவமங்களை எடுத்தெழுதின் விரியுமென்றஞ்சி, இவ்வளவில் விடுக்கின்றேன். பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

மெய்ப்பாடு.

நல்லிசைப்புலவர் செய்யுட்களில் மெய்ப்பாடு ஓர் உறுப்பா யமைந்து இன்பந்தருவ தாகும். மெய்ப்பாடு செய்யுட்களின் உறுப்புக்களுள் ஒன்று என்பது,

'பயனே மெய்ப்பா டெச்ச வகையெனாஅ' (தொல். செய். 1.)

என்பதனால் அறியப்படும். 'மெய்ப்பாடு என்பது பொருட்பாடு. அஃதாவது, உலகத்தார் உள்ளநிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோ ராற்றான் வெளிப்படுதல்' என்று பேராசிரியர் எழுதியிருப்பதனால், மெய்ப்பாடு என்பது இன்னது என விளங்கும்.

மெய்ப்பாடு எட்டு என்பது, [1]'நகையே யழுகை' (மெய்ப். 3.) என்னும் சூத்திரத்தான் அறியப்படும். இவற்றை வடநூலார் ரஸம் என்பர். ரஸம் ஒன்பது என்றல் பெருவழக்கு. அவற்றுள், சாந்தரஸம் பண்ணைத்தோன்றுவது அன்மையின், அதனை ஒழித்து, ஏனை எட்டனையுமே ஆசிரியர் தொல்காப்பியனர் கூறினர். 'மற்றிவ் வெட்டனோடுஞ் சமநிலை கூட்டி ஒன்ப தென்னுமோ நாடக நூலுட்போல எனின், அதற்கு ஒரு விகாரமின்மையின் ஈண்டுக் கூறிய திலன் என்பது. அதற்கு விகாரமுண்டு எனின், முன்னை எட்டனுள்ளும் சார்த்திக்கொள்ளப்படும். அஃதல்லதூஉம், அஃது உலகியல் நீங்கினர் பெற்றியாகலின் ஈண்டு உலக வழக்கினுட் சொல்லியதிலன் என்பது' என்று (மெய்ப். சூ. 3 - உரை.) பேராசிரியர் எழுதியிருப்பது அறியத்தக்கது.

ஆசிரியர்தொல்காப்பியனர் மெய்ப்பாடுகளைக் கூறுமிடத்து, ஒவ்வொரு மெய்ப்பாடும் நந்நான்கு பொருளிற் பிறக்கும் என்றும், அவை இன்னவை இன்னவை என்றும் கூறினராயினும், அவர், மெய்ப்பாட்டின் (ரஸத்தின்) இயல்பினை விரித்துக்கூறின ரல்லர்; பின்னும், 'உடைமை' முதலாக முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளும் உள்ளன எனக் கூறினவர், அவ்வெட்டனோடு இவற்றிற்குள்ள வேறுபாடும் விளங்க வுரைத்திலர். இவற்றால், மெய்ப்பாட்டியலை ஆசிரியர் சுருக்கமாகவே கூறியுள்ளார் என்பது புலனகும். வடமொழியில் இவற்றை விரித்துக்கூறும் நூல்கள் பல. அவற்றைப் பின்பற்றிக் கன்னடம் முதலிய திராவிட மொழிகளிலும் சிற்சில நூல்கள் தோன்றியுள்ளன; தமிழிலோ தொல்காப்பியத்தோடே நின்றது. ஆதலின், மெய்ப்பாட்டியல்பினை நன்கு அறிந்து கொள்ளுதல் அரிதாகும். அது கருதி மெய்ப்பாட்டியல்பினை ஈண்டுச் சிறிது விரித்துக் கூறுகின்றேன்.

ஆசிரியர்தொல்காப்பியனர், 'நகை' முதலாக எட்டு என்று கூறிய மெய்ப்பாடுகளை ரஸம் எனவும், 'உடைமை' முதலாக முப்பத்திரண்டு என்று கூறிய மெய்ப்பாடுகளை [2]வ்யபிசாரிபாவம் எனவும் வடநூலார் வழங்குவர். தொல்காப்பியர் கூறிய இம்

---

1. உவகையை ஒரு மெய்ப்பாடாக ஆசிரியர் கூறினர்; புணர்வை, அது பிறக்கும் பொருள்களுள் ஒன்ருகக் கொண்டார். வடநூலார் உவகைக்கு ஈடாகச் சிருங்காரம் என்பதைக் கூறுவர்; அதுவே ரஸங்கள் எல்லாவற்றினும் சிறந்தது என்பர்.

2. வ்யபிசாரிபாவம் முப்பத்துமூன்று என வடநூல்கள் கூறும்; இவற்றை, ஸஞ்சாரிபாவம் என்றலும் உண்டு.

முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளுள் சில மெய்ப்பாடுகளுக்கு ஈடானவை வடநூல்களில் இல்லை; அவற்றிற்கு ஈடாக வேறு பாவங்கள் சொல்லப்பட்டுள்ளன. ரஸங்களுக்கும் பாவங்களுக்கும் வேறுபாடு உண்டு. 'ஆங்கவை யொருபா லாக' (மெய்ப். 12) என்னும் சூத்திரவுரையில், பேராசிரியர் ஆங்காங்குக் கூறுமாற்றான் இது சிறிது அறியப்படும்.

ரஸமாவது, நாடகங்களைக் காணும்போழ்தும், நல்ல செய்யுட்களைப் படிக்கும்போழ்தும் புலமையோன், தன் உள்ளத்தில் துய்க்கும் இன்பமாம். உலகியலான புணர்ச்சி முதலானவை ரஸமாதல் இல்லை. ரஸம்-விபாவம், அநுபாவம், வ்யபிசாரிபாவம் ஆகியவற்றால் தோன்றும் ஸ்தாயிபாவமேயாகும். ஸஜாதீய விஜாதீயங்க ளாகிய மற்றைய பாவங்களால் அழிவுறாமல், ரஸமாய்ச் சமையுமளவும் நீங்காது நிற்கும் பாவம் ஸ்தாயிபாவம் எனப்படும். சிருங்காரத்திற்குக் காதலும், கருணைக்குச் சோகமும் போல்வன ஸ்தாயிபாவமாகும். ஸ்தாயிபாவம் போல நிலைநிற்காது, நீங்குதலும் வருதலும் ஆகிய உளவேறுபாடு வ்யபிசாரிபாவம் எனப்படும். அவையே, தொல்காப்பியர் கூறிய 'உடைமை' முதலிய முப்பத்திரண்டும் என அறிக. இனி, இவற்றைக் குறித்து விளக்கப் புகின், அது மிகவும் விரியுமாகலானும், 'மற்றொன்று விரித்தல்' என்னும் குற்றம் தங்குமாகலானும் இதனை இவ்வளவில் நிறுத்தி, பரணர் செய்யுட்களிற் காணும் மெய்ப்பாடுகளுட் சிலவற்றைக் குறிக்கின்றேன். ஈங்குக் குறிக்கும் மெய்ப்பாடுகளின் வேறுபாடு அறிந்துகொள்ளுதற் பொருட்டே இத்துணையும் எழுதப்பட்டது என அறிக.

அகநானூற்றில்,

'காதலி * *
பலரறி வுறுத லஞ்சிப் பைப்பய
நீர்த்திரள் கடுக்கும் மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறையற லன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
கடன்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்
துருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன வொதுக்கினள் வந்து
பெயலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
இயலெறி பொன்னிற் கொங்குசோர் புறைப்பத்
தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே' (142)

என்னும் பாட்டில், 'காதலி தீவிய மொழிந்து முயங்கினள்' என வருதலின், சிருங்காரரஸம் தோன்றும். இதற்கு,

காதலி— ஆலம்பன விபாவம்

வளை, கூந்தல், யாமம்,<br>பாவைநடை முதலியன } உத்திபனவிபாவம்

அனுபாவம், வ்யபிசாரிபாவம் இவை கூறப்படாவிடினும் அவற்றை நாம் ஊகித்துக்கொள்ளுதல் கூடும்.

ரோமாஞ்சம்—மயிர்க்குச்செறிதல்<br>ஸ்தம்பம்—அசைவின்மை<br>ஸ்வேதம்—வியர்வை<br>கம்பம்—நடுக்கம்<br>முதலாயின } —சாத்விகபாவம் (இஃது, அனுபாவத்துள் ஒரு வகை)

கடைக்கணோக்குதல் முதலியன—அனுபாவம்

லஜ்ஜா—நாணுதல்<br>சாபல்யம்—சூழ்ச்சி<br>ஹர்ஷம்—இன்புறல்<br>க்லானி—தளர்ச்சி<br>ஜாட்யம்—கையாறு<br>முதலாயின } வ்யபிசாரிபாவங்கள்

ரதி—காதல் ஸ்தாயிபாவம்.

இப்பாட்டில், விபாவம், அனுபாவம், வ்யபிசாரிபாவம் இவற்றால், சிருங்காரரஸம் நிறைவுறுமளவும் காதல் நீங்காது நிலைத்திருத்தலின், ஸ்தாயிபாவம் உளதாயிற்று. ஆதலின், இப்பாட்டில் சிருங்கார ரஸம் உளது. பேராசிரியர்,

'தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே

என்பது புணர்ச்சி பற்றிய உவகை' என்றது காண்க.

இனி, பேராசிரியர்,

'மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி
எம், முதுமை எள்ளல் அஃ தமைகுந் தில்ல (அகம். 6.)

என்பதும் அது' (அஃதாவது, தன்கட் டோன்றிய மூப்புப் பொருளாகப் பிறந்த இளிவரல்) என்றார். வடநூலார் கொள்கையின்படி, இது, வ்யபிசாரிபாவத்துட்படுமே யன்றி, ரஸமாதல் இன்று. இது, [1]நிர்வேதம் என்னும் வ்யபிசாரிபாவத்து ளடங்குவதாகும்.

1. நிர்வேதமாவது, 'துக்கம், ஈர்ஷ்யா, ஆத்மஞானம் முதலியவற்றால் உண்டாவதும், மனோராஜ்யம், நெட்டுயிர்ப்பு முதலிய அனுபாவமுடையதும் ஆகிய நிஷ்ப்ரயோஜன புத்தி' (ரஸஸ்வரூப நிரூபணம்) என்பது அறிக.

இனி,

'குணகடற் றிரையது பறைதபு நாரை
* * * *
சேய ளரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே (குறுந். 128.)

என்பது நெஞ்சினை வேறு நிறீஇக் கூறினமையின், பிறன்கட் டோன்றிய பிணி எனப்படும். இதனுள், 'சேய ளரியோட் படர்தி' என்றமையின், இது பிறன்கட் டோன்றிய வருத்தமும் வந்ததா யிற்று. வருத்தம் எனினும் முயற்சி எனினும் ஒக்கும்' என்றார் பேராசிரியர். இதுவும் வடநூலார் கொள்கையின்படி ரஸமாதல் இல்லை; வ்யபிசாரிபாவத்தினுட்படும். ஈண்டு, நிர்வேதமே தோன் றுவதாம்.

இன்னும் அவர்,

'அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
(அகம். 236.)

எனவும்......வருவனவும் அவை' (அஃதாவது, [1]புலவிப்பொரு ளாகப் பிறந்த அச்சம்) என்றார். வடநூலார் கொள்கைப்படி ஈண்டும் அச்சமாகிய ரஸம் இல்லை.

இனி, நற்றிணையில்,

'உள்ளுதொறும் நகுவேன் தோழி*
* * * *
நன்ன ராளன் நடுங்களுர் நிலையே' (100)

என்னும் பாட்டின் உரையின் கீழ், 'மெய்ப்பாடு—எள்ளல் பொரு ளாகப் பிறன்கட் டோன்றிய இளிவரல்' என்று உரையாளர் நாராயணசாமி ஐயர் எழுதியுள்ளார். ஈண்டு, இளிவரல் என்று எழுதியிருப்பது தவறாக நேர்ந்ததாகும். 'எள்ளல் பொருளாகத் தோன்றிய நகை' என்றிருத்தல் வேண்டும். என்னெனின்,

'எள்ளல் இளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான் கென்ப' (மெய்ப். 4.)

என்பது விதியாகலின், எள்ளல் பொருளாகத் தோன்றுதல் நகையே யாம் என்க.

---

1. புலவிப்பொருளாக அச்சம் பிறக்கும் என்று ஆசிரியர் தொல்காப்பி யனார் கூறினாரல்லர்; 'அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப், பிணங் கல் சாலா அச்சம் நான்கே' என்றே கூறியுள்ளார்.

'மூப்பே பிணியே வருத்தம் மென்மையொ
டியாப்புற வந்த இளிவரல் நான்கே' (மெய்ப். 6)

என்று இளிவரலுக்கு, மூப்பு முதலிய நான்கே பொருளாகக் கூறியுள்ளது அறிக. இந் நற்றிணைப்பாட்டில், வடநூலார் கொள்கையின்படியும் நகைச்சுவையே (ஹாஸ்ய ரஸம்) அமைவுறும்.

'வாள், வலந்தர மறுப்பட்டன' (புறம். 4)

என்னும் புறப்பாட்டு, பெருமிதச்சுவை (வீர ரஸம்) உள்ளதாகும். அது, தறுகண் பொருளாகப் பிறந்த பெருமிதம் எனக் கொள்க.

'மன்னர்
இனியா ருளரோ நின் முன்னும் இல்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி இமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே' (பதிற். 45)

என்னும் அடிகளில், மருட்கை (அற்புத ரஸம்) தோன்றும். இது, புதுமை பொருளாகப் பிறந்த மருட்கை எனக்கொள்க.

'எனைப்பல் யானையும்' என்னும் புறப்பாட்டில் (63),

'என்னா வதுகொல் தானே
* * *
காமர் கிடக்கை அவ ரகன்றலை நாடே'

என வருதலின், ஆண்டு, கருணா ரஸம் (அழுகைச்சுவை) இன்றென அறிக. 'நாடு என்னாவதோ!' எனக் கருதுதலின், இது, [1]சங்கா என்னும் வ்யபிசாரிபாவத்தி னுட்படும்.

பரணர் செய்யுட்களுட் சிலவற்றில்மட்டுமே ரஸம் என்னும் மெய்ப்பாடு அமைந்துளது; பெரும்பாலனவாகிய செய்யுட்களில், பாவமே தோன்றுகின்றது. இக்காட்டியவாற்றால், தொல்காப்பியனார் கூறிய எட்டு மெய்ப்பாடும் (ரஸம்), முப்பத்திரண்டு மெய்ப்பாடும் (வ்யபிசாரிபாவம்) தம்முள் வேற்றுமையுடையவாதலும் ஓராற்றான் அறியப்படும். பரணர் செய்யுட்கள் ஒவ்வொன்றிலும் தோன்றும் மெய்ப்பாடுகளை எழுதி விளக்குவதாயின் மிகவும் விரியுமாகலின், இப் பகுதியை இவ்வளவில் நிறுத்துகின்றேன்.

---

1. சங்கையாவது, 'பிறனது கொடுமையினாலோ, தனது நிலைமை கெடுதலினாலோ உண்டாகக்கூடிய ஆபத்தை ஊகித்தல்.'-(ரஸஸ்வரூப நிரூபணம்.)

பரணர் செய்யுட்களிற் காணும் இலக்கண வேறுபாடு.

சங்கப் புலவருட் பலர், சில சில செய்யுட்களையே பாடியுள்ளனர்; ஒவ்வொரு செய்யுளையே பாடினோரும் உளர். பல செய்யுட்களைப் பாடிய புலவர் சிலரே; அவருள் பரணர் ஒருவ ராவர். அத்தகைய பெரும்புலவராகிய பரணர்தம் செய்யுட்களின் இலக்கண அமைதி, தொல்காப்பியத்திற்கு மாறுபடுகின்றது. ஆதலின், அவர் செய்யுட்களிற் காணும் இலக்கண வேறுபாடுகளைச் சிறிது ஆராய்கின்றேன்:

உயர்திணைப்பெயர்களில், இரண்டாம்வேற்றுமையுருபு விரிந்தே வருதல் வேண்டும் என்பது,

'உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்'

(தொல். தொகை. 15)

என்னும் இரண்டாம்வேற்றுமைச் சிறப்புவிதிச் சூத்திரத்தால் பெறப்படும். அங்ஙனமாகவும், பரணர் செய்யுட்களில்,

'வேந்த ரோட்டிய ஏந்துவே னன்னன்' (நற். 270)

என இரண்டாம்வேற்றுமையுருபு[1] தொக்கு வந்துளது.

'வேந்த ரோட்டிய ஏந்துவே னன்னன்' என்னும் அடியைப் படிக்கும்பொழுது, 'வேந்தரை யோட்டிய நன்னன்' எனப் பொருள் தோன்றுதல் அரிது.

'உருவக் குதிரை மழவ ரோட்டிய' (அகம். 1)

என்று, மாமூலர் பாடியிருப்பதும் இது போன்றதே. இவ்வாறு வருதலைக்கண்டே நன்னூலார்,

'உயர்திணை யிடத்து விரிந்தும் தொக்கும்' (நன். உருபு. 16)

என்று இலக்கணம் அமைப்பாராயினர்.

'பனைத்திரள் அன்ன பரேரெறுழ்த் தடக்கை' (அகம். 148)

என்னும் அடியில், பனைத்திரள் என்பது, பனந்திரள் என வருதலே அமைதி. இது, 'பனையும் அரையும்' (தொல். உயிர்மய. 81) என்னும் சூத்திரத்தால் அறியலாகும். ஆயின்,

'ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே' (உயிர். 78)

என்னும் பொதுவிதியான், பனைத்திரள் என வந்ததால் எனின், ஆசிரியர், பனை என்னும் சொல்லைக்குறித்து மூன்று சூத்திரங்களில் (உயிர். 81-83) சிறப்புவிதி கூறுகின்றாராகலானும், பொதுவிதி, சிறப்புவிதியால் கெடுமாகலானும் அஃது அமையாது என்க. அன்றியும் ஆசிரியர், பனைக்கோடி என வருதல் கண்டு, அதனை,

---

1. 'ஆடூஉ வறிசொல்' (சொல். 2) என்று ஆசிரியர் கூறியிருத்தலின், இஃது அமையும் என்பர்.

'கொடிமுன் வரினே ஐயவ ணிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி' (உயிர். 83)

என்று விதி கூறி அமைத்தாற் போல, பனைத்திரள் என வருதலைக் கூறி யமைத்தாரல்லர். இதனால், பனைத்திரள் என வருதல் ஆசிரியர் கருத்தன்மை யுணர்க. 'பனந்துணி' (புறம். 35), 'பனங் குடை' (புறம். 177) என வருதல் ஈண்டு அறியத்தகும்.

இனி, அஃறிணைப்பெயர்கள் புள்ளியீற்றுயினும் உயிரீற்றுயினும், அவை விளியேற்குமிடத்து ஏகாரம் ஏற்கும் என்பது,

'புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறாஉங் காலந் தோன்றின்
தெளிநிலை யுடைய ஏகாரம் வரலே'
(தொல். விளி. 34)

என்னும் சூத்திரத்தான் அறியப்படும். பரணர் செய்யுளில்,

'வருந்தினை வாழியெ னுள்ளம்' (நற். 356)

என, புள்ளியீற்று அஃறிணைப்பெயர், ஏகாரம் ஏற்காது விளியாக வந்துளது. இவ்வாறு வருதலைக் கண்டே நன்னூலார்,

'இம்முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும்' (நன். பெயர். 48)

என்று அமைத்தார். அன்றியும், ஆசிரியர் தொல்காப்பியர்,

'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல'
(சொல். கிளவி. 27)

என்னும் சூத்திரத்தால், 'ஒருவனை, அவர் என்று கூறுதல் வழக்கினுள் உண்டு; ஆயினும் இலக்கணநெறி யல்ல' என்று விதித்துள்ளார். அங்ஙனமாகவும், பரணர்,

'ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீரோ என' (புறம். 141)

என்று பாடியிருக்கின்றார். இன்னும்,

'காதலர், நல்கார் நயவார்.' (குறு. 60)

என்பது போல்வன பல, [1]இவர் செய்யுட்களிற் காணலாம்.

---

1. இவ்வாறு வருதல், இவர் செய்யுட்களில்மாத்திரமே யன்று; பண்டைப் புலவர் செய்யுட்களில் பயின்று வருவதே.

இனி, கோல் என்னும் இடைச்சொல், ஐயப்பொருளில் வருவது என்பது,

'கொல்லே ஐயம்' (தொல். இடையியல். 20)

என்னும் சூத்திரத்தான் அறியப்படும். அச்சொல், பரணர் செய்யுட்களில் பலவிடத்தும் ஐயப்பொருளிலேயே வந்துளதாயினும், அசைநிலைப் பொருளிலும் வந்துளது.

'பாம்பெறி கோலின் தமியை வைகித்
தேம்புதி கோல்லோ நெஞ்சே' (அகம். 322)

என்னுமிடத்து, நெஞ்சு தேம்புதல் தான் அறிந்ததேயாகலின், ஐயப்பொருள் பொருந்துவதன்று. ஆகவே, ஈண்டு, கொல்-என்பது, அசைநிலைப் பொருளில் வந்ததேயாகும். இவ்வாறு புலவர் பலரும், கொல் என்னும் சொல்லை, அசைநிலைப்பொருளில் வழங்கியிருத்தலின், நன்னூலார்,

'கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே (இடையியல். 16)

என்று, அசைநிலைப்பொருளிலும் வரும் என்பாராயினர்.

வாழிய என்னும் சொல், அசைநிலைப்பொருளில் வரும் என்று தொல்காப்பியனர் கூறினரல்லர். அது, பரணர் செய்யுட்களில் அசைநிலைப் பொருளில் வந்துளது.

'கடுங்காற் றெடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய விருளளி மாய்தல் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே' (அகம். 258)

'எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே' (குறுந். 19)

என்னும் இடங்களைக் காண்க. இவ்வடிகளில், வாழிய என்னும் சொல், வாழ்வாயாக எனப் பொருள் தருதல் அமையாமையின், அசைநிலை எனக் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு அசைநிலைப் பொருளில் புலவர்பலரும் வழங்கியிருத்தலின், நன்னூலார்,

'மியாஇக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளஈ யாழமுன் னிலையசை' (இடையியல். 21)

என்பாராயினர். தொல்காப்பியனர்,

'மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயி னாறும் முன்னிலை யசைச்சொல்' (இடையியல். 26)

என்றே கூறியிருப்பது காண்க.

இனி, புறம் 341-ஆம் பாட்டில்,

'விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவ்வளொடு நாளை
மணம்புகு வைக லாகுத லொன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பி
னீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குரிசில்'

என்னும் பகுதியில், 'மணம்புகு வைக லாகுதல் ஒன்றோ' என்ற அடியில் உள்ள ஒன்றோ என்னும் சொல், முன்வரும் அடிகளோடு பொருளமைதி யுடையதாகத் தோன்றவில்லை. அஃதாவது, மணம் புரியும் நாளாதல் ஒன்றுமட்டுமோ என்றதற் கேற்ப, வேறு இன்னதும் ஆகும் என்று அதற்கு இயைபுடையதொரு செய்தி கூறப்படல் வேண்டும். 'பூவா வஞ்சியுந் தருகுவ னொன்றோ,...மாட மதுரையும் தருகுவன்' (புறம். 32) என, முதலிற் கூறியதற்கு இயைந்த தொன்றனைப் பின்னர்க் கூறியிருத்தல் அறிக. அங்கனமன்றி, 'மணம் புரியும் நாளாதல் ஒன்றோ; இறத்தலும் ஒன்று' என்று பாடியிருத்தல் அமைதியாத லரிது. இதில், 'மணம்புகு வைக லாகுதல் ஒன்று' என்று ஓகாரம் இல்லாதிருப்பின் அமைவுறும். அவ்வாறிருப்பின், 'மணம் புகுவது ஒன்று; அல்லது, இறப்பது ஒன்று; இவ்விரண்டனுள் ஒன்று ஆகுக' எனக்கூறிப் படை தொட்டான் என இயைந்து பொருள் பயக்கும்.

'ஊரொடு
நிறைசால் விழுப்பொருள் தருதல் ஒன்றோ
புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து
பண்பி லாண்மை தருதல் ஒன்றோ
இரண்டினு ளொன்று காமையோ அரிதே' (புறம். 344)

என வந்திருத்தல் ஈண்டைக்கு நோக்கத் தக்கது. இவற்றால், மேற்குறித்த அடிகளில், ஒன்றோ என்னும் சொல்லில் ஓகாரம் இயைபுடையதாமா றின்மையின், அதனை, அசைநிலை எனக் கொள்ளல் வேண்டும். ஆனல், தொல்காப்பியனர் ஓகாரம் அசைநிலைப் பொருளில் வரும் என விதித்தாரல்லர். அவர்,

'பிரிநிலை வினவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே' (இடையியல். 8)

என்று, ஓகாரத்திற்கு ஆறு பொருளே கூறியுள்ளார். இங்கனம் வருதலைக் கண்டு, நன்னூலார்,

'ஒழியிசை வினைச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே' (இடை. 4)

என, ஓகாரத்திற்கு அசைநிலைப் பொருளும் விதிப்பாராயினர். இது நிற்க.

செய்யுளிலக்கண வேறுபாடு.

ஆசிரியர் தொல்காப்பியர், செய்யுளியலில், வஞ்சிப்பா [1]இரு சீரடியானும் [2]முச்சீரடியானும் வரும் என்றும், அவ்வடிகளில் [3]அசையே கூனாக வரும் என்றும் கூறியுள்ளார். அவர்,

'சீர்கூ னாதல் நேரடிக் குரித்தே' (செய். 49)

என்று கூறியிருத்தலின், வஞ்சியடியாகிய குறளடியிலும் சிந்தடியிலும் சீர்கள் கூனாக வாரா என்பது ஒருதலை. பரணர் செய்யுளில்,

'மாவே, எறிபதத்தா னிடங்காட்ட' (புறம். 4)

என்றும்,

'நீயே, அலங்குளைப் பரீஇயிவுளி' (புறம். 4)

என்றும் காணப்படும் வஞ்சியடிகளில், சீர்கள் கூனாக வந்துள்ளன. இவ்விரண்டனுள் முன்னதைச் சிலர், 'மா, வெறிபதத்தா னிடங் காட்ட' என்று காட்டி அமைப்பாராயினும், பின்னதை அமைத்துக் காட்டுமா றில்லை. 'நீயே' என்பதிலுள்ள ஏகாரத்தை நீக்கிவிட்டு, அதனை ஓரசையாகக் கொள்ளலாகாதோ எனின், நேரடியில், சீர் கூனாக வருதற்கு உதாரணம் காட்டியவிடத்தில், உரையாசிரியர்கள்,

'அவரே, கேடில் விழுப்பொருு டருமார் பாசிலை' (குறுந். 216)

என்று, அவரே என்னும் சொல்லைக் காட்டியுள்ளனர். அவரே என்பதன்கணுள்ள ஏகாரத்தை நீக்கிவிடின், அச்சொல் ஓர் அசையாதலே யன்றி ஒரு சீராதல் இல்லை. அஃது (அவரே), ஒரு சீராகவே கொள்ளப்பட்டது போல, நீயே என்பதும் ஒரு சீரே யாகும் என அறிக.

உவமவியல் வேறுபாடு.

ஆசிரியர் தொல்காப்பியனுர் உவமவியலில், உவம வுருபுக ளெல்லாவற்றையும் ஒரு சூத்திரத்திற் கூறி, பின்னர், நால்வகை யுவமங்களுக்கும் தனித் தனியே உரிமையாய் வரும் உருபுகளை ஒவ்வொரு சூத்திரத்தால் வகுத்துக் கூறியுள்ளார். அதனல் ஓரோர் உவமத்திற்கும் உரிய வுருபுகள் இவை என்பதும், அவை, பிற வுவமத்திற்கு வாரா என்பதும் தெளியப்படும்.

---

1. செய். சூ. 45. 2. செய். சூ. 47. 3. செய். சூ. 48.

பரணர் செய்யுட்களில், சில வுவமவுருபுகள் தொல்காப்பியர் கூறிய விதி கடந்து பயின்று வந்துள்ளன. அவற்றை ஈண்டுக் காட்டுகின்றேன்:

போல என்னும் உருபு, உருவுவமத்திற்கே யுரியது என்பது

'போல மறுப்ப ஒப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தஎன்
றெத்துவரு கிளவி உருவின் உவமம்' (உவம. 16)

என்னும் சூத்திரத்தான் அறியப்படும். இவ்வுருபு (போல), பரணர் செய்யுட்களில் உருவுவமத்தன்றிப் பிற வுவமங்களிற் பலவிடத்தும் வந்துளது. அவற்றுள்ளும் வினையுவமத்தின்கண் மிகப் பயின்று வந்துளது. இவ்வுருபு (போல), அன்ன என்னும் உருபேபோல் பிறவுவமத்துக்கண்ணும் வரும் என்று விதி கூறாமையின், ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தில், இவ்வுருபு உருவுவமத்தின்கண் அன்றிப் பிற வுவமத்தில் வந்திலது என்பதில் ஐயமில்லை யன்றே? இது (போல), வினையுவமத்தின்கண் வந்துள்ள இடங்கள்:

1. 'அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின்' (அகம். 76)

2. 'பீடின் மன்னர் போல
வோடுவை மன்னல் வாடை நீ' (அகம். 125)

3. 'கழுவுள் காமூர் போல
விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே' (அக. 135)

4. 'இளமழை சூழ்ந்த மடமயில் போல
* * வந்து' (அக. 198)

5. 'உப்புச் சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம்' (அக. 208)

6. 'ஆதி மந்தி போல
ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே' (அக. 236)

7. 'மாய விருளளீ மாய்தல் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே' (அக. 258)

8. 'சின மாறிய
அன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்
தானு வுவகையயே மாயினேம்' (அக. 262)

9. 'நாரை * * பயப்பயக்
கடியிலன் புகூஉங் கள்வன் போலச்
சாஅ யோதுங்கும்' (அக. 276)

10. 'பழைய னேக்கிய வேல்போற்
பிழையல கண்ணவ ளேக்கியோர் திறத்தே' (அக. 326)

11. 'வெய்யை போல முயங்குதி' (நற். 260)

12. 'இருள்புரை கூந்தல் பொங்குதுக ளாடி
யுருள்பொலி போல வெம்முனே வருந்த' (நற். 270)

13. 'பொச்சைசூழ் பெருங்களிறு போல
எம், அட்டிலோலை தோட்டனை நின்மே' (நற். 300)

14. 'வளராப் பார்ப்பிற் கல்கிரை யொய்யும்
அசைவி னேன்பறை போலச் சேலவர
வருந்தினே' (நற். 356)

15. 'பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி' (குறுந். 19)

16. 'எழுகளிறு மிதித்த வொருபழம் போலக்
குழைய' (குறுந். 24)

17. 'நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமோல்' (குறுந். 73)

18. 'தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே' (புறம். 4)

19. 'ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்' (புறம். 141)

20. 'வரையா மரபின் மாரி போலக்
கோடைமடம் படுத லல்லது' (புறம். 142)

21. 'களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருங்கவி னிழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பின் இத் தண்பணை யூரே' (புறம். 341)

என்பன.

இவ்வுருபு (போல), பயனுவமத்திலும் வந்துளது.

1. 'குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே' (அக. 142)

2. 'பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் சேலீஇயரோ அன்னை' (குறுந். 292)

என்பன காண்க.

இனி, போல என்னும் இவ்வுருபு மெய்யுவமத்தினும் வந்துளது. புறம். 4-ஆம் பாட்டில்,

'தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப்போன்றன'

என்பது முதலியன காண்க.

இவ்வாறே, கடுப்ப என்னும் உருபு,

'கடுப்ப ஏய்ப்ப மருளப் புரைய
ஒட்ட ஒடுங்க ஓட நிகர்ப்பஎன்
றப்பா லெட்டே மெய்ப்பால் உவமம்' (உவம. 15)

என்று, மெய்யுவமத்திற்கு உரிமையுடையதாக விதிக்கப்பட்டிருக்க, அஃது, உருவுவமம் வினையுவமம் முதலிய பிறவற்றினும் வந்துளது.

உருவுவமத்தில் வந்துள்ள இடங்களுள்,

1. 'புதலிவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலே னாகி' (அக. 135)

2. 'நீர்த்திரள் கடுக்கும் மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கை' (அக. 142)

3. 'களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர
வொளிறுவன விழிதரும் உயர்ந்துதோன் றருவி' (அக. 162)

4. 'பன்றி * * *
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்
தலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வர' (அக. 178)

என்பன காண்க.

வினையுவமத்தில்,

'மின்னுவசி
புரவுக்கால் கடுப்ப மறலி மைந்துற்ற' (அக. 212)

என்றும்,

'கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்நுண் ணோதி' (அக. 208)

என்றும் வந்துளது.

இவ்வாறே, ஏய்ப்ப என்னும் உருபும், தனக்குரிய மெய்யுவமத் தினன்றி உருவுவமத்தில் வந்துளது. அதனை,

'ஈங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்

வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழ' (அக. 125)

என்னும் அடிகளிற் காண்க.

'உறழ' என்னும் உருபு, வினையுவமத்திற்கே உரியது என்பது மேற்காட்டிய, 'அன்ன ஆங்க' என்னும் சூத்திரத்தான் அறியப்படும். ஆகவும், உறழ என்பது மெய்யுவமத்தில் வந்துளது.

'பிறையுறழ் மருப்பிற் கடுங்கட் பன்றி' (அகம். 322)

என்பது காண்க.

புரைய என்னும் உருபு, மெய்யுவமத்திற்கு உரியது என்பது, மேற்காட்டிய, 'கடுப்ப ஏய்ப்ப' என்னும் சூத்திரத்தான் அறியப் படும். அஃது, உருவுவமத்துக்கண்ணும் வந்துளது.

'இருள்புரை கூந்தல்' (நற். 270)

என்பது காண்க.

இனி, பேராசிரியர் தம் உரையில், 'அதுவும் (போல), அன்ன என்பதுபோல மற்றை மூன்று உவமத்தும் பயின்று வருமென் பது எய்துவித்தற் கென்பது' எனக் கூறி, போல என்னும் உருபு பிற வுவமத்துக்கண் வருதல அமைத்தாரேனும், 'கடுப்ப என்றக் கால், வினைக்கும் பயத்திற்கும் ஏலாது ; என்னை ? கடுத்தல் என்பது ஐயுறுதல். புலியோடு மறவனை ஐயுறவேண்டுவதோர் காரணமின் மையானும், மழையின் விளைத்த பயத்தோடு உவமித்தலின் மழை யோடு ஒருவனை ஐயஞ்செய்தல் வேண்டுவதின்மையானும், வடிவு கண்டவழி ஐயம்பிறக்குமாகலானும், உருவென்பது குணமாகலாற் பொருள்வேற்றுமை அறிந்தவழி ஐயம் செல்லாதாகலானும் மெய்க்கு உரிமை கூறினன் என்பது. ஏய்த்தல் என்பதூஉம் பொருந்துதலாகலின் வடிவிற் கேற்கும்' என்று கூறி, மெய்யுவமத் துக்கு உரிமை கூறப்பட்ட உருபுகள் பிறவுவமங்களில் வரலாகா எனவே தமது கொள்கையை நிறுவினர். இன்னும் அவர், 'மறுப்ப ஒப்ப என்பன முதலாயினவும் ஒரு காரணமுடைய என்பது ஆசிரி யன் பெருவரவினவாக உரிமைப்படுத்துக் கூறினமையின் அறிந் தாம். அல்லதூஉம், "மரபிற் றோன்றும்" என்றதனுன் இவையெல் லாம் மரபுபற்றி அறியல் வேண்டும். எனவே, தலைச்சங்கத்தார் முதலாயினர் செய்யுட்களுள் அவ்வாறு பயின்றுவரும் என்பது அறிந்தாமன்றே, இவ்வாறு சூத்திரம் செய்தலான் என்பது' (உவம. 17) என்று கூறியிருத்தலின், இன்ன வுருபு இன்ன வுவமத்தில் வரும் என்று உரிமைப்படுத்திக் கூறியதற்குக் காரணம் உண்டு என்றும், அக் காரணத்தை அறிந்து அவ்வாறே மிகப்

பழைய காலத்தில் புலவர்கள் செய்யுட் செய்துவந்தனர் என்றும், அது கண்டே தொல்காப்பியனார் உவமவுருபுகளை வகுத்துக்கூறினார் என்றும் அறியலாகும்.

இவ்வாறன்றி, எல்லா வுருபுகளும் எல்லா வுவமங்களுக்கும் வருமாயின், ஆசிரியர்தொல்காப்பியனார் அவ்வுருபுகளை வகுத்துத் தனித்தனிச் சூத்திரங்களாகச் செய்து வீணாகப் பெருக்கமாட்டாரன்றே? 'அற்றன்று: பண்டைக்காலத்தில் நியமமாக வரையறை செய்யப்பட்ட வுருபுகள், தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னரே அவ் விதியைக் கடந்து வந்தன; ஆயினும் அவர், பழைய இலக்கணங்களிற் கூறியிருந்தவாறே கூறியிருக்கலாம்' என்பாருளராயின், அவர் (தொல்காப்பியனார்) காலத்திலேயே அவை நியதியின்றி வழங்கப்பட்டிருக்குமேல், அவர்,

'அன்ன ஆங்க மான விறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பா லுவமம்' (உவம. 12)

என்று வினையுவமவுருபுகளைக் கூறி, அவற்றுள், **அன்ன** என்னும் உருபு பிறவுவமங்களினும் வருதல் கண்டு, அதனை,

'அன்னவென் கிளவி பிறவொடும் சிவணும்' (உவம. 13)

என, ஏனையவுவமங்களினும் வரும் என்று விதித்தது போல, இன்ன இன்ன உருபுகள் இன்ன இன்ன உவமத்திற்கு உரியன என்று முதலிற் கூறி, பின்னர், இன்ன உருபு இன்ன உவமத்தும் வரும் என்றும் கூறியிருப்பர். அவர் (தொல்காப்பியனார்), அவ்வாறு விதி கூறாமையின், அவர்காலத்து வழங்கிய இலக்கியங்களில், அவர் கூறியுள்ள முறைக்கு மாறாக உவமவுருபுகள் வழங்கப்பட்டில எனக் கோடல் சால்புடைத்து.

இனி, 'தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னரே, உவமவுருபுகளெல்லாம் விரவி, நால்வகை யுவமத்தும் பயின்று வந்தன; அவற்றுள், இன்ன இன்ன உருபுகள் இவ்விவ்வுவமத்தில் வருதல் ஏற்புடைய என அவர்தாமே (தொல்காப்பியனாரே) முறைப் படுத்திக் கூறியிருக்கலாம்' எனின், ஆசிரியர்,

'செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப' (கிளவி. 28)

என்று பிறர் கொள்கையை முன்னர்க் கூறி, பின்னர்,

'அவற்றுள்,

தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயி ரிடத்த' (கிளவி. 29)

என்றும்,

'ஏனை இரண்டும் ஏனை யிடத்த' (கிளவி. 30)

என்றும், இவை இவை இவ்விவ்விடங்களுக்கு உரியன எனத் தமது கொள்கையைப் புலப்படுத்தினது போலவும்,

'வேற்றுமை தாமே ஏழென மொழிப' (வேற்றுமையி. 1)

என்று முன்னர்ப் பிறர்மதம் கூறி, பின்னர்,

'விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே'
(வேற்றுமையி. 2)

என்று தம்மதம் கூறினது போலவும், ஈண்டும், இன்ன இன்ன உருபுகள் இன்ன இன்ன உவமங்களுக்கு வருமென்ப என்று முதலில் பிறர் மதம் கூறி, பின்னர், இவ்வுருபுகள் இவ்வுவமத்திற்கு வருதல்வேண்டும் எனத் தம்மதம் கூறுவர். அவ்வாறு கூறுமை யின், அவர், தம்காலத்தில் வழங்கிவந்த இலக்கியங்களில் கண்ட வாறே கூறினராவர் என்க. ஆசிரியர்தொல்காப்பியனார், பவணந்தி யைப்போல, முன்னைய நூல்களிற் கூறப்பட்டவற்றைத் 'தொகை வகை விரி'யில் தந்தவரல்லர்; வழக்கானும் செய்யுளானும் எழுத்து, சொல், பொருள்களை ஆராய்ந்து, முந்துநூல்களையும் கண்டு, இலக் கணம் செய்தவர். இவற்றால் அவர், தம் காலத்து இலக்கியங்களில் வழங்கியவாறே உவமவுருபுகளை வகுத்துக் கூறினர் என்பது தேற் றம். தொல்காப்பியனார்காலத்தில் வழங்கிய முறை, பரணர் முதலி யோர் காலத்தில் ஒழிந்தது என்றும், அதனாலேயே, நன்னூலார் முதலிய பிற்காலத்து இலக்கண ஆசிரியர்கள், தொல்காப்பியனார் கூறி யிருத்தல் போலப் பிரித்து வகுத்துக் கூறாமல், இவை உவம வுருபுகள் என்று பொதுப்படக் கூறினர் என்றும் கொள்ளுதலே அமைதி.

இதுகாறும் கூறியவற்றால், பரணர் செய்யுட்களில், தொல்காப் பிய இலக்கணங்களுக்கு மாறானவை பல வந்துள்ளன என்பது தெளிவாகும். இத்தகைய இலக்கண மாறுபாடுகள், இவர் செய்யுட் களில்மட்டுமே காணப்படுவன அல்ல; கபிலர், நக்கீரர் முதலிய புலவர் அனைவர் செய்யுட்களிலும் காணப்படுவனவே. இதனால், இப்புலவர்களனைவரும் தொல்காப்பியனார்காலத்திற்குப் பன்னூறு யாண்டுகளுக்குப் பின் வாழ்ந்திருந்தவர் ஆதல் வேண்டும். பெரும் புலவர்கள், முற்கால இலக்கண அமைதிகளுக்கு அடங்கியிராராய்,

தம் காலத்திற் கேற்பத் தமது கருத்தின்படி செய்யுட் செய்தலும், அவற்றைக்கண்டு பின்னுள்ளோர் இலக்கணம் அமைத்துக்கொள்ளு தலும் வழக்கு. பிற்காலத்தவராகிய நன்னூலார், மிகச் சுருக்கமாகத் தொகுத்து இலக்கணம் செய்தாராயினும், அவர், சங்கப்புலவர் முதலியோர் செய்யுட்களில், தொல்காப்பியத்திற்கு மாறாக வந்துள்ள வற்றுட் சிலவற்றைத் தமது நூலுள் அமைத்து இலக்கணம் செய் துள்ளமை, மேலே காட்டியவற்றான் அறியலாகும். ஆசிரியர் தொல் காப்பியர், பரணர் முதலிய புலவர்தம் காலத்திற்குப் பிற்பட்டவரா யிருப்பின், அவர், புலவர் பலராலும் புகழப்பட்ட பரணர் கபிலர் முதலிய பெரும்புலவர்தம் செய்யுட்களிற் பயின்று வந்துள்ளவற்றிற் கும் மாறாக இலக்கணம் செய்வாரல்லர். அவ்வாறு செய்யின், 'வழக் கும் செய்யுளும் ஆயிரு முதலின்' ஆராய்ந்து இலக்கணம் செய்தார் என்பது அமைவுறுதல் யாங்கனம்? இவற்றானும் பிறவாற்றானும் ஆசிரியர்தொல்காப்பியனார், பரணர் முதலியோர் காலத்திற்குப் பெரிதும் முற்பட்டவராவர் என்பது தேற்றம். இன்னும் இதனை (தொல்காப்பியர், பரணர் முதலியோருக்கு முற்பட்டவர் என்பதனை) ஈண்டு விரித்துரைப்பின், 'மற்றொன்று விரித்தல்' ஆகுமென் றஞ்சி இதனோடு நிறுத்துகின்றேன்.

**ஓரசைச்சீர்கள்.** பரணர் செய்யுட்களிற் சில இடங்களில் ஓரசைச்சீர்கள் காணப் படுகின்றன. இவை அக்காலத்துப் புலவர் செய் யுட்களில் பலவிடத்திலும் வருதல் காணலாம். இங்கே, பரணர்செய்யுள் ஒன்றில் ஓரசைச்சீர்கள் வந்துள்ள பகுதி யைக் குறிக்கின்றேன்.

'அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழுங் கூந்தற் றாவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பி
னிளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூ
லஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள்' (அகம். 198)

என்னும் இவ்வடிகளில், கரந்து, வேய்ந்து, வந்து என்பவை ஓரசைச் சீர்கள். என்னை? இவை, முறையே நிரைநேர், நேர்நேர், நேர்நேர் என்னும் ஈரசைச்சீர்கள் ஆகாவோ வெனின், பிற்காலத்தில் தோன் றிய இலக்கணங்களினால் அவ்வாறு கொள்ளப்படுமாயினும், தொல் காப்பிய இலக்கணத்தான் அவை அமையா வென்க. தொகைநூல் களுக்குத் தொல்காப்பிய மொன்றே இலக்கண மாவதன்றிப் பிற

நூல்கள் இலக்கணமாதல் இல்லை. இதனை, ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின்' (புறத். சூ. 35. உரை) என்று கூறியுள்ளவாற்றானும், 'அவர்க்கு (கடைச்சங்கத்தார்க்கு) நூல், அகத்தியமும் தொல்காப்பியமும் என்ப' (சூ. 1. உரை) என்னும் களவியலுரையானும் தெளிக. ஆயின், இவை ஓரசை யாமாறு என்னை யெனின்,

'இருவகை உகரமோ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப' (செய்யு. 4)

என்னும் சூத்திர விதியான், 'கரந்து' என்பது நிரைபு அசையாயும், வேய்ந்து, வந்து என்பன நேர்பு அசையாயும் கொள்ளப்படும். நேர்பு நிரைபு என்னும் அசைகள், சில இடங்களில் சீராக வருதல் உண்டு என்றும், அவை அமைத்துக்கொள்ளப்படும் என்றும் ஆசிரியர் தொல்காப்பியனார்,

'இசைநிலை நிறைய நிற்குவ தாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே' (செய். 27)

என்னும் சூத்திரத்தான் விதித்திருப்பதனால், இவ் வோரசைச்சீர்கள் இசைநிறைந்து சீர்களாக அமைவுற்றன என்று கொள்ளுதல் தகுதியே யன்றிப் பிற்காலத்து இலக்கணங்களைக்கொண்டு இவற்றை ஈரசைச்சீர்கள் எனக் கோடல் அமைவுடைய தாகாது.

'இச்சூத்திரத்திற்குப் பேராசிரியர், "ஓசைநிலை குறையாமையாற் சீர்த்தன்மைபட நிறைந்து நிற்குமாயின், அசைநிலைமைப்பட்ட சொற்களையெல்லாம் சீர்நிலை பெறுதற்கண் வரையார்" எனப் பொருள் கூறி,

'கழறொழா மன்னர்தங் கை'
'புனலொடன் பேரே வரும்'
'எய்போற் கிடந்தானென் ஏறு'
'மேவாரை யட்ட களத்து'

என உதாரணங் காட்டி, வெண்பாவினீற்றடியில் வரும் ஓரசைகள் சீராகும் என்று உரைகூறினரே யன்றி, நேர்பு நிரைபு அசைகள் சீராகும் என்று உரைகூறினரல்லர். இன்னும் அவர், "இங்ஙனம் கூறுங்கால் வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி யென்னுமாறு இல்லை யென்பது" என்றும் கூறினராகலின், இச்சூத்திரத்தான், நேர்பு நிரைபு அசைகள் சீராகும் என்பது பெறப்படாது' எனின், கூறுவேன்.

வெண்பாட்டின் ஈற்றடி மூச்சீராகும் எனவும், அவ்விடத்தில் அசைச்சீர்கள் வரும் எனவும், இன்ன அசைச்சீர் இன்ன சீருள்ள விடத்தில் வரும் எனவும், ஆசிரியர், நான்கு சூத்திரங்களான் [1]முன்னர் விரித்துக் கூறுகின்றாராகலின், 'இங்ஙனம் கூறுக்கால், வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி என்னுமாறு இல்லை யென்பது' என்று கூறிய வுரை அமைவுடையதாகாது என அறிக. அன்றியும், ஓரசையைச் சீராக இயற்றும் முறையைக் குறித்து, ஆசிரியர்,

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான' (செய். 28)

என்று, இதனை (இசைநிறை என்னும் சூத்திரத்தை) அடுத்துக் கூறிய சூத்திரத்திற்கு, பேராசிரியரே, 'இஃது எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று ; இயலசை இரண்டும் சீர்நிலை பெறினும் தளை கோள்ளப்படா என்றமையின். இனி, எய்தாதது எய்துவித்ததூஉமாம் ; என்னை ? உரியசையால் தளை கோள்ளுமாறு உணர்த்தினமையின்' என்று கருத்துக் கூறினர். பின்னும் அவர், 'உரியசை இரண்டும் பகுத்துக் கொள்ளப்படும்' என்று விளக்கமும் எழுதினர்.

நச்சினார்க்கினியர், பேராசிரியர் கூறியவாறே கருத்துக் கூறி,

'மூலை விலங்கிற் றேன்று முனிவாள்'

என்றும்,

'நெய்த்தோர் நிறைத்துக் கணம்புகல்'

என்றும், உதாரணங் காட்டி, இரண்டு அசைச்சீரும் இயற்சீர் வெண்டளையாகத் தட்டன' என்று விளக்கமும் எழுதினர். இவற்றால், இவரிருவரும், நேர்பு நிரைபு அசைகளே சீராக இயற்றப்படும் என்றது காண்க. இதனை அறியாராய்ப் பிற்காலத்தார், ஓரசையே சீராகும் என்பதற்கு, நேரசை நிரையசைகள், பாட்டுக்களின் இடையே சீர்களாக வரும் எனக் கொண்டனர் ;

'உரிமை யின்க ணின்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்' (யா. கா. 11, உரை)

என அசை சீராய் வந்ததற்கு உதாரணம் காட்டினர். அஃது,

'உரிமை யின்க ணின்மையால்'

என்னும் அடிக்கு ஏற்ப,

'அரிம தர்ம ழைக்கணாள்'

என்று வகையுளியாகச் சீர்பிரித்தலும் அமைதியன்றாதலின், அவ்வாறு வருதல் அமையாது என அறிக. இவற்றால், நேரசை நிரை

1. செய். 72, 73, 74, 75-ஆம் சூத்திரங்களைக் காண்க.

யசைகள், வெண்பாவின் ஈற்றிலன்றி, பாட்டுக்களின் இடையே சீராக வாரா எனக் கொள்க.

இன்னும், இச்சூத்திரம் ('இசைநிலை') உள்ள இடம் சீரைப் பற்றிக் கூறுமிடமாகலின், ஓர் அசையும் சீராக வரும் என்று ஈண்டுக் கூறுதலே ஏற்புடைத்தாகும் என்பதும் அறிதற்பாலது. இக்கருத்தா னன்றே ஆசிரியர், வெண்பாவின் ஈற்றடி முச்சீராய் வரும் எனவும், ஆண்டு அசையும் சீராகும் எனவும், பாக்களின் அடிகளைப் பற்றிக் கூறுமிடத்துக் கூறுவாராயினர். அவற்றை இங்கே எடுத்து எழுது கின்றேன்.

'ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கிற்
றோற்றம் முச்சீர்த் தாகும் என்ப' (செய். 68)
'இடையும் வரையார் தொடையுணர் வோரே' (செய். 69)
'முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்' (செய். 70)
'வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே' (செய். 71)

என்று ஆசிரியம் முதலிய பாக்களின் அடி யியல்பினைக் கூறுமிடத்து,

'வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்' (செய். 72)
'அசைசீர்த் தாகும் அவ்வயி னான' (செய். 73)
'நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபும்
சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப' (செய். 74)
'நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்' (செய். 75)

என வெண்பாவின் அடிகளுக்கு இலக்கணம் கூறினர். வெண்பா வினீற்றடியைக்குறித்து இவ்வாறு நான்கு சூத்திரம் கூறப்பட்டிருத் தலின், 'இசைநிலை...பெறலே' என்னும் சூத்திரத்திற்கு உரையாளர், 'இங்ஙனம் கூறுங்கால் வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி என்னு மாறு இல்லை என்பது' என்று எழுதியிருப்பது அமைவுடையதாகத் தோன்றவில்லை. இனி, இவ்வாறு சீராக வரும் நேர்பு நிரைபு அசை களை எச்சீராகக் கொள்ளுதும் எனின், அவை,

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான' (செய். 28)

என்னுஞ் சூத்திரத்தான், நேர்நேர் ஆகவும், நிரைநேர் ஆகவும் இயற்றிக்கொள்ளப்படும். 'தானாக இயல்வதன்மையின், இயற்றுக எனப்பட்டது' என்று, பேராசிரியர் எழுதியிருத்தல் அறியத் தரும். ஆகவே, மேற்காட்டிய பாட்டில், கரந்து என்பது, நிரை நேர் ஆகிய இயற்சீரும், வேய்ந்து என்பது, நேர்நேர் ஆகிய

இயற்சீரும் ஆக இயற்றிக்கொள்ளப்படும் என்க. ஆயினும் அவை, ஓரசைச்சீர்களே. 'இசைநிலை' என்னும் சூத்திரம், அசை சீராதற்கே இலக்கணம் என்று யான் கூறும் இவ்வுரையே பொருந்தும் என்பது அறிஞர் நடுநின்று ஆராயின் விளங்கும்.

விசேட இலக்கணம்.

சேன்மோ என்னும் சொல்லில், மோ என்பதை முன்னிலை யசையாக்கி, செல் என்பதற்கு, நீ செல் எனப் பொருள் கூறுவர். அல்லது, அதில், ஒ என்பதையே அசைநிலையாக நீக்கி, சேன்ம் என்பதற்கு, நீவிர் சேன்மின் எனப் பொருள் கூறுதல் கூடும். 'மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ' (மணிமேகலை. 13 : 93) என்னுமிடத்து, கேண்மோ என்பதில் ஒகாரமே அசையாக நிற்றல் அறிக. இவற்றால், சென்மோ என்னும் சொல், முன்னிலை ஒருமைவினையாகவும், முன்னிலைப் பன்மைவினை யாகவும் அமைந்து பொருள் தரும் என்பது தெளிவாகும். ஆயின், இச்சொல், பரணர் செய்யுளில், தன்மைப்பன்மை வினை முற்றாய், நாம் செல்வாமோ என்னும் பொருளில் வந்துளது.

'சேன்மோ வாழி தோழி *
* * * *
இரவுப்பெயல் பொழிந்த வீர்ந்த ணாறே' (அகம். 222)

என்னுமிடத்தில், தோழியையும் உடன்படுத்தித் தலைவி கூறுதலின், சேன்மோ என்னுஞ் சொல், உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்றாய் வந்துளது காண்க. இச்சொல் இப்பொருளிலேயே,

'உலமந்து வருகம் சேன்மோ தோழி' (அகம். 106)

என்றும்,

'கண்டனம் வருகம் சேன்மோ தோழி' (நற். 182, 235)

என்றும்,

'பரவினம் வருகம் சேன்மோ தோழி' (நற். 358)

என்றும்,

'சேன்மோ வாழி தோழி' (நற்-365)

என்றும், பிறர் செய்யுட்களிலும் வந்துளது. இவ்வாறு வரும் இடங்கள் இன்னும் பல.

## எழுத்து மாறிவந்த சொற்கள்.

ஒளிறு=ஒளிர்.

ஒளிறுவாள் (குறுந். 393), ஒளிறுவேல் (அகம். 322, புறம். 336) ஒளிறுநீர் (அகம். 62) என்னும் இச் சொற்களில் வல்லின றகரமே, பழைய நூல்களில் காண்கின்றது. பிற்காலத்தில், இவற்றில் ஒளிர்வாள், ஒளிர்வேல், ஒளிர்நீர் என இடையின ரகரமே வருகின்றது. இச் சொற்களி

23

ளுள்ள றகரம், ஒரு மாத்திரையிற் குறைந்தொலித்தலின், மெய் யெழுத்தின் ஒலிபோலக் கேட்கும். அது கருதிப் பிற்காலத்தே இவ்விடங்களில் ரகரமெய் எழுதப் பெற்றிருக்கவேண்டும். வல்லின றகரஉகர ஈற்றுச் சொற்கள், தொடர்மொழி யாகும்போது இடையின ரகரமெய்யாதல் கன்னடமொழியில் வழக்கு.

நேஸறு+மூடிதது=நேஸர் மூடிதது (சூரியன் உதித்தது)

என்பது போல்வன அறிக. தெலுங்கிலும் இவ்வாறே ஆகின்றது.

நூறு நாள்ளு=நூர் நாள்ளு

என்பது காண்க. இனி, தெலுங்கில் ஒருமொழியிலும் இம்முறை அமைந்துளது.

மாறு+பு=மார்(ப்)பு=மாற்றம்
ஆறு+சு=ஆர்(ச்)சு=ஆற்று

என்பன காண்க.

இவற்றால், றவ்வீற்றுச் சொற்கள், தொடர்மொழியில் ரகரமெய்யன ஆதல் அறியப்படும். இவ்வாறு ஆதற்குக் காரணம் என்னை யெனின், றகரம் குறைந்தொலித்தலே யாகும். றகர ரகரங்களுக்குப் பிறப்பிடம் ஒன்றேயாதலும், நுனிநா வொற்று தலும் வருடுதலும் ஆகிய முயற்சியே அவற்றின் வேறுபாட்டிற்குக் காரணமாதலும் ஈண்டு அறியத்தகும். நுனிநா வொற்றுதலாற் பிறக்கும் றகரத்தின் முயற்சி சிறிது குறையின், ரகர ஒலியே கேட்கும். ஆதலின், மேற்காட்டிய ஒளிறு என்னுஞ் சொல்லில், பிற்காலத்தே ரகரமெய் எழுதப்பட்டது எனக் கொள்க.

ஈழ்க்கும்=ஈர்க்கும்.

செந்தமிழ்மொழியில், தனிக்குறிலையடுத்து ரகர ழகர மெய்கள் வரலாகா என்று விலக்கி, அவற்றை உகரவுயிருடன் கூட்டி வழங்கினர். ஆதலின், [1]விழ்ந்தான்—வீழ்ந்தான் என்பவற்றுள், விழ்ந்தான் என்பதில், தனிக்குறிலை யடுத்து வந்த ழகரமெய் உகரம் பெற்று, விழுந்தான் என்று வழங்கலாயிற்று; பிறவழி உகரம் பெறாதே மெய் யெழுத்தாகவே வருவதாயிற்று. இவ்வாறே, இழ்க்கும்—ஈழ்க்கும் என்பவற்றுள், ஈழ்க்கும் என்பது ஈர்க்கும் என (அகம். 186) வந்தது என அறிக. ஆயின், ஈர்க்கும் என்றுயது எவ்வாறு எனின், ரகர ழகரங்கள் தம்முள் மயங்கி, ஒன்றற்கொன்று வருகின்றது என்க. 'தாமலர்க்கண் ஏர்க துயில்' (புறப்பொருள். பாடாண். 9), 'வலனேர்பு'

---

1. கன்னட மொழியில், விழ்தெ(ன்), அழ்தெ(ன்) என ழகரமெய் யாகவே உளது.

(முருகு. 1) என்பவற்றில், ஏர்க, ஏர்பு என வந்தமை அறியத்தக்கது. எழ்க—ஏழ்க என்பவற்றுள் ஏழ்க என்பதுவே ஏர்க என்றாயது காண்க. தமிழ்ச்சொற்களிலுள்ள ழகரம் தெலுங்க மொழியில் டகரமாகும் நியதியின்படி, ஈழ்க்கும் என்பது, ஈட்சுன் என டகரமாகத் தெலுங்கில் வழங்குகின்றது. இதனானும் இச்சொல், தமிழிலும் ஈழ்க்கும் என வழங்கியிருத்தல்வேண்டும் எனக் கருதலாம்.

**பேர்வாய்= பேழ்வாய்.**

ஈர்க்கும் என்னும் சொல்லில், ழகரத்துக்கு ரகரம் வந்தது போலவே, பேழ்வாய் என்னும் சொல்லில் ரகரத்துக்கு ழகரம் வந்துளது என அறிக. [1]பெர்வாய் எனவும், பேர்வாய் எனவும் வழங்குஞ் சொற்களுள், பேர்வாய் என்பதே பேழ்வாய் (அகம். 246) என்று வந்தது. பெருவாய் ரகரமெய் உகரம் பெற்றது தனிக்குறிலை யடுத்து வந்ததனால் என உணர்க. 'பேழ்வா யுழுவை' என்னுமிடங்களில் (புறம். 33, 152) பெரியவாயையுடைய புலி என்றே உரை எழுதியிருத்தல் ஈண்டைக்கு நோக்கத்தக்கது.

**அசை நிலைச் சொற்கள் முதலியன.**

ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பொருளைக் குறித்து வருமே யல்லாது, பொருளைக் குறியாமல் வருவன அல்ல. அஃது, 'எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே' (தொல். சொல். பெயர். 1) என்னும் சூத்திரத்தானும் அறியப்படும். ஆகவே, சொற்கள், காட்சிப்பொருளையோ, கருத்துப்பொருளையோ அறிவிக்கும் பொருட்டு வழங்கப்படுவன என்பது தேற்றம். முதன் முதல், பொருள்களுக்குப் பெயரிடுகையில், அவற்றின் தன்மையுள் ஒன்றனைக் கருதியே பெயரிட்டிருத்தல் வேண்டும். பிற்காலத்தில், அக்காரணம் நன்கு புலனாகாது போகவே, அத்தகைய பெயர்களை இடுகுறிப்பெயர் என்று வழங்கலாயினர். நிற்க.

செய்யுட்களில் எல்லாச் சொற்களும் பொருட்பொலி வுடையனவாகவே யிருக்கும். அவற்றுள் ஒன்றேனும் பொருள் தாராது நிற்பதில்லை. ஆயின், செய்யுட்களில் வரும் அசைநிலை, இசைநிறை முதலாயவை தமக்கென ஒரு பொருளின்றி ஓசை நிறைக்கும் பொருட்டே வந்துள்ளன அல்லவோ எனின், ஆராய்ந்து பார்க்கின், அவையும் பொருள் தருவனவேயாகும். ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'தாம் சார்ந்த சொற்களின் பொருளை யுணர்த்தியும், அச்சொற்களை அசைத்தும் நிற்றலின், அசைநிலையும் பொருள்குறித்தனவேயாம். சொற்கள் ஓசை நிறைந்துநின்றே பொருளுணர்த்த வேண்டுதலின்

1. கன்னடத்தில், பேர்வாய் என்றே உளது.

இசைநிறையும் பொருளுணர்த்திற்றேயாம்' (சொல். பெயர். 1. உரை.) என்றாராயினும், அவை தமக்கெனச் சிறப்புப் பொருளுடையனவே யாம்.

அசைநிலைச்சொற்களாகக் கூறப்பட்டுள்ள சொற்கள், ஏனைய சொற்களைப்போலப் பண்டைக்காலத்தில், தமக்கெனச் சிறப்புப் பொருளுடையனவே என்பதும், அவற்றின் சிறப்புப்பொருள் அறியப்படாதொழிந்த காலத்தில், அவை அசைநிலைகள் எனக் கூறப்பட்டன என்பதும் மொழிநூல் வல்லார் கொள்கை. கண்டீர், காணும், என்ப, அன்றே முதலிய சொற்கள் சிறப்புப்பொருளுடையனவாகவும், அவற்றின்பொருள் சிறவாத இடத்தில், அவற்றை அசைநிலை எனக் கூறுதல் போலவே, மதி, ஒரும், வாழியர், மோ முதலிய சொற்களும் பொருள் சிறவாதவிடத்தில், அவற்றை அசைநிலை எனக் கூறலாயினர் என்பது உய்த்துணரத்தக்கது. இக்கூறியவற்றால், அசைநிலைச்சொற்களும் முற்காலத்தில் சிறப்புப் பொருளுடையனவாகவே இருந்தன என்பது துணியப்படும்.

தமிழ்மொழியில், அசைநிலைகளாகக் கொள்ளப்பட்டுள்ள சொற்களுட் சிலவற்றிற்கு, மலையாளம் முதலிய மொழிகளில் சிறப்புப்பொருள் உளது. தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலிய மொழிகள் மிகப் பழையகாலத்தில் ஒரே மொழியாக வழங்கி வந்தது என்பதும், பின்னரே அவை வெவ்வேறு மொழிகளாகப் பிரிவுற்றன என்பதும் ஆராய்ச்சியினால் அறுதியிடப்பட்டுள்ளன. ஆகலின், மலையாளம் முதலிய மொழிகளில் வழங்கும் இலக்கண அமைதிகளையும் சொற்பொருள்களையும் நாம் ஏற்றுக் கொள்ளுதல் முறையேயாகும்.

இங்கு, பரணர்பாட்டுக்களில் வந்துள்ள அசைநிலைச் சொற்களுள் சிலவற்றைக் குறித்து ஆராய்கின்றேன்:

மதி—பழைய நூல்களில் இச்சொல் வந்துள்ள பாட்டுக்களை நோக்கின், பலவிடங்களில் பொருட்பொலிவுள்ளதாகவே காண்கின்றது. பரணர் செய்யுளுள் இரண்டு பாட்டுக்களில், மதி என்னும் சொல் வந்துளது. அவை,

'எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே' (குறுந். 19)

'பாடி வந்திசிற் பெரும *
* * *

ஓடை நுதல ஒல்குத லறியாத்
துடிபடிக் குழவிய பிடியிடை மிடைந்த

வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே' (புறம். 369)

என்பன.

மதி என்னும் சொல் மலையாள மொழியில், போதும் என்னும் பொருளில் இருவழக்கிலும் வழங்குகின்றது. இப்பொருள், 'வேழ முகவை நல்கு மதி' என்னுமிடத்தில் அமையும் எனத் தோன்று கின்றது. அஃதாவது, 'வேழ முகவை நல்கு; அதுவே போதும்' என்பதாம்.

'வாஅப் பாணி வயங்குதொழிற் கலிமாத்
தாஅத் தாளிணை மெல்ல ஒதுங்க
இடிமறந் தேமதி வலவ குவிமுகை
வாழை வான்பூ வூழுறு புதிர்ந்த
ஒழிகுலை யன்ன திரிமருப் பேற்றொடு
கணைக்கா லம்பிணைக் காமர் புணர்நிலை
கடுமான் தேரொலி கேட்பின்
நடுநாட் கூட்டம் ஆகலும் உண்டே' (அகம். 134)

என்னும் சீத்தலைச்சாத்தனார் பாட்டிலும், மதி என்னும் சொற்கு போதும் என்னும் பொருள் அமைவுறுகின்றது.

எங்ஙனமெனின், 'ஏற்றொடு பிணைக்குண்டாகிய புணர்நிலையில் தேரொலி கேட்பின், கூட்டம் இல்லாதொழியும்; ஆகலின், கலிமா மெல்ல நடக்கும்படி, அதனை இடித்தலை மறந்து ஏவு; அது சாலும்' எனப் பொருள் தருதல் அறிக.

மதி என்னும் சொல், முன்னிலைக்கண்ணேயே அசைநிலையாக வரும் என்பது,

'மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயி னாறும் முன்னிலை யசைச்சொல்' (இடையி. 26)

என்னும் தொல்காப்பியத்தான் அறியப்படுதலானும், மதி என்பது முன்னின்றானை நோக்கியே கூறப்படுமாதலானும், அச்சொல்லிற்கு இன்றும் மலையாள மொழியில் வழங்குகின்ற பொருளே பண்டு தமிழ் மொழியிலும் வழங்கியது எனக் கருதுதல் அமையும்.

கோல் என்னும் சொல், ஐயப்பொருளில் வரும் என்பது தொல்காப்பியத்தால் அறியப்படும். இச்சொல், பரணர் பாட்டுக் களுள், அகம். 322-ஆம் பாட்டு ஒன்று தவிர, மற்றைப் பாட்டுக் களிலெல்லாம் ஐயப் பொருளில் வந்துளதாகும். இதனது தொன் னிலைமையை ஆராயின், இது, சோல் என்னும் வினைச்சொல்லின் பொருளுடையது எனத் தெரிகின்றது. குறுந்தொகை 89-ஆம் பாட்டில்,

'பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதின் மாக்கள் நுவறலும் நுவல்ப
அழிவ தெவன்கோல்இப் பேதை யூர்க்கே
*           *           *           இம்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே'

என்பதில் வந்துள்ள கொல் என்னும் சொல், தனது தொன்மைப் பொருளும் பொருந்துமாறு அமைந்துளது. 'தலைவனோடு யாதொரு தொடர்பும் இல்லாதவரும் வள்ளைப் பாட்டுப் பாடுவர். அங்கனமாக, இம் மெல்லியற் குறுமகள் பாடிக்கொண்டு குறின், இவ்வூர் வருந்துதல் எதற்கு, சோல்' என்பது பொருளாகும். இவ்வாறு சொல்லுதலை, வழக்கில் இன்றும் அறியலாம். ஆயினும், கொல் என்னும் சொல்லிற்குரிய இப்பொருள் ஈண்டைக்கு வேண்டாமையின், அஃது, ஐயம் அல்லது அசைநிலைப் பொருளில் வந்ததாகக் கொள்கின்றனர். காணும், கண்டீர், ஒரும் என்னும் சொற்கள், தம் பொருள் சிறவாதவிடத்து அசைநிலை எனக் கொள்ளப்படுதல் போலவே, கோல் என்பதும் தன்பொருள் சிறவாத விடத்து ஐயம் என்றும், அசைநிலை என்றும் கொள்ளப்படுகின்றது. ஆயினும், சோல் என்பதுவே இதன்பொருள் என்று கொள்ளுதல் பொருந்தும்.

'கற்றதனு லாய பயனென்கொல்' (குறள். 2)

என்னுமிடத்து, 'கொல் என்பது அசை நிலை' என்றாராயினும், 'கற்றதனல் பயன் என்ன, சோல்' என்னும் பொருள் அமைவுறுதல் அறிக. இவ்வாறே,

'யாங்கா குவள்கோல் தானே' (அகம். 192)
'யாதுகோல் மற்றவர் நிலையே' (அகம். 139)

என வரும் இடங்களிலும், கோல் என்னும் சொற்கு, சோல் என்னும் பொருள் அமைதியாதல் அறிக.

'புறவி னல்லல் சோல்லிய' (புறம். 39)
'பண்டச் சாகா டாழ்ச்சி சோல்லிய' (புறம். 90)
'படுகடுங் களிற்றின் வருத்தம் சோலிய' (அகம். 8)
'உண்ணுப் பிணவின் உயக்கஞ் சோலிய' (அகம். 336)

என்னும் அடிகளில், சோல் என்பது, கோல் என்னும் வினைச்சொல்லின் பொருளில் வருதல் போலவே, கோல் என்பது (இடைச்சொல் எனப்படுவது), சோல் என்னும் வினைச்சொல்லின் பொருளில் வருகின்றது எனக் கொள்ளுதல் பொருந்தும். அன்றியும், ககர சகரங்கள் வேறுபாடின்றி, கய் (செயல்)—சேய் என்றும், ஒக்கிய-ஒச்சிய என்றும் வருதலும் காண்க. தமிழில், சகர முதன் மொழிகள்,

கன்னட மொழியில், ககர முதன்மொழியனவாய் வழங்குதலும் ஈண்டைக்கு நோக்கத் தகும்.

சேவி—கிவி
சில—கேலவு
சிறிது—கிறிது

என்பன அறிக.

தில் என்னும் இடைச் சொல், விழைவு முதலிய மூன்று பொருளைத் தருவது என்பது,

'விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே' (இடையி. 5)

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தான் அறியப்படும். அவற்றுள், ஒழியிசைப் பொருளுக்கு உதாரணமாக,

'வருகதில் லம்மஎஞ் சேரி சேர' (அகம். 276)

என்னும் அடியைக் காட்டி, இதில், தில் என்பது 'வந்தக்கால் இன்ன தொன்று செய்வல்' என்னுஞ் சொல் ஒழிந்து நின்றமையான், ஒழியிசைக்கண் வந்தது' என்றனர் இளம்பூரணர் முதலியோர். ஆயினும், 'வந்தக்கால் இன்னதொன்று செய்வல்' என்னும் பொருளைத் தந்தது, வருக என்னும் சொல்லே யன்றி, தில் என்ப தன்று எனத் தோன்றுகின்றது. வழக்கினுள், 'அவன் வரட்டும்' என்று சொல்லுமிடத்து ஒலி வேறுபாட்டால், 'அவன் வந்தால் இன்னது செய்வல், அல்லது, இன்னது சொல்லுவல்' என்னும் பொருளை, அவ் வரட்டும் என்ற சொல்லே தருதல் ஈண்டு அறியத்தகும். இனி, 'வருக' என்னும் சொல்லே இப்பொருளைத் தந்ததாயின், தில் என்பதன் பொருள் யாது எனின், அதன் பொருள் சிறிது என்பதே எனத் தோன்றுகின்றது. என்னெனின், மலையாள மொழியில், தேல் என்னும் சொல், சிறிது என்னும் பொருளுடையது.

'தேல்லிதின் ஸ்பர்ஶம் இல்லாதெ' (பாஷாபூஷணம். 4.)

என்னுமிடத்தில், தேல் என்பது சிறிது என்னும் பொருளில் வந்துளது. தமிழில், தில் என வழங்கும் சொல்லே மலையாளத்தில் தேல் என வழங்குகின்றது. இகர எகரங்களும் உகர ஒகரங்களும் தடுமாறுதல் இயல்பேயன்றோ! சிறை என்பது தெலுங்கில், சேற என்றும், சில என்பது கன்னடத்தில், கேலவு என்றும் சிறிய என்பது மலையாளத்தில், சேறிய என்றும் திரிந்து வழங்குதல் ஈண்டு அறியத்தகும். இவற்றால், தில் என்னும் சொல், சிறிது என்னும் பொருளையுடையது என்பது விளக்கமுறும். ஆகவே,

'வருகதில் லம்மஎஞ் சேரி சேர' (அகம். 276)

என்னும் பாணர் செய்யுளில், 'வருகதில்' என்பது, 'சிறிது வருவானாக' என்னும் பொருளதே என்பது அறியப்படும்.

ஆயின், 'சிறிது வருக' என்னும் வழக்கு, செய்யுட்களில் உண்டோ எனின், உண்டு.

'சிறிதவ, ணுலமந்து வருகம்' (அகம். 106)

என்பன போல்வன பல காண்க.

இனி, தில் என்பது, சில விடங்களில் தன் பொருள் சிறவாது வந்துளதாயினும் அதன் தொல்பொருள், சிறிது என்பதுவே யாகும் எனக் கொள்ளுதல் தகும். இச்சொற்கு, தொல்காப்பியனார் கூறியுள்ள பொருள்கள், இது, சார்ந்து வந்துள்ள பிறசொற்களால் வருவனவே யாகும்.

ஆர்—

'காதலி யுழைய ளாகவும்
குணக்குத்தோன்றும் வெள்ளியின் எமக்குமார் வருமே'
(நற். 356)

என்னுமிடத்து, எமக்கும் என்பதனோடு சேர்ந்து வந்துள்ள ஆர் என்னும் சொல்லை இடைச்சொல் என்றும், [1]அசைநிலை என்றும் கூறுவர். தொல்காப்பியனாரும்,

'அசைநிலைக் கிளவி ஆகுவழி யறிதல்' (இடையி. 23)

என்னும் சூத்திரத்தான், 'ஆர் என்னும் இடைச்சொல் அசைநிலையாக வரும் இடனும் உண்டு; அதனை யறிந்துகொள்க' என்று கூறியுள்ளார். ஆயினும், அச்சொல்லின் உண்மைத் தன்மையை ஆராயுமிடத்து, அஃது அவர் என்னும் சொல்லின் திரிபே என்பது நன்கு விளங்கும். இயற்பெயர் முன்னர் வரும் ஆர் என்னும் சொல்லும், அவர் என்பதன் திரிபேயாம்.

சேந்தனார்(=சேந்தன்அவர்[2])
தந்தையார்(=தந்தைஅவர்[2])
நாயனார்(=நாயன்அவர்[2])

என்பன முதலியவற்றில், ஆர் என்று வந்திருப்பது, அவர் என்பதன் திரிபேயாதல் உய்த்துணர்ந்து கொள்க. இக்காலத்தில், இயற்பெயரோடும், பட்டப்பெயரோடும் அவர்கள் என்னும் சொல்லைச் சேர்த்து வழங்குதல் போலவே, முற்காலத்தில், இயற்பெயரோடு அவர் (ஆர்) என்பதனைச் சேர்த்து வழங்கினர் என்று உணர்தல் தகும்.

1. 'ஆர்—அசை நிலை' என்று நற்றிணையுரையாசிரியரும் எழுதியுள்ளார்.

2. தெலுங்கில், ஸ்ரீராமுலவாரு, அய்யவாரு, அம்மவாரு என்று வழங்குதல் ஈண்டைக்கு ஒப்பிடத்தகும். வாரு=அவர்.

இனி, கொண்மார், சென்மார் என்னுஞ் சொற்களில், மார் என்று பிரித்து,

'மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப' (வினையியல். 10)

என்று தொல்காப்பியனார் கூறினாராயினும், ஆண்டும், அவர் என்பதன் திரிபாகிய ஆர் என்பதுவே சேர்ந்துளது. எங்கனமெனின்,

கொண்மார்—கொள்+ம்+ஆர் (=கொள்ளுமவர்)
சென்மார்—செல்+ம்+ஆர் (=செல்லுமவர்)

என்று பிரிதல் காண்க. இச்சொற்களில் வந்துள்ள மகரமெய், பன்மையை யுணர்த்துதல் அறியத் தக்கது. ஆர் என்பது, அவர் என்னும் பெயர்ச்சொல் ஆதலினாலேயே, அது, வினைச்சொல்லைக் கொண்டு முடிதல் அமைதியாயிற்று என வுணர்க.

தொல்காப்பியனார் காலத்திலேயே, ஆர் என்னும் இச்சொல்லின் பொருள் கூறப்படாது போயினமையின், மேற்குறித்த பரணர் செய்யுளில் வந்துள்ள ஆர் என்னும் சொல், அசைநிலையாகவே அமைந்துளது. ஆயினும், அதன் தொன்னிலைமை அவர் என்றலே என்பது இதுகாறும் கூறியவாற்றால் அறியப்படுவதாகும்.

நின்மே (நற். 300), சென்மே (நற். 247; அகம். 376, 396) என்னும் சொற்களில் ஏகாரம் [1]அசைநிலை என்றும், மகரமெய் ஏகாரம் சேர்தற்கு வந்த மரபினது என்றுங் கூறுவர்.

'முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே' (தொல். எச்ச. 55)

என்னும் தொல்காப்பியத்தாலும் இஃது அறியப்படும். நில், செல் என்னும் சொற்களோடு ஏகாரம் ஊர்ந்து வரவேண்டுமாயின், பிறிதொரு மெய்யெழுத்து ஆண்டு வருதல் எற்றிற்கு? நில்லே, செல்லே என இயைந்து வருதல் இயலுமன்றே? உயிரெழுத்து ஊர்ந்து வருதற்கு இயைபில்லாதவழி யன்றே மெய்யெழுத்து இடையே வருதல் வேண்டும்?

'இன்னா துறைவி யரும்படர் களைமே' (புறம். 145)

என்னுமிடத்து, **களை** என்னும் சொல்லோடு ஏகாரம் சேர்ந்து, **களையே** என்று வருதல் அமையுமன்றே? ஈண்டும் மகரமெய் வருதல் எதற்கு? வேறு யாதேனும் ஒரு மெய்யெழுத்து வருதல் இன்றி, மகரமெய்யே வருதல் ஏன்? இவற்றை ஆராயுமிடத்து, மகரமெய்,

---

1. சேனாவரையர், 'புறத்தறவுப் (புறத்துறப்பு ?) பொருள்பட வந்தது' (எச்ச. 55. உரை.) என்பர்.

ஏகாரம் ஊர்ந்துவருதற்பொருட்டு இடையே வந்ததன்று எனல் போதரும். ஆயின், இம் மகரமெய் வந்தது எதன்பொருட்டோ எனின், கூறுவல்.

தன்மைக்கண், யான் என்னும் சொல்லில், னகரமெய் ஒருமையையும், யாம் என்னும் சொல்லில் மகரமெய் பன்மையையும் உணர்த்திவருதல் போலவே, பண்டைத்தமிழில் முன்னிலைக்கண்ணும், நீன் என்னும் சொல்லில் னகரமெய் ஒருமையையும், நீம் என்னும் சொல்லில் மகரமெய் பன்மையையும் உணர்த்திவந்தன என்றும், பண்டைத்தமிழ்மொழியைச் செந்தமிழ்ப் படுத்தின காலத்தில், நீன், நீம் என்பவற்றிலுள்ள னகர மகர மெய்கள் ஒழிக்கப்பட்டன என்றும் ஆராய்ச்சியால் அறியப்படுகின்றன. தமிழ்நாட்டின் சில பகுதிகளில் இன்றும், நீம் என்னும் சொல் வழங்குதல் ஈண்டைக்கு அறியத் தகும். நாம், யாம், தாம் என்னும் சொற்களோடு கள் விகுதி சேர்ந்து, நாங்கள், யாங்கள், தாங்கள் என ஆயினமைபோலவே, நீம் என்னும் சொல்லோடு கள் விகுதி சேர்ந்து நீங்கள் என்று வழங்குகின்றது. இவற்றானும், கன்னட மொழியில் முன்னிலைக்கண் நீன், நீம் என்பன உளவாதலானும் இவ்வுண்மை வலியுறும். வருது, சேறு, காண்கு முதலிய தன்மை ஒருமை வினைச் சொற்களோடு, மகரமேய் சேர்ந்து, வருதும், சேறும், காண்கும் எனத் தன்மைப்பன்மை வினைச்சொல் வழங்குதல் போலவே, களை, சேல், நில் என்னும் முன்னிலை ஒருமைவினைச்சொல்லோடு மகர மேய் சேர்ந்து, களைம், சேல்ம் (சேன்ம்), நில்ம் (நின்ம்) என்று முன்னிலைப் பன்மை வினைச்சொல்லாக வழங்கியது எனத் தெளியலாம். அச்சொற்கள், பாட்டுக்களில் ஈற்றில் வரின் அவற்றோடு [1]ஏகாரம் சேர்ந்து வருகின்றது ; இடையிலாயின், ஏகாரம் சேர்தல் இல்லை.

'இரும்பே ரொக்கலொடு தின்மேனத் தருதலின்'
(புறம். 150)

'உண்மேன இரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்'
(புறம். 178)

'நுண் ணூற் கலிங்கம் உடீஇ உண்மேன' (புறம். 392)

என்னும் இடங்களில், தின், உண் என்னும் சொற்களோடு மகர மெய் சேர்ந்து, ஏகாரமின்றியே தின்ம், உண்ம் என்று வந்திருத்தல் காண்க.

1. இவ்வேகாரம் ஈற்றசை யாதலின் பொருளுடையதன்று.

பண்டைத்தமிழில் முன்னிலை ஒருமைப்பெயராகிய நீன் என் பதன்கண்ணுள்ள னகர மெய்யை நீக்கி, நீ என்றும், பன்மைப் பெயராகிய நீம் என்பதன்கண்ணுள்ள மகர மெய்யை நீக்கி அதற்கு ஈடாக இர் என்பதைச் சேர்த்து, நீயிர் என்றும் செந்தமிழில் வழங்கினமையின், முன்னிலை வினைச்சொற்களில் வரும் னகர மகர மெய்கள், ஒருமை பன்மைகளை உணர்த்துபவை என்பது அறியப்படாதொழிந்தது. அதனால், களைமே, சென்மே, நின்மே என்னும் சொற்களில் வந்துள்ள மகர மெய், ஏகாரம் ஊர்ந்து வருதற்குரிய மரபினதாகிய மெய்யெழுத்து எனக் கூறப்பட்டது.

பரணர் காலத்திற்கு முன்பே, களைமே சென்மே முதலிய சொற்களில் வரும் மகரமெய், பன்மைப்பொருளை யுணர்த்துதல் ஒழிந்தமையின், அவர் பாட்டுக்களில் வந்துள்ள களைமே, சென்மே நின்மே என்னும் சொற்களிலும் மகரமெய் பன்மைப்பொருளை யுணர்த்தாது நின்றது எனக் கொள்க. ஆயினும், இத்தகைய சொற்களின் தொன்னிலைமை மேற்கூறியவாறேயாதல் உளங்கொளத்தகும்.

இகரம்—ஆசிரியர் தொல்காப்பியனார்,

‘அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
இ ஐ ஆய்என வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்’
(வினையி. 26)

என்னும் சூத்திரத்தான் முன்னிலை வினையில், இகர இறுதிநிலையும் வரும் என்று கூறினர். அவ்விகரத்தின் தன்மையை ஆராயின், அது, நீ என்னும் முன்னிலை ஒருமைப்பெயரைக் குறிப்பதுவே எனத் தோன்றும். செய்திர், வருதிர் என்னும் சொற்களில், இர் என்பது, நீயிர் என்னும் முன்னிலைப் பன்மைச்சொல்லின் உறுப்பே யாதல் போல, செய்தி, வருதி என்னும் சொற்களிலும் இ, என்பது நீ என்னும் முன்னிலை ஒருமைச்சொல்லின் உறுப்பேயாதல் அறிக. இவற்றால், இவ்வாறு இகரவீற்றனவாக வரும் சொற்களில், இகரம் முன்னிலை ஒருமையை யுணர்த்துவது என்பதும், து அல்லது த் ஆகிய இடைநிலையே காலங் காட்டுவது என்பதும் அறியப்படும்.

பரணர்பாட்டுக்களில் இத்தகைய இகரவீற்றுச் சொற்கள் இரண்டு வந்துள்ளன. அவை,

‘சேய ளரியோட் படர்தி’ (குறுந். 128)
‘தண்டுறை யூரன் தண்டாப் பரத்தைமை
புலவா யேன்றி தோழி’ (நற். 280)

என்னும் அடிகளில் வந்துள்ள படர்தி, என்றி—என்பன. படர்தி= படர்ந்தாய் நீ ; என்றி=என்றாய் நீ—என, அவை இறந்த காலத்தில் வந்துள்ளன. இவற்றை நிகழ்கால வினைச்சொற்களாகக் கொள்ளினும் அமையும். இச்சொற்களில் இகரத்தின் உண்மை நிலைமை இங்ஙனமாகலின்,

'வியங்கோள் இம்மார் எதிர்வும்' (நன். பதவியல். 18)

என்று, இகரம் எதிர்காலம் குறிப்பதாக நன்னூலார் கூறியது அமைதியாதல் இன்று. ஆகலின், உரையாளர் சங்கர நமச்சிவாயப் புலவர்,

'இகரவீறு தனித்தியலாமையின், யாதானும் ஓர் மெய்யினை ஊர்ந்துவரும் என்பதூஉம், அது (மெய்) காலங்காட்டாது என்பதூஉம், அது காலங்காட்டியதேல் இவ்வீறு காலங் காட்டாது என்பதூஉம் பெற்றாம்'

என்று எழுதி, சேறி என்பதில், இகரம் எதிர்காலங் காட்டுவதாக உதாரணம் காட்டினமையும், பின்னும்,

'ஈங்கே என்ற மிகையானே, "வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய், பொருதி புலம்புதி நீயும்" என இகரவீறு நிகழ் காலங் காட்டலும் கொள்க'

என்று எழுதினமையும் பொருந்தாதனவாகும். ஆகவே, வருந்துதி, பெயர்தி முதலிய சொற்களில், இகரம் நிகழ்காலம் உணர்த்தும் விகுதி என்றும், தகரமெய் எழுத்துப் பேறு என்றும் இக்காலத்தவர் கூறும் கூற்று, சிறிதும் அமையாது எனக் கொள்க. ஒரு சொல்லைப் பல வுறுப்புக்களாகப் பிரித்து, ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு பெயரிட்டு, 'ஆறினும் ஏற்பவை, முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்' (நன். பத. 6.) என்று முற்றும்மை கொடுத்து, ஆறு உறுப்புக்களால் எவ்வகைச் சொற்களையும் அமைத்துவிடலாம் என்ற நன்னூலாருக்கு, எழுத்துப்பேறு என்னும் ஏழாவதோருறுப்பும் உண்டென்றல் கருத்தாகாமையும் அறிக. இவற்றால், பரணர்செய்யுட்களில் வந்துள்ள படர்தி, என்றி என்னும் சொற்களிலும், த் எழுத்துப்பேறு என்னலாகாது என்றும், அது காலங்காட்டும் இடைநிலையே ஆகும் என்றும் கொள்க.

சின்—ஆசிரியர் தொல்காப்பியனார்,

'மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயி னாறும் முன்னிலை யசைச்சொல் (இடையியல். 26)

என்னும் சூத்திரத்தில், சின் என்பது முன்னிலைக்கண் வருவது என்று தம்மதம் கூறி,

'அவற்றுள்,
இகுமும் சின்னும் ஏனை யிடத்தொடுந்
தகுநிலை யுடைய என்மனார் புலவர்' (இடையியல். 27)

என்னும் சூத்திரத்தால், அச்சொல் (சின்), [1]தன்மைக்கண்ணும் படர்க்கைக்கண்ணும் வருதலைப் பிறர்மத மாகக் கூறினர். ஆகவே, சின் என்பது மூன்றிடத்தும் அசைச்சொல்லாக வரும் என்பது போதரும்.

சின் என்பது பரணர் பாட்டுக்களில், முன்னிலைக்கண் ஒரே பாட்டிலும் (அகம். 376), தன்மைக்கண் நான்கு பாட்டுக்களிலும் (அகம். 76, 135, புறம். 369, பதிற். 41), படர்க்கைக்கண் மூன்று பாட்டுக்களிலும் (நற். 300, அகம். 367, பதிற். 45) வந்துளது. ஆயினும் இச்சொல், ஆசிரியர்தொல்காப்பியனார் கொள்கையின்படி முன்னிலைக்கண் வருதலே சிறப்பு. என்னையெனின்,

படர்தி, காணுதி, அருளுதி என்பன போன்ற வினைச்சொற்களில், நீ என்னும் முன்னிலை ஒருமைப்பெயரி னுள்ள இகரம் சேர்ந்து நின்று, முன்னிலை ஒருமையைக் குறித்தல் போலவே, கண்டிசின், வந்திசின் என்பன போன்ற சொற்களில், நீன் என்னும் பழந்தமிழ் முன்னிலை ஒருமைப்பெயரி னுள்ள இன் என்பது சேர்ந்து, முன்னிலை ஒருமையைக் குறித்துநின்றது. நீன் என்னும் முன்னிலை ஒருமைப்பெயர் ஒழிவுற்ற காலத்தில், வினைச்சொல்லின் ஈற்றில் நின்ற இன் என்பது பொருள் சிறவாதாகவே, அஃது அசைச்சொல் என்று கூறப்பட்டது என அறிக. இவ்வாறு அசைச்சொல்லாயினமையின், அது (இன்), முன்னிலையிலேயே யன்றி ஏனை இரண்டிடத்தும் வழங்கப்பட்டது. ஆயின், ஆசிரியர் சின் என்று கூறினரே யன்றி இன் என்று கூறினரல்லரே எனின், இலக்கண நூலார், மொழி நூலின் வழியே சொற்களின் உண்மைத்தன்மையை ஆராய்ந்து கூறும் வழக்கினை யுடையரல்ல ராகலின் அங்கனம் கூறினர் எனக் கொள்க. சின் என்று பிரித்து, அதனை அசைநிலை என்று பொருளில்லாததாகத் தள்ளிவிடுதலினும், இன் என்று பிரித்து, அதனை, முன்னிலை ஒருமைப்பெயரின் (நீன்)

---

1. தெலுங்குமொழியில், செப்பிதின், வச்சிதின் எனத் தன்மை ஒருமையிலேயே வழங்குகின்றது. தமிழில் வழக்கின்கண், சின் என்பதன் ஈற்று னகரம்கெட்டு, வந்திசி என்பதுபோல, படர்க்கை ஒருமையில் வழங்குகின்றது.

உறுப்பு என்று, பொருட்பொலிவுடையதாகக் கொள்ளுதல் சிறந்த தாதல் அறிக.

இனி, இச்சொற்களில் இசின் எனப் பிரித்து, அதனை அசைநிலை என்பாரும் உளர். அதுவும் அமைதியின்மை யுணர்க.

மேற்கூறியவாறு, இன் என்னும் இறுதிநிலை நீன் என்னும் சொல்லின் உறுப்பு என அறியப்படாதொழிந்தமையின், அதனை அசைநிலை என்று கூறவே, அதன்மேலும் இறுதிநிலைகளாகியவற்றைச் (சர்வ நாமங்களைச்) சேர்த்து, ஒருசொல்லாக வழங்கலாயினர். பரணர்பாட்டுக்களில்,

சென்றிசினேன் (நற். 300)

புணர்ந்திசினோர்க்கே (அகம். 367)

மறுத்திசினோர் (பதிற். 45)

என வந்துள்ளன காண்க.

மோ

'அறஞ்செய் தீமோ' (புறம். 145) என்பதற்கு, அறத்தைச் செய்வாயாக என்று உரையாசிரியர் உரை மட்டுங் கூறினரே யன்றி, செய்தீமோ என்னும் சொற்கு இலக்கணக்குறிப்பு எழுதினரல்லர். இவ்வாறு வருஞ் சொற்களை நச்சினார்க்கினியர், வினைத்திரிசொல் என்று கூறிவிடுவர். ஆயினும், ஈண்டு இச்சொல்லின் நிலைமையை ஆராயின், இது வினைத்திரிசொல் அன்று என்பதும், இதில் மோ என்பது அசைநிலை யன்று என்பதும் புலனாகும்.

செய்தி, வருதி என்னும் வினைச்சொற்களில், இறுதிநிலையாகிய இகரம், நீ என்னும் முன்னிலை ஒருமைப்பெயரின் உறுப்பு என்றும், ஆதலின் அது முன்னிலை ஒருமையை உணர்த்துகின்றது என்றும் மேல் அறிந்தாமன்றே? அவ்வாறே, செய்தீமோ என்பதில் இறுதிநிலையாகிய ஈம் என்பது பழந்தமிழின் முன்னிலைப் பன்மைப் பெயராகிய நீம் என்பதன் உறுப்பேயாதலின், அது, முன்னிலைப் பன்மையை யுணர்த்துவதாகும். நீம் என்னும் முன்னிலைப் பன்மைப் பெயரின் வழக்கு ஒழியவே, வினைச்சொல்லின் இறுதியில் வரும் ஈம் என்பதன் தன்மையும் அறியப்படாது போயிற்று. ஆதலின், இவ்வாறு வரும் வினைச்சொல்லை, வினைத்திரிசொல் என்பாரும், அதில் மோ என்பதனை முன்னிலையசை என்பாரும் ஆயினர்.

நீம் என்னும் சொல், பரணர் காலத்திற்கு முன்பே ஒழிந்தமையின், பரணர் செய்யுளில் வந்துள்ள செய்தீமோ என்னும் சொல்லில் மேற்கூறிய பொருள் அமைவுறுதல் இல்லை. ஆயினும், இதன் உண்மைத்தன்மை இதுவே யாதல் உய்த்துணரத் தகும்.

சென்றீமோ, சினவாதீமோ என்பன போன்ற சொற்களினும் இவ்வாறே கொள்க.

இனி, பரணர்பாட்டுக்களில்—ஆல், மன், குரை, மாது, அந்தில் முதலிய இடைச்சொற்கள் வந்துள்ளன. இவற்றுட் பல சொற்களுக்கு இலக்கண நூல்களில் பொருளும் கூறப்பட்டுள்ளன. அசைநிலை என்று கூறப்படுகின்ற ஆல், குரை என்னும் சொற்களின் பொருள் இவையே என்று இப்பொழுது துணிந்து கூற முடிய வில்லை. பின்னர் விளங்குதல் கூடும்.

உந்தீற்றுச்சொல்

இனி, பரணர் செய்யுட்களில் வந்துள்ள உந்தீற்றுச் சொற்களை ஆராய்வான் எடுத்துக்கொள்கின்றேன். பரணர் செய்யுட்களுள் இரண்டு செய்யுட்களில் மட்டுமே உந்தீற்றுச் சொல் வந்துளது, அவற்றைக் காண்பதற்கு முன் முதற்கண், உந்தீற்றுச் சொல்லைக் குறித்து உரையாசிரியர்களும் நூலாசிரியர்களும் கூறியிருப்பவற்றை நோக்குவோம்.

புறநானூற்றில் உந்தீற்றுச் சொற்கள் வந்துள்ள பாட்டுக் களுள், 24, 137 ஆகிய இரண்டு பாட்டுக்களுக்கு மட்டுமே உரை யுளது. அவற்றுள் 24-ஆம் பாட்டின் உரையின் கீழ்,

> 'மேல் எண்ணப்பட்ட பெயரெச்சம் மூன்றும் (பாயுந்து, தூங்குந்து, தரூஉந்து) மிழலை என்னும் பெயர் கொண்டன; அவை உம் உந்தாய் நின்றன'

என்றும்,

137-ஆம் பாட்டின் உரையின் கீழ்,

> 'முன்னின்ற பெயரெச்சம் மூன்றும் (ஒலிக்குந்து, பூக்குந்து, படரும்) நாஞ்சில் என்னும் நிலப்பெயர் கொண்டன'

என்றும் உரையாசிரியர் இலக்கணக் குறிப்பு எழுதியுள்ளார். இவற்றால், உந்தீற்றுச் சொல், பெயரெச்சச் சொல்லே என்பது அவர் கருத்தாதல் பெறுதும்.

நன்னூலாசிரியர்,

> 'செய்யுமென் எச்சவீற் றுயிர்மெய் சேறலும்
> செய்யுளுள் உம்உந் தாகலும் முற்றேல்
> உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.'
>
> (நன். வினையியல். 22)

என்று கூறியிருத்தலின், செய்யும் என்னும் பெயரெச்சத்தின் உம் என்பதுவே உந்து எனத் திரிந்தது என்பது தெளிவாகும். ஆகவே,

நன்னூலாரும் புறநானூற்றின் உரையாசிரியரும் இத்திறத்தில் ஒரே கொள்கையினர் என்பது போதரும். இனி, ஆசிரியர் தொல்காப்பியனார், இச்சொல்லைக் குறித்துக் கூறியிருத்தலை நோக்குவோம்: அவர்,

'உம்உந் தாகும் இடனுமா ருண்டே' (இடையியல். 44)

என்று மட்டுமே கூறியுள்ளார். அதனால், உந்தாகத் திரிவது செய்யும் என்னும் பெயரெச்சத்தின் உம் என்பதுவா, செய்யும் என்னும் வினைமுற்றின் உம் என்பதுவா விளங்கவில்லை. ஆயினும், சேனாவரையர்,

'இடனுமா ருண்டே என்றது, இத்திரிபு, பெயரேச்சத்திற் கீறுயவழி என்பது கருதிப் போலும்!'

என்று உரைகூறியிருத்தலானும், நச்சினார்க்கினியர்,

'இடனுமா ருண்டே என்றதனான், இத்திரிபு, பெயரேச்சத்திற்கே கொள்க'

என்று எழுதியிருத்தலானும், செய்யும் என்னும் பெயரெச்சத்தின் உம் என்பதுவே உந்து எனத் திரிந்துநிற்கும் என்பது புலனாகும். நிற்க.

'புறநானூற்றின் பழைமை' என்னும் நூலின் ஆசிரியர், உந்தீற்றுச்சொல், வினைமுற்றுச் சொல்லே என்றும், மலையாள மொழியில் நிகழ்கால வினைமுற்றாக வழங்கும் செய்யுந்நு என்னுஞ் சொல், செய்யுந்து என்னும் சொல்லின் திரிபேயாகலின், செய்யுந்து என்னும் சொல், மலையாளமொழியிற் போலவே தமிழிலும் நிகழ்கால வினைமுற்றாக முற்காலத்தில் வழங்கிவந்தது என்றும், தொல்காப்பியனார்காலத்தில் அவ்வழக்கு வீழ்ந்தமையின், அவர், அதன் உண்மைத்தன்மையை அறியாராய், பெயரெச்சமே உந்தீறாகத் திரிந்தது என்று கருதி, 'உம் உந்தாகும்' என்று விதி கூறினார் என்றும், புறநானூற்றுப் பாட்டுக்களில் உந்தீற்றுச் சொல் நிகழ்கால வினைமுற்றாகவே வந்துளது என்றும், ஆதலின், அச்சொல்லை அவ்வாறு வழங்கிய பரணர், கோவூர்கிழார் முதலியோர் தொல்காப்பியனார் காலத்திற்கு முற்பட்ட புலவர் என்றும் எழுதியுள்ளார்.

இனி, இவ் விருதிறத்தவர் கூற்றுக்களையும், உந்தீற்றுச் சொல்லின் உண்மைத்தன்மையையும் ஆராய்தற்கு முன், புறநானூற்றுள் உந்தீற்றுச் சொற்கள் வந்துள்ள பாட்டுக்களெல்லாவற்றையும் நோக்குதல் இன்றியமையாததாகலின், அவற்றை ஈண்டுக் குறிக்கின்றேன்:

புறநானூற்றுள் உந்தீற்றுச் சொற்கள் வந்துள்ள பாட்டுக்கள் பத்து[1]; அவை— 24, 137, 339, 343, 352, 380, 384, 386, 395, 396 ஆகியவை. அவற்றுள்,

| | | | | |
|---|---|---|---|---|
| 24-ஆம் பாட்டில் | உந்தீற்றுச் சொல் | | 3 | முறையும், |
| 137- | ,, | ,, | 2 | ,, |
| 339- | ,, | ,, | 3 | ,, |
| 343- | ,, | ,, | 3 | ,, |
| 352- | ,, | ,, | 2 | ,, |
| 380- | ,, | ,, | 2 | ,, |
| [2]384- | ,, | ,, | 3 | ,, |
| 386- | ,, | ,, | 2 | ,, |
| 395- | ,, | ,, | 3 | ,, |
| 396- | ,, | ,, | 4 | முறையும், |

வந்துள்ளன. இவற்றுள்ளும், 339, 352, 380, 384, 395, இப்பாட்டுக்களில், சில அடிகள் இறந்துபட்டுள்ளன. அவையும் இருக்குமேல், உந்தீற்றுச் சொல் பின்னும் சில வந்திருத்தலும் கூடும்.

இப்பாட்டுக்களில், உந்தீற்றுச் சொற்கள் பலமுறை அடுக்கி வந்து, ஒரு நிலப்பெயரோடு முடிந்துள்ளன. எங்கனம் எனின்,

| | | | |
|---|---|---|---|
| 24-ஆம் பாட்டில், | | எவ்வி மிழலை | என்றும், |
| 137 | ,, | நாஞ்சிற் பொருநன் | ,, |
| 343 | ,, | குட்டுவன் முசிறி | ,, |
| 352 | ,, | தித்தன் உறந்தை | ,, |
| 380 | ,, | நாஞ்சிற் பொருநன் | ,, |
| 386 | ,, | அன்ன நன்னாட்டுப் பொருநம் | ,, |
| 395 | ,, | வேண்மான் பிடவூர் | ,, |
| 396 | ,, | வாட்டாற் றெழினியாதன் | என்றும், |

அவ் வுந்தீற்றுச் சொற்கள் [3]நிலப்பெயர் கொண்டு முடிந்துள்ளன காண்க. இவற்றால், உந்தீற்றுச் சொல், யாண்டும் பல முறை அடுக்

1. புறம். 400-ஆம் பாட்டில், 'நாரரி நறவி னுண்மகிழ் தூங்குந்து' என உந்தீற்றுச் சொல் காணப்படினும், 'நாரரித்த நறவமகிழ்ந்து' என்னும் பாட பேதமே அமைதியதாகத் தோன்றுதலின், அப்பாட்டு ஈண்டுச் சேர்த்தெண்ணப்படவில்லை. 'நறவுமகிழ்ந்து' (புற. 396) என வந்துளது காண்க.

2. இப்பாட்டின் 3-ஆம் அடியில், 'பூவருந்தும்' என்று காணப்படுதல் தவறு; 'பூவாருந்து' என்றிருத்தல் வேண்டும். 395-ஆம் பாட்டில், 'அரியலாருந்து' என வந்திருத்தல் காண்க.

3. 339, 384-ஆம் பாட்டுக்களில், நிலப்பெயர் வரவேண்டிய இடத்தில் அடிகள் இறந்து பட்டனவாதலின், அப்பெயர்கள் அறிதற்கு இயலவில்லை.

கியே வரும் என்பதும், அவ்வாறு அடுக்கி வந்து நிலப்பெயரொன் றனைக் கொள்ளும் என்பதும் நன்கு புலனாகும். ஆயின், 24, 343, 352, 395 ஆகிய இப்பாட்டுக்களில், உந்தீற்றுச் சொற்கள், தலைவர் பெயர்களைக் கொண்டு முடிந்துள்ளனவால் எனின், ஆண்டும், உந்தீற்றுச் சொற்கள், எவ்வி, குட்டுவன், தித்தன், வேண்மான் என்னும் தலைவர் பெயர்களோடு முடியாமையும், மிழலை, முசிறி, உறந்தை, பிடவூர் என்னும் இடப்பெயர்களையே கொண்டு முடிதலை யும் அப்பாட்டுக்களின் பொருளியைபு நோக்கி அறிக.

மேற் குறித்த புறப்பாட்டுக்களெல்லாவற்றினும், உந்தீற்றுச் சொல் பலமுறை அடுக்கி வந்திருத்தலை நோக்கின், அது, வினைமுற் றும் அன்று, பெயரெச்சமும் அன்று என்பது புலனாகும். என்னை யெனின், அச்சொல், ஒருமுறை வருத லின்றி, யாண்டும், பல முறை அடுக்கி வருதலையே நியதியாகக் கொண்டிருத்தலின் என்க. வினை முற்றாயிருப்பினும், பெயரெச்சமாயிருப்பினும், அவை, யாண்டும் பல முறை அடுக்கியே வருதல் இல்லை. அன்றியும், உந்தீற்றுச் சொல், வினைமுற்று யிருக்குமாயின், ஆசிரியர்தொல்காப்பியனார், வினையியலுள் வினைமுற்றுக்களைக் கூறுமிடத்து அதனைக் கூறியிருப் பர்; செய்யும் என்னும் பெயரெச்சமாயிருக்குமாயின், அப்பெய ரெச்சத்திற்குச் சிறப்பிலக்கணம் கூறுமிடத்துக் கூறியிருப்பர். அவ்வாறு கூறாமையின், அவர், இவ் வுந்தீற்றுச் சொல்லை வினை முற்று என்றாவது, பெயரெச்சம் என்றாவது கருதினாரல்லர் என்பது தெளிவாகும்.

நன்னூலார்,

> 'செய்யுமென் எச்சவீற் றுயிர்மேய் சேறலும்
> செய்யுளுள் உம் உந் தாகலும்' (வினை. 22)

என்று, செய்யும் என் வாய்பாட்டுப் பெயரெச்சத்திற்குச் சிறப் பிலக்கணம் இரண்டு கூறினர். ஆசிரியர் தொல்காப்பியனார், செய்யும் என்னும் பெயரெச்சத்தின் உம்மே உந்தாகின்றது எனக் கருதி யிருப்பரேல், செய்யும் என்னும் பெயரெச்சத்திற்கு,

> 'அவற்றுள்
> செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
> மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை யுகரம்
> அவ்விட னறிதல் என்மனார் புலவர்' (வினை. 41)

என்று சிறப்புவிதி கூறிய விடத்து, 'உம் உந்தாகும்' என்னும் சூத் திரத்தைக் கூறுவர். அங்கனம் கூறாமையின், அவர், இச்சொல்லைப் பெயரெச்சம் எனக் கருதினாரல்லர். இவ்வாறே,

'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னுங் கிளவியொடு கொள்ளா' (வினை. 30)

என்று, செய்யும் என்னும் முற்றுவினைக்குச் சிறப்பிலக்கணம் கூறிய விடத்து, 'உம் உந் தாகும்' என்னும் சூத்திரத்தை நிறுத்தாமையின், அதனை வினைமுற்று என்றும் அவர் கருதினரல்லர் என்பது துணிபு.

ஆயின், தொல்காப்பியனர் கருத்துத்தான் யாதோ எனின், காலமொடு வரும் உம்மையிடைச்சொல், எண்ணுப்பொருளில் வரும்வழி உந்து என்றாகும் என்பதே அவர் கருத்தாதல் உய்த்துணரத் தகும். அதுபற்றியன்றே ஆசிரியர், 'உம் உந் தாகும்' என்னுஞ் சூத்திரத்தை, இடையியலில், எண்ணுப்பொருளில் வருஞ் சொற்களைக் கூறும்வழி, எண்ணும்மைக்குச் சிறப்பிலக்கணம் கூறுமிடத்து நிறுத்துவாராயினர். இடையியலில், 39-ஆம் சூத்திரம் முதல் 46-ஆம் சூத்திரம்வரை எண்ணுப் பொருளில் வருஞ் சொற்களைக் குறித்து இலக்கணங் கூறியிருத்தலும், அவற்றினிடையே,

'உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்' (இடை. 43)

என, எண்ணும்மைக்குச் சிறப்பிலக்கணம் கூறி, அதனை யடுத்து,

'உம் உந் தாகும் இடனுமா ருண்டே' (இடை. 44)

எனக் கூறியிருத்தலும் காண்க. இவற்றால், தொல்காப்பியனர் கருத்து, யான் மேற்கூறியவாறு எண்ணுப்பொருளில் வரும்வழியே உம், உந்து ஆகும் என்பது எனத் தெளியப்படும். அன்றியும்,

இளம்பூரண அடிகள், 'உம் உந் தாகும்' என்னும் சூத்திரவுரையில், எட்டு வகைப்பட்ட உம்மையுள் ஓர் உம்மை எனப்படாது, வினைசெய் மருங்கிற் காலமோடு வந்தது' என்று எழுதியிருத்தல் நோக்கத்தக்கது.

சேனாவரையரும் நச்சினார்க்கினியரும், 'வினைசெயன் மருங்கிற் காலமோடு வருவனவற்றுள் உம்மீறு உந்தாய்த் திரிதலும் உடைத்து' என்றே பொருள் கூறியுள்ளனர்.

தெய்வச்சிலையார், 'எண்ணும்மைக்கு உரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று' என்று கருத்துக் கூறி, 'உம் என்பது, உந்து என விரிந்து நிற்கவும் பெறும் இடமும் உண்டு' என்று பொருளுரைத்து,

"நெல்லரியும் இருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையிற்
றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்டிமில் வன்பரதவர்

வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
தூவற் கலித்த தேம்பாய் புன்னை
மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்
எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து
வண்டுபட மலர்ந்த தண்ணறுங் கானல்
முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்
இரும்பனையின் குரும்பை நீரும்
பூங்கரும்பின் தீஞ்சாறும்
ஓங்குமணற் குவவுத்தாழைத்
தீநீரோ டுடன்விராஅய்
முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயுந்
தாங்கா வுறையுள் நல்லூர் கெழீஇய''

'என்றவழி, உம் உந்தாயிற்று. எண்ணும்மை அதிகாரப்பட்டு வருதலான், இவ்வாறு வருவது, ஓர் பொருண்மேல் உம்மை அடுக்கிய வழி என்று கொள்க. ஈண்டு, எண்ணும்மை யாங்கது எனின், ஒரு பொருள்மேல் பலவினைச்சொல் வருதலின், அவை, ஒருமுகத்தான் எண்ணப்பட்டவாம்' என்று உதாரணமும் காட்டி விளக்கமும் எழுதியுள்ளார்.

இவற்றால், வினைசெய் மருங்கிற் காலமொடு வரும் உம்மையே எண்ணுப்பொருளில் வரும்வழி உந்து என்றாகும் என்பது தெளிவாகும். இதனானன்றே, உந்தீற்றுச் சொற்கள், யாண்டும் பல முறை அடுக்கி வருவனவாயின. ஆயின், உம் என்பது உந்து என்று ஆயினமை எவ்வாறு எனின், கூறுவேன்:

பெயர்ச்சொற்களோடு சுட்டுப்பெயர்களைச் சேர்த்து ஒரு சொற்றன்மையாக வழங்குதல் உண்டு ;

| | | | |
|---|---|---|---|
| நீழலவர் | (குறள். 1034) | — | நீழல்+அவர் |
| மாலையவர் | (குறள். 1035) | — | மாலை+அவர் |
| வன்கணவர் | (குறள். 228) | — | வன்கண்+அவர் |
| காதலவர் | (குறள். 1127) | — | காதல்+அவர் |

என்பன காண்க.

இச்சொற்களில், அகரச்சுட்டு இன்றி, அர் விகுதி மட்டும் சேர்ந்து வருதலும் உண்டு. நீழலர், மாலையர், வன்கணர், காதலர் என வரும். இவ்வாறே,

| | | | |
|---|---|---|---|
| கையது | (புறம். 69) | — | கைத்து |
| திரையது | (குறள். 128) | — | திரைத்து |
| மேலது | (புறம். 6) | — | மேற்று |
| நீரது | (குறள். 221) | — | நீர்த்து |

வாயது — (நால்) வாய்த்து[1]
கவுளது — (இரு) கவுட்டு
கண்ணது — (முக்) கட்டு

என்னுஞ் சொற்களில், கை, திரை முதலிய சொற்களோடு அது என்னும் சுட்டுப் பெயர் சேர்ந்தும், அகரமின்றி, து என்னும் விகுதி மட்டும் சேர்ந்தும் வந்துள்ளன காண்க.

இனி, வினைச்சொற்களிலும் இவ்வாறு வருதல் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| ததும்பினது | (ததும்பு + இன் + அது) | — ததும்பின்று | (ததும்பு + இன் + து) |
| போயினது | (போ + இன் + அது) | — போயின்று | (போ + இன் + து) |
| கூவினது | (கூ + இன் + அது) | — கூயின்று | (கூ + இன் + து) |
| அனையது | (அனை + அது) | — அனைத்து | (அனை + து) |
| உடையது | (உடை + அது) | — உடைத்து | (உடை + து) |

என்பன காண்க.

இவ்வாறே, செய்யும் என்னும் வினைமுற்றோடும் அகரச் சுட்டுப்பெயர் சேர்ந்தும், (அதன் திரிபாகிய) விகுதிமட்டும் சேர்ந்தும் வருதல் உண்டு.

என்னுமவர் (குறள். 653)— என்னுமோர் (என்னும் + [2]ஆர்); என்மர் (என்ம் + அர்)
அறியுமவன் — அறியுமோன் (அறியும் + ஆன்) (புறம். 137)
தெரியுமவர் — தெரியுமோர் (தெரியும் + ஆர்) (தொல். பொருளிய. 35)
[3]இருக்குமது — இருக்குந்து (இருக்கும் + து)
கூறுமது — கூறுந்து (கூறும் + து)

என்பன காண்க.

இங்குக் காட்டிய உதாரணங்களால், செய்யும் என்னும் முற்றுச்சொல்லோடு துவ்விகுதிமட்டும் கூடி வந்த சொல்லே செய்யுந்து என்றாயிற்று என்பது போதரும்.

---

1. ‘இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தேன் உள்ளம் உருகவிட்டு நின்ற ஒளி’. உரிச்சொல்நிகண்டு.

2. ‘பாலறி மரபின்......ஆ ஓ வாகும்’ (தொல். வினை. 14) என்பதனால், ஆர் முதலியன ஓர் முதலிய ஆயின.

3. ‘இருக்குமதோ யார்மனத்தும் இருக்குஞ் சோதி’ (வில்லி. கிருட். 3.) என்பது காண்க.

இனி, பரணர் பாட்டுக்களில் வந்துள்ள உம்மீற்றுச் சொற்களின் பொருளை ஈண்டு ஆராய்வேன்:

புறம். 343-ஆம் பாட்டில்,

'மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குறுந்து
கலந்தந்த பொற்பரிசங்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழங்குகடல் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையலள் இவளெனத்
தந்தையும் கொடாஅ னாயின்'

என்னும் பகுதியில், உந்தீற்றுச் சொல் மூன்று முறை அடுக்கி நின்று, முசிறி என்னும் நிலப்பெயர் கொண்டது. ஈண்டு, 'மனை மறுக்குமது, கரை கலக்குறுமது, கரை சேர்க்குமது (ஆகிய) முசிறி என, உந்தீற்றுச் சொற்கள் முசிறியை விசேடித்து நின்றமை அறிக. இங்கு, இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏறி நின்றது.

இப்பாட்டில், மறுக்குந்து, கலக்குறுந்து, சேர்க்குந்து என்பவற்றை முற்றுவினைகளாகக் கொண்டு, தனித்தனியே முடித்தல் அமைதியாகாது. என்னெனின், முன்னர்,

'முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையலள் இவள்'

என்று வருதலின், மேல்நின்ற அடிகளெல்லாம் முசிறியை விசேடித்தல் வேண்டும் என்க. இங்ஙனம் அன்றாயின், 'முசிறி யன்ன நலஞ்சால் விழுப்பொருள்' என்றது சிறவாமை யறிக.

இனி 352-ஆம் பாட்டினும்,

'தேஎங் கொண்ட வெண்மண் டையான்
வீ . . . . . . . . . கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதன்முல்லைப் பூப்பறிக்குந்து

ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புறவாயாற் புனல்வள......
............நொடை நறவின்
மாவண் டித்தன் வெண்ணெல் வேலி
உறந்தை யன்ன உரைசால் நன்கலம்
கொடுப்பவுங் கொளாஅன்......'

என்னும் பகுதியில், கறக்குந்து, பறிக்குந்து என்னும் உந்தீற்றுச் சொற்கள், உறந்தையைச் சிறப்பித்து நின்றமை அறிக. என்னை யெனின், 'வெண்மண்டையிற் (பால்) கறக்குமது, பசுங்குடையிற் பூப்பறிக்குமது,......(ஆகிய) உறந்தை' என அமைதல் காண்க. ஈண்டும், இவ் வுந்தீற்றுச் சொற்கள், உறந்தையை விசேடியாமல் தனித்தனியே முடிந்தன எனின், முன்னர்,

'வெண்ணெல் வேலி
உறந்தை யன்ன உரைசால் நன்கலம்
கோடுப்பவும் கொளாஅன்'

என வருதல் சிறவாது என்க. ஆகலின், மேல்நின்ற அடிகளெல்லாம் உறந்தையையே சிறப்பித்து வருதல் வேண்டும் என அறியத் தகும். ஆயின், கோவூர்கிழார் பாடிய புறம். 386-ஆம் பாட்டில்,

'வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் [1]பூத்ததும்பின்று
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலே, கால்தந்த கலனெண்ணுவோர்
கானற் புன்னைச் சினைநிலைக்குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்க னன்னாட் டுமெணெலிக்குந்து'

என்று, உந்தீற்றுச் சொற்கள் நிகழ்கால வினைமுற்றாய், தனித் தனியே முடிந்தனவால் எனின், ஆண்டும், அவற்றை யடுத்து,

'அன்ன நன்னாட்டுப் பொருநம் யாமே'

என வருதலின், மேலைய அடிகளெல்லாம், அந் நன்னாட்டையே சிறப்பித்து நிற்றல் அமைதி யாதல் அறிக. அன்றியும், ஓரே தொடர்

---

1. 'பூத்ததும்பின்று' என்னும் பாடம், அடியிற் கொடுத்துள்ள 'பூத்ததுமபினனு' என்னும் பாடபேதத்தால் ஈண்டுக் கொள்ளப்பட்டது. முன்னர், குறும்பின்று, நிலைக்குந்து, ஒலிக்குந்து என வருதலின், 'ததும் பின்று' என்னும் பாடம் அமைதியாகுமே யன்றி, 'ததும்பின' எனப் பதிப் பிக்கப்பட்டுள்ள பாடம் அமைதியாகாது.

பினவாய் வரும் வாக்கியங்களெல்லாம் பொருளமைதியில் ஓரே தன்மையனவாய் அமைந்திருத்தலே முறையாகும். ஈண்டு, நிலைக் குந்து, ஒலிக்குந்து என்பவற்றை நிகழ்கால வினைமுற்றாகக் கொள்ளின், அவற்றின் மேல் நின்ற, ததும்பின்று, குறும்பின்று என்பவற்றையும் நிகழ்கால வினைமுற்று எனக் கொள்ளுதலே முறை. அவை, நிகழ்கால வினைமுற்றல்ல என்பது வெளிப்படை. ஆகலின், ஈண்டும், 'வயல் பூத் ததும்பினதுவும், புறவு குறும்பினதுவும், கடல் கலனென்னுவோர் நிலைக்குமதுவும், கழி உமண் ஒலிக்குமதுவும் (ஆகிய) அன்ன நன்னாடு' என்று கொள்ளுதலே முறைமையாகும் எனத் தோன்றுகின்றது.

இதுகாறும் கூறியவற்றால், உந்தீற்றுச் சொற்கள், வினை செயன் மருங்கிற் காலமொடு வரும் உம் என்னும் சொல்லோடு, 'து' என்னும் ஒன்றன்பால் விகுதி சேர்ந்து அமைந்த வினைப் பெயரே என்பதும், அஃது யாண்டும் பலமுறை அடுக்கி எண்ணியே வருகின்றது என்பதும், ஆகலின், அது, நிகழ்கால வினைமுற்று அன்று என்பதும் தெளிவாகும். நிற்க.

'புறநானூற்றின் பழைமை' என்னும் நூலின் ஆசிரியர், 'மலையாள மொழியில், செய்யுந்து என்பது, நிகழ்கால முற்றுவினையாக வழங்குதலானும், அது, செய்யுந்து என்னும் சொல்லின் திரிபு என்றல் அமைதியாதலானும், தமிழ்மொழியினும், செய்யுந்து என்பது நிகழ்கால வினைமுற்றாகவே யிருந்தது' என்றாரால் எனின், மலையாள மொழியில் வழங்குஞ் செய்யுந்து என்னும் முற்றுவினையின் இயல்பினை ஈண்டுக் கூறுகின்றேன்.

தமிழ்மொழியில் நிகழ்கால வினைமுற்றுச் சொல்லில், விகுதி யொழிந்த சொல்லே, மலையாள மொழியில் நிகழ்கால வினை முற்றாக அமைந்துளது என்பது, கிரால், குண்டர்ட்டு, கால்ட்வெல் முதலிய மொழிநூலாராய்ச்சியாளர் துணிபு. அதுவே, 'கேரள பாணினீய' ஆசிரியருக்கும் கருத்தாதல், 'தமிழில், இன்றுவின் தோற்றம் எதுவோ அதுவே, மலையாளத்தில் உந்துவிற்கும் என்பது முடிபு'[1] என்று அவர் எழுதியிருத்தலான் அறியப்படும். ஆகலின், முதற்கண், தமிழின் நிகழ்கால வினைமுற்றின் இயல்பினை ஆராய்தல் இன்றியமையாததாகும்.

தமிழில், இப்போது வழங்கும் நிகழ்கால முற்றுவினை, பண்டைக்காலத்தில் வழங்கியது அன்று. செய்கின்றான், செய்கின்றாய், செய்கின்றேன் என்னும் முற்றுவினைகள், பண்டைத் தமிழ்ச்செய்யுட்களில் யாண்டும் வந்தில.

1. கேரளபாணினீயம். பக்கம். 230.

தமிழ்மொழியில் இறந்தகாலத்தைக் குறித்தற்கு, இ, அல்லது, துவ்வையும், எதிர்காலத்தைக் குறித்தற்கு, கு, அல்லது பவ்வையும் வழங்குவர். காலத்தைக் குறிக்கும் எழுத்துக்கள் இவை என்று தொல்காப்பியனர் கூறவில்லை. ஆயினும், கு- எதிர்காலத்தைக் குறிக்கும் என்பது,

'கடதற என்னும் . . . சொல்லே' (தொல். வினை. 6)

என்னுஞ் சூத்திரத்தான் உணரப்படும்.

செய்கு—(செய்வேன்) என்னுஞ் சொல், இன்றும் தமிழ்ச் செய்யுட்களில் வழங்கி வருகின்றது. இச்சொல்லே, ஏன் விகுதி பெற்று, செய்கேன்(=செய்வேன்) என்றும் வழங்குவதாயிற்று. செய்கு(செய்வேன்) என்னும் எதிர்காலச் சொல்லே, நொடிப்பொழுதின் பின்னர்ச் செய்யும் வினையைக் குறித்தற்கும், பல யாண்டுகளின் பின்னர்ச் செய்யும் வினையைக் குறித்தற்கும் வழங்குதல் கூடும். ஆதலின், 'இப்பொழுது செய்வேன்' என்று குறித்தற்கு, செய்கு என்னும் எதிர்காலச் சொல்லோடு, இன்று என்னுஞ் சொல்லைச் சேர்த்து, அதனேடு, ஏன், ஆன் முதலிய விகுதிகளைக் கூட்டி, செய்கின்றேன், செய்கின்ருன் என்பவை முதலிய நிகழ்கால வினைமுற்றுக்களை அமைத்திருக்கலாம்.[1] எதிர்காலவினை, இறந்தகாலவினை யாகுங் காலமே நிகழ்காலமாதல் அறியத்தக்கது. இந் நிகழ்காலவினை இவ்வாறு அமைக்கப்பட்டதனுலேயே வழக்கில் வழங்குதல் இலதாயிற்று. வடமொழியில், தான் உரையாடுங் காலம்முதல் அடுத்து வரும் நடுயாமமளவும் உள்ள எதிர்காலத்து வினையைக் குறித்தற்கும், அதற்குமேல் உள்ள எதிர்காலத்து வினையைக் குறித்தற்கும் வெவ்வேருக வினைச்சொற்களை அமைத்து வழங்குதலும் ஈண்டைக்கு அறியத்தகும்.

இக்கூறியவற்ருல், செய்கின்றேன் (செய்+கு+இன்று+ ஏன்) என்பது, யான் இப்பொழுது செய்வேன் என்னும் பொருளதாகி,

1. கன்னட மொழியில், இறந்த காலத்தைக் குறிக்கும் தவ்வோடு, எதிர்காலத்தைக் குறிக்கும் பவ்வைச் சேர்த்து, நிகழ்காலவினை அமைந்துள்ளது அறிக. போதம்—இறந்த காலம்; போபம்—எதிர் காலம்; போதபம்—நிகழ் காலம். தெலுங்குமொழியில், (எதிர்காலத்தைக் குறிக்குங் குவ்வின் திரிபாகிய) சுவ்வோடு, உன்ன(உள்ள) என்பதைச் சேர்த்து, சேயுசுன்ன என்பதுபோல நிகழ்காலவினை அமைக்கப்பட்டுளது. இவற்றை நோக்குமிடத்து, தமிழ்மொழியிலும், எதிர்காலங் குறிக்குங் குவ்வோடு இறந்த காலங் குறிக்கும் இன், து என்னும் இரண்டனையுஞ் சேர்த்து, நிகழ்கால வினைமுற்றை யமைத்து வழங்கி யிருக்கலாமோ எனவும் தோன்றுகின்றது. இருக்குது, போகுது என்பனபோல்பவற்றில், குவ்வும் துவ்வுமே சேர்ந்துள்ளன. இருக்கு என்பது போல்வனவே வழக்கிற் பயில்கின்றன.

செய்கின்றேன் என நிகழ்காலவினைமுற்றாய் வழங்குகின்றது என்பது தெளிவாகும். க்- எதிர்காலத்தைக் குறிப்பது என்றும், அதனோடு இன்று என்னுஞ் சொல் சேர்ந்து, கின்று என்று ஆயிற்று என்றும், கிரால், குண்டர்ட், கால்ட்வெல் முதலாய ஆராய்ச்சியாளரும் கூறியுள்ளனர்.[1] இவற்றால், தமிழில், செய்கின்று, நடக்கின்று, இருக்கின்று என வழங்கும் சொற்கள், மலையாளத்தில், செய்யுந்நு, நடக்குந்நு, இரிக்குந்நு என வழங்குகின்றன என்பது அறிக. மலையாள மொழியில், இரு, நட என்பன போன்ற பல வினைப்பகுதிகள் கு-பெற்றும், செய், வரு என்பனபோன்ற சில வினைப்பகுதிகள் கு-பெறாமலும் வழங்குதலின், அவற்றின்மேல், இன்று என்பது சேர்க்க, அவை, இரிக்குந்து நடக்குந்து என்றும், செய்யுந்து வருந்து என்றும் அமைந்தன என அறிக.

ஆயின், தமிழில் இன்று என வழங்குஞ் சொல், மலையாளத்தில் உந்நு எனத் திரிந்தது என்றல் எங்ஙனம் அமையும் எனின், கூறுவேன்:

தமிழில், ன்ற என ஒலிப்பது, மலையாளத்தில், ன்ன என ஒலிக்கும். உதாரணமாக, நின்று- நின்னு, என்று- என்னு, குன்று- குன்னு, ஒன்று- ஒன்னு, அன்று- அன்னு என்பன போல்வன காண்க. இவ்வாறு வருதலை, 'கேரளபாணினீய' ஆசிரியர், அநுநாஸிகாதிப்ராஸரம்' என்று அமைத்துள்ளார்.[2] இதனால், ன்று என்

1. Dr. Graul, I believe (in his "Outlines of Tamil Grammar") was the first to suggest the origination of this sign from $k=g$, a sign of the future in poetical Tamil, and *indru*, now. His idea appears to have been that Tamil was originally without a present tense, and that the present was a new secondary tense formed from the future by the addition of a sign of present time. *Kindru* was thus= *k-indru* (then *kiru*). The same view seems to have been adopted, or independently arrived at, by Dr. Gundert. The fact that the form of this particle retained in Malayalam is *unnu* (in older compositions often *innu*) would seem to prove that *kindru*, not *kiru*, was the form in use in Tamil prior to the final separation from Tamil of the Malayalam, and, therefore, not only the more classical form in Tamil, as it is admitted to be, but also the more ancient. This fact, thought it does not prove the derivation of *kindru* from *k-indru*, yet favours that supposition.—Caldwell's Comparative Grammar, 3rd Edition, Page 494. க் என்பதனோடு, இற என்னுஞ் சொல் சேர்ந்து, இடையே னகரமெய் தோன்றப்பெற்று, கின்ற என்றாயிற்று என்றும், அதனோடு, ஆன், ஏன் முதலிய விகுதிகள் சேரும்போது, அதன் ஈற்றில் நின்ற அகரம்கெட்டது என்றும் கேரளபாணினீய ஆசிரியர் கூறியுள்ளார். கேரளபாணினீயம். பக்கம். 231.

2. கேரளபாணினீயம். பீடிகை. பக்கம். 22.

பது ன்னு என வருதல் பெறப்பட்டது ; இனி, இகரம் உகரமாகத் திரிந்ததற்கு நியாயம் என்னையெனின்,

கன்னட மொழியில், அறியிம், திளியிம், ஓழியிம் என்னும் முன்னிலைப் பன்மை வினைச்சொற்களில் உள்ள இம் விகுதி, தமிழ் மொழியில், அறியும், தெளியும், ஓழியும் என உம்விகுதியாக வழங்குகின்றது. இவற்றில், இம் என்பது, நீம் என்பதன் உறுப்பாகலின், அதுவே, உம் எனத் திரிந்ததென அறிக. தமிழ்மொழியிலேயே பண்டை நாளில், செய்யாதிம்[1] என வழங்கிய சொல், பிற்காலத்தில், செய்யாதும் என, இம், என்பது உம் என்றாகி வழங்குகின்றதன்றே! இனி, தமிழில், தம்பிரான், தம்பிராட்டி என வழங்குபவை, மலையாளத்தில், தம்புரான், தம்புராட்டி என, இகரம் உகரமாக மாறி வழங்குகின்றது. இம்முறையில், தமிழில் நிகழ்காலவினையிலுள்ள இன்று என்பதன் இகரம், மலையாளத்தில் உகரமாகத் திரிந்துளது என்பது தெளிவாகும். இன்று என்பதனீற்றில் உகரம் இருத்தலின், அதன் முதலில் உள்ள இகரமும் உகரமாக ஒலிக்கலாயிற்று.

தெலுங்குமொழியில், இகரவீற்றுப் பெயர்களுக்கு முன், பன்மை விகுதியாகிய லு வருமிடத்து, அவ் விகரவீறு உகரவீறாகத் திரிந்து வழங்குகின்றது.

தல்லி + லு = தல்லுலு
தண்ட்ரி + லு = தண்ட்ருலு
பனி + லு = பனுலு

என்பன போல்வன காண்க. இவ் வுதாரணங்களில், இகரம், தன் முன் வந்த உகரத்தை நோக்கித் தானும் உகரமாகத் திரிந்துள்ளமை ஈண்டு அறியத்தகும். கேரளபாணினீய ஆசிரியர், 'தமிழில், இன்று என்பது மலையாளத்தில் உன்னு என்றாதலைப் பற்றி யாதோர் ஐயப்பாட்டிற்கும் இடமில்லை; பன்றி என்பது, பன்னி என்றாதல் போல, அநுநாஸிகாதிப்ரஸரத்தினால், இன்று என்பது, இன்னு என்றாகும். இகர உகரங்கட்கு மாறுதல் தாராளமாகையால், இன்னு என்பது எளிதில் உன்னு என மாறுதலுஞ் செய்யும். திராவிட பாஷைகளுக்கு இயல்பாயுள்ள (Harmonic sequence of vowels) ஸ்வரானு ஸம்வாத நயத்திற்கு மலையாளத்தில் அதிகப்ரசாரம் இல்லையெனினும், அதுவும் ஈண்டுத் துணைசெய்தது என்னலாம். இதுமட்டுமன்று ; லீலாதிலகம் முதலாய பழைய மலையாள கிரந்தங்களில், போகின்றது என இகாரமே காண்கின்றது ; உகாரம் காணவில்லை. 'வராயின்னு' என்று எதிர்மறை உருவத்தில் இன்னு என்பதே யன்றி, உன்னு

1. நீம் என்பதன் உறுப்பாகிய ஈம், என்பது செப்பாதீம், வாராதீம் எனப் பழைய நூல்களில் வழங்குகின்றது.

என்பது எந்தக்காலத்திலாகிலும் வந்திருக்குமோ என்பது ஐயப் பாடே[1]' என்று எழுதியிருத்தல் ஈண்டு நோக்கற்பாலது. இவற்றால், தமிழில், இன்று என வழங்குதலே மலையாளத்தில், உந்நு என வழங்குகின்றது என்பது தெளிவாகும்.

'இன்று என்பதுவே உந்நு எனத் திரிந்தது என்றல் பொருந் தாது; ன்ற என்பது ன்ன எனத் திரியுமே யன்றி, ந்ந எனத் திரியா தன்றே! மலையாளமொழியில், செய்யுன்னு என்று னகாரமிட்டு எழுதாமல், செய்யுந்நு என, நகாரமிட்டே எழுதுதலின், அது, செய் யுந்து என்பதன் திரிபேயாகும்' என்று 'புறநானூற்றின் பழைமை' என்னும் நூலின் ஆசிரியர் கூறினரால் எனின், நன்று நன்று! மலையாள மொழியில், கந்நு, குந்நு, அந்நு, மூந்நு, வெந்நவன் என்ப வற்றிலும், நகாரமே இட்டெழுதுதலின், அவையும், முறையே, கந்து குந்து, அந்து, மூந்து, வெந்தவன் என்னுஞ் சொற்களின் திரிபே எனல் வேண்டும்; இவை, கன்று, குன்று, அன்று, மூன்று, வென்ற வன் என்னுஞ் சொற்களின் திரிபாதலே யல்லாமல், கந்து, குந்து முதலியவற்றின் திரிபு ஆகாவன்றே! ஆதலின், செய்யுந்நு எனத் தந்நகரம் இட்டு எழுதுதல் பற்றி, அது, செய்யுந்து என்பதன் திரிபு எனக் கொள்ளவேண்டும் என்றல் அமைதியாகாமை அறிக. மலை யாள மொழியில், னகார எழுத்து, பிற்காலத்தில் வழக்காறற்று இறந் தமையின், அதற்கும் நகார எழுத்தே இட்டு எழுதி வருதலான், உன்னு என எழுத வேண்டுவதனையும் உந்நு என எழுதி வருகின் றனர் என்பது அறியத்தக்கது.

இதுகாறுங் கூறியவற்றால், மலையாளமொழியில் செய்யுந்நு என வழங்குஞ் சொல், செய்யுந்து என்னுஞ் சொல்லின் திரிபு அன்று என்பதும், செய்யுந்து என்பது தமிழில் நிகழ்கால வினை முற்றன்று என்பதும், அது காலமொடு வரும் உம் என்பதனோடு து சேர்ந்து வினைப்பெயராகி வருவது என்பதும், யாண்டும் பல முறை அடுக்கியே வருதலின், அஃது எண்ணுப் பொருளில் வரும் வழியே வரும் என்பதும், அது கருதியே ஆசிரியர் தொல்காப்பிய னார், 'உம்உந் தாகும்' என்னுஞ் சூத்திரத்தை, இடையியலில் எண்ணும்மைக்குச் சிறப்பிலக்கணங் கூறியவழி வைத்தார் என்ப தும் நன்கு விளங்கும். ஆகலின், 'புறநானூற்றின் பழைமை' என் னும் நூல், உந்து என்பதுவே உது என்றும், உங் என்றும், ங் என்றும் திரிந்தது என்று கூறுதலும் பொருந்தாது எனக் கொள்க. அவற்றைக் குறித்தும் எழுதப்புகின் மிகவும் விரிந்து, 'மற்றொன்று விரித்தல்' என்னுங் குற்றத்திற்கு இடனாகுமாதலின், இவ்வளவில் நிறுத்துகின்றேன்.

---

1. கேரளபாணினீயம். பக்கம். 230.

**சொற்கள்**

உலகத்தில் மக்கள் வழங்கும் மொழிகளுள், சில, நாளடைவில் வழக்காறற்று நூல்களளவில் ஒடுங்கிப் போகின்றன; பல, எந்நாளும் முதுமையின்றி, புதிய இளம்பருவத்தோடே அழியாமல் நிலவுகின்றன. வழக்காறற்ற மொழிகளை இறந்தமொழிகள் என்றும், வழக்கில் வழங்கி வரும் மொழிகளை உயிர்மொழிகள் என்றும் கூறுவர். உயிருடைய மொழிகள், உயிரினங்களைப் போலப் பல பல மாறுதல்களை யடையும்; ஆயினும், அவற்றைப்போல முதிர்ந்து அழிவுறுந் தன்மைய அல்ல. இதுவே, உயிர்கட்கும் உயிர்மொழிகட்கும் உள்ள வேறுபாடாம்.

நாம் வழங்குந் தமிழ்மொழியும், பல்வேறு காலங்களில் தன் வடிவில் பல மாறுதல்களை யடைந்து வந்திருக்கின்றது; இன்றும் மாறுதல் அடைந்து வருகின்றது; இனியும் அடையும். இவ்வுண்மை, பண்டைக்காலத்துச் செய்யுட்களையும், பிற்காலத்துச்செய்யுட்களையும் ஆராய்வோமாயின், தெள்ளிதிற் புலனாகும். பழைய நூல்களில் வழங்கிவந்த பல சொற்கள், பிற்காலத்தில் வழக்காறற்று அழிந்தன; பல சொற்கள், வேறு வடிவங்களை யடைந்து வழங்கலாயின; சிலவற்றின் தொல் பொருள் மாறிப்போயின; புதுப்பொருள் தோன்றின. இவை, நமது தமிழ்மொழிக்குமட்டும் உண்டாயவை அல்ல; உயிர்மொழிகள் எல்லாவற்றின் இயல்பும் இதுவேயாகும். நிற்க. இவ்வுண்மை விளங்கும் பொருட்டு, ஈண்டு, பரணர் செய்யுட்களுட் காணும் பழைய சொற்களையும், அவற்றின் வேறுபாட்டையும் முதலிற் குறிக்கின்றேன்:

| முற்கால உருவம் | வந்துள்ள இடம் | பிற்கால உருவம் |
|---|---|---|
| இயலி | (நற். 260) | இயன்று |
| தரீஇ | (பதிற். 42) | தந்து |
| மரீஇ | ( ,, 50) | மருவி |
| தழீஇ | (அகம். 6) | தழுவி |
| கொளீஇ | ( ,, 212) | கொண்டு |
| வெரீஇ | ( ,, 266) | வெருவி |

இச்சொற்கள், முற்காலத்தில் ஒரே ஈற்றவாய் வழங்கியிருத்தலும், பிற்காலத்தில் பலவாறு திரிந்திருத்தலும் காண்க. இவற்றின் பகுதிகள் மெய்யீற்றனவே. இவற்றுள், தழ், வேர், மர் என்னும் பழந்தமிழ்ப் பகுதிகள், செந்தமிழில், தழு, வெரு, மரு என உகர வீற்றுப் பகுதிகளாகக் கொள்ளப்பட்டன. தர் என்னுஞ் சொல்லிற்குத் தா என்பது பகுதியாகக் கொள்ளப்பட்டது. கன்னட மொழில், தர், பர்(வர்), அழ்(அழு) என, ரகர ழகர மெய்யீற்றுப் பகுதிகள் உள்ளமை ஈண்டு அறியத்தகும்.

தழ், வேர், மர் என்னும் பகுதிகள், இறந்த காலத்தைக் குறிக்கும் இகரத்தோடு சேர்ந்து, தழி, வேரி, மரி என்ருகும். அவை, பழையகாலத்தில் வினைமுற்றுக்களாதலின், அவற்றின் இறுதி இகரத்தை நீட்டி வழங்கிவந்தனர்[1]. அதனல் அவை, தழீ, வேரீ, மரீ என்ருயின. புகீ, உணீ என்று நச்சினர்க்கினியர் காட்டியிருப்பவற்றை[2] ஆழ்ந்து நோக்கின், இவ்வுண்மை விளங்கும். ஆயின், தழீஇ, வெரீஇ, மரீஇ என இறுதியில் இகரம் இட்டு வழங்குதல் என்னை எனின், தழீ, வெரீ, மரீ என்பவற்றை ஈகார வீற்றுச் சொற்கள் எனக் கருதாமல், இகர விகுதி சேர்ந்த வினைச் சொற்களே என அறிந்துகொள்ளுதற்பொருட்டு, இகரம் அறிகுறியாக எழுதப்பட்டது என உணரத் தகும். இவ்வாறு வருஞ் சொற்களை, இயற்கையளபெடைச் சொற்கள் என்று பழைய உரையாசிரியர் வழங்கினர்.

'அவற்றுள், ரகார ழகாரம் குற்றொற் ருகா' (மொழி. 16)

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தான், தழ், வேர், மர் என மெய்யீற்றவாய் நின்ற சொற்கள் அவ்வாறு வழங்குதல் அமையாமையின், அவற்ருேடு உகரத்தைச் சேர்த்து, தழு, வெரு, மரு என வழங்கலாயினர். அவற்ருேடு, இறந்தகாலத்தைக் குறிக்கும் இகரஞ் சேரவே, அவை முறையே, தழுவி, வெருவி, மருவி என்ருயின. ஆகலின், இக்காலத்தவர், தழுவு, வெருவு, மருவு என்பவற்றைப் பகுதிகளாகக் கொள்கின்றனர். இதனுனும், தழீஇ முதலியவை மெய்யீற்றுப் பகுதிகளோடு இகரஞ் சேர்ந்த சொற்களே என்பது தெளிவுறும். தழீஇ முதலிய சொற்கள், தமிழ்மொழியைச் செந்தமிழாக்கிய காலம்முதல் வினையெச்சங்களாகக் கொள்ளப்படினும், பழந்தமிழ்க் காலத்தில் வினைமுற்றுக்களாகவே வழங்கின. இனி,

| | | |
|---|---|---|
| சினைஇ | (நற். 247) | சினந்து |
| கடைஇ | (நற். 350) | கடவி |

---

1. வினைமுற்றுக்களை நீட்டி வழங்கும் முறை மலையாளமொழியில் உளது. அம்மொழியில், செய்து என்பதுபோல்பவை வினையெச்சமாக இருப்பின் குற்றுகரமாக ஒலிக்கவேண்டும் என்பதும், வினைமுற்ருக இருப்பின் முற்றுகரமாக ஒலிக்கவேண்டும் என்பதும் நியதி. வினைமுற்றுக்களில் முற்றுகரத்தை நீட்டி ஊகாரமாக வழங்குதலும் உண்டு. 'வந்நூ சாத்ஸமயம் அம்புத மொன்னகன்னூ' என்பதில், உகரம் நீண்டொலித்தல் அறிக. 'அவதாரக பாவீ' என்னும் வினைமுற்றில், உகரம் ஊகாரமாகவே பயின்று வருகின்றது. இவ்வாறே, இகரவீற்றுவினையும் நீண்டு வழங்குதல் உண்டு. 'வக்த்ரம் தாழ்த்திட்டு போயீ நிஜபவனமதில்'. ராமனுட்டம் : தோரண யுத்தம்.

2. தொல். மொழிமரபு. 44-ஆம் சூத்திரவுரை.

| | | |
|---|---|---|
| நிலைஇ | (பதிற். 48) | நிலைப்பித்து |
| புரைஇ | ( ,, 50) | புரந்து |
| உடைஇ | (அகம். 181) | உடைந்து |
| உரைஇ | ( ,, 222) | உரசி (உராய்ந்து) |
| துழைஇ | ( ,, ,, ) | துழாவி |
| நசைஇ | ( ,, 258) | நச்சி (விரும்பி) |
| கலைஇ | ( ,, 266) | கலந்து |
| அசைஇ | (புறம். 141) | அசைந்து |
| குவைஇ | ( ,, 343) | குவித்து |

என இச்சொற்கள் பிற்காலத்தில் பலவாறு திரிந்துவந்திருத்தல் காண்க.

இவற்றுள், சினைஇ, கடைஇ, புரைஇ, துழைஇ, குவைஇ என்பவற்றில் பகுதிகள் அகரவீற்றனவேயாயினும், அவை, முன் வந்த இகர விகுதிகளோடு சேர்ந்து ஐகாரமாயின.

'அகர இகரம் ஐகார மாகும்' (தொல். மொழி. 21)

என்னும் விதியை நோக்குக.

ஆகலின், அவற்றில் இகரஞ் சேர்ந்துள்ளமை யறிதற்பொருட்டு இறுதியில் அறிகுறியாக இகரம் எழுதப்பட்டுள்ளது என்பது உய்த்துணரத்தக்கது. இனி,

| | | |
|---|---|---|
| சாஅய் | (அகம். 226) | சாய்த்து |
| பாஅய் | ( ,, 322) | பாவி, பரந்து |

என்னும் இச்சொற்களிற் காணும் யகரமெய், இறந்தகாலங் குறிக்கும் இகரத்தின் திரிபே. தாவி-தாய்; கூவி-கூய் என்பன போன்ற சொற்களில், இறந்தகாலங் குறிக்கும் இகரம், யகரமாகத் திரிந்து காணப்படுதல் போலவே, இச்சொற்களிலும் காணப்படுகின்றது எனக்கொள்க. 'இகர யகரம் இறுதி விரவும்' (மொழி. 25) என்னும் தொல்காப்பியவிதி ஈண்டு அறியத்தகும்.

| | | |
|---|---|---|
| தைஇ | (அகம். 181) | செய்து |

இச்சொல், இக்காலத்தில் வழக்கிறந்தது. கை (கய்), தை (தய்), செய் ([1]சய்) என்னும் இம் மூன்று சொற்களும் ஒரு பொருளில்

---

1. சகாஅகாம்(ச), சகாஎகரம்(செ) ஆக ஒலித்தலின், சய் என்பது செய் என்றாயிற்று. சகரம் இவ்வாறு ஒலிக்கப்பட்டமையினனே செந்தமிழில் சகர முதன்மொழியே இலதாயிற்று என அறிக. சத்து (இறந்து) எனற்பாலது, செத்து என்றாகியதும் இம்முறையின் ஆயதே. சத்த (மலையாளம்), சத்து (கன்னடம்), சச்சி (தெலுங்கு), என ஏனைய திராவிட மொழிகளில், சகர முதன்மொழியாகவே வழங்குதல் நோக்கத்தகும்.

வழங்குதலின், இவற்றுள் ஒரு சொல்லே இயல்பான சொல் என்றும், மற்றவை இரண்டும் அதன் திரிபு என்றும் கொள்ளுதல் அமையும். இனி, பெயரெச்சச் சொற்களைக் குறிக்கின்றேன்.

| | | |
|---|---|---|
| வெரீஇய | (பதிற். 50) | வெருவிய |
| மரீஇய | ,, | மருவிய |
| அமைஇய | ,, | அமைந்த |
| சினவிய | (நற். 100) | சினந்த |
| நிலைஇய | (அகம். 152) | நிலைத்த |
| தடைஇய | (அகம். 181) | தடித்த ? |
| உறீஇய | ( ,, 222) | உறுவித்த |

என்னும் இச் சொற்கள், பிற்காலத்தில் பலவாறு திரிந்து வழங்குதல் காண்க.

| | | |
|---|---|---|
| செலீஇய | (அகம். 152) | செல்ல |
| கொளீஇய | (அகம். 356) | கொண்டவை |

இவை, வடிவத்தில் மேற்காட்டிய சொற்களை ஒத்திருப்பினும் பெயரெச்சங்கள் அல்லவாதல் அறிக.

| | | |
|---|---|---|
| காணியர் | (பதிற். 44) | காண்க |
| காணிலியர் | ( ,, 44) | காணற்க |
| உணீஇயர் | (பதிற். 49) | உண்ண, உண்க |
| செலீஇயர் | (குறுந். 292) | செல்க |
| உறைஇயர் | (அகம். 178) | உறைக |
| பெறீஇயர் | ( ,, 222) | பெற |
| களைஇயர் | ( ,, 367) | களைய |

என்னும் இவைபோன்றனவும் இக்காலத்தில் வழக்கிறந்தன.

இனி, வந்தமாறே (அகம். 262), என்னுஞ் சொல்லில் உள்ள மாறு என்பது, பிற்காலத்தில், வந்தவாறே என்பதுபோல ஆறு என வழங்கலாயிற்று.

இன்னுறைவி (புறம். 145), நின்னலத் தகுவி (அகம். 196) என்னுமிடத்துள்ள உறைவி, தகுவி என்பனவும் இக்காலத்தில் இவ்வடிவில் வழங்குதல் இல்லை.

இனி, சொற்கள், தம் தொன்மைப்பொருளினின்று மாறி, வேறுபொருளில் வழங்குதலைக் குறித்துச் சிறிது ஆராய்கின்றேன் :

கோதை.

கோதை என்னுஞ் சொல், பூமாலைக்கும், மகளிர் கூந்தலுக்கும் பெயராய் வழங்குகின்றதாயினும், அது, முதலில் மகளிர் கூந்தலுக்கே பெயராயிருந்திருத்தல் வேண்டும் எனத் தெரிகின்றது.

'மகளிர் கோதை மைந்தர் புனையவும்
மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்'
(பரிபாடல். 20: 20, 21)

என வந்திருத்தலின், கோதை என்னுஞ் சொல், மகளிர் சூடும் பூமாலைக்குப் பெயராக வழங்குதல் நோக்கத்தக்கது. இச்சொல் (கோதை), பின்னர் ஆடவர் சூடும் மாலைக்கும் வழங்குவதாயிற்று.

'கோதை மார்பிற் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்' (புறம். 48)

என்பது காண்க. ஆயினும், இச்சொல், பாணர் பாட்டுக்களில்,

'மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள்' (குறுந். 393)

என்று, மகளிர் சூடும் மாலைக்கே பெயராக வந்துளது.

சேப்பு. செப்புதல் என்னுஞ் சொல், சொல்லுதல் என்னும் பொருளில் வழங்குகின்றதாயினும், இதன் பொருள், வினவிற்கு விடை யிறுத்தல் என்பதுவே யாகும்.

தொல்காப்பியத்தில்,

'செப்பும் வினவும் வழாஅ லோம்பல்' (கிளவி. 13)
'வினவும் செப்பே வினவெதிர் வரினே' ( ,, 14)
'செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே' ( ,, 15)
'செப்பினும் வினவினும் சினைமுதற் கிளவிக்கு' ( ,, 16)

என்று, இச்சொல், விடையிறுத்தற் பொருளிலேயே வந்துளது காண்க. ஒருவர் வினவிய வினவிற்கு விடையிறுத்தல் என்னும் பொருளதாகிய இச்சொல் (செப்புதல்), அப்பொருளினின்று மாறி, சொல்லுதல் என்னும் பொருளில் வழங்கலாயிற்று என அறியலாகும். இது பாணர் செய்யுளில்,

'செப்புநர்ப் பெறினே' (நற். 6)

என்னுமிடத்து, சொல்லுதல் என்னும் பொருளில் வந்துளது.

தொடி. இது, தோளில்(மேற்கையில்) அணியும் அணிக்குப் பெயர். இதனை,

'தோடிபழி மறைத்தலிற் றோளுயர்ந் தனவே' (நற். 23)

என்பதனானும், 'தொடித்தோட் செம்பியன்' என்னும் வழக்கானும் அறியலாகும். சிந்தாமணியில்,

'வார்செலச் செல்ல விம்மும்' (கோவிந்தை. 61)

27

என்னும் பாட்டின் விசேடவுரையில்,

'முன், வளை கழல நின்றூர்க்கு வருத்த மிகுதியால் தொடியும் கழன்றன என்க' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியுள்ள உரையும் இதனை வலியுறுத்தும். ஆயினும், இச்சொல்(தொடி), முன்கையிலிடும் வளைக்கும் பெயராய் வந்துளது.

'சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கை' (பதிற். 46)

என்று பரணர் செய்யுளில் வந்திருத்தல் காண்க.

பரி. பரி என்னுஞ் சொல், குதிரைக்குப் பெயராக வழங்கினும், முதன்முதலில் அது, விரைந்த செலவிற்குப் பெயராயிருந்து, பின்னர், விரைந்த செலவினையுடைய குதிரைக்குப் பெயராக வந்திருக்க வேண்டும் எனத் தெரிகின்றது. வடமொழியில், [1]'அஶ்வ:' என்னுஞ் சொல்லிற்குக் கூறும் பொருள் ஈண்டைக்கு அறியத்தகும். பரணர் பாட்டுக்களில்,

'பரிசிறந்
தாதி போகிய பாய்பரி நன்மான்' (அகம். 122)

'கடும்பரிப் புரவி' (பதிற். 41)

என்னுமிடங்களில், பரி என்னுஞ் சொல், விரைந்த செலவினைக் குறித்தே வந்திருத்தல் அறிக.

பழனம். பழனம் என்பது, பொய்கை(நீர்நிலை) என்னும் பொருளில் முதலில் வழங்கப்பட்டு, பின்னர், அது, நீர்நிலைச் செறுவிற்கும் பெயராகி, அதினின்று, வயல்களுக்குப் பெயராய் வழங்கலாயிற்று என அறியப்படுகின்றது. வயல் என்னும் பொருளில் முற்காலத்தில் வழங்கப்படவில்லை.

'பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுடுநந் துடைக்கும்' (நற். 280)

'பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்' (அக. 226)

'பழனப் பல்புள் ளிரியக் கழனி' (நற். 350)

என்னுமிடங்களில், கழனி என்பதுவே வயல் என்னும் பொருளைத் தருதலின், பழனம் என்பது வயல் அன்று என்பது தெள்ளிதின் விளங்கும்.

'பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவும்
கழனி யூர' (ஐங். 60)

1. 'அஶ்நுதே வ்யாப்நோதி—கமனத்தினால் வ்யாபிப்பது' அமரத்தின் வ்யாக்யானம்.

'கழனித் தாமரை மலரும்
பழன வூா' (ஐங். 53)
'கழனி யூரன் மார்பு
பழன மாகற்க' (ஐங். 4)

என்னும் இவ்விடங்களிலும், கழனி, பழனம் என்னுஞ் சொற்கள் இரண்டும் ஒருங்கு கூறப்பட்டிருத்தலின், பழனம் என்பது வயலைக் குறித்தல் இல்லை என்பது கூறாமலே விளங்கும் இங்கு, 'பழன மாகற்க' என்னுந் தொடருக்கு, 'ஊரவர்க்கெல்லாம் போதுவாகிய பழனம் போலாது' என்று உரையாசிரியர் எழுதியிருத்தல் அறியத் தக்கது.

'பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்' (புறம். 61)

என்னும் அடியில் பழனம் என்பதற்கு, போய்கை என்று உரையா சிரியர் கூறியிருப்பது ஈண்டைக்கு நோக்கத்தக்கது. இவற்றால், 'பழனப் பைஞ்சாய்' (அகம். 226) என்னுமிடத்திலும், பழனம் என்னுஞ் சொற்கு, போய்கை என்னும் பொருள் சிறக்கும். பைஞ் சாய் முதலிய கோரைகள் நீர்நிலைகளிலும் வளர்வன.

'வண்டார் பொழிலின் பழனத்து
வயலி னருகே கயல்பாய' (பெரியதிருமொழி. 5 : 9)

என்னும் அடியில், பழனம் என்பதற்கு, 'நீர் நிலம்' என்று பொருளெழுதியுள்ளனர் ஸ்ரீமத் பெரியவாச்சான் பிள்ளை. இக் காட்டியவற்றால், பழனம் என்பது கழனியைக் குறியாது என்பது அறியப்படும். ஆயினும்,

'கண்பமல் பழனம் கமழ' (மலைபடு. 454)

என்று, மருதநிலம் என்னும் பொருளில் இச்சொல் வழங்கப்பட் டுளது.

பறை. பறை என்னுஞ் சொல், பறவை (புள்) என்னும் பொருளில் வழங்கி வருகின்றது. ஆயினும், பரண் பாட்டுக்களில்,

'குணகடற் றிரையது பறைதபு நாரை' (குறுந். 128)

என்னுமிடத்தில், இச்சொல், பறத்தல் என்னும் பொருளிலும்,

'செங்கா லன்னம்
வளராப் பார்ப்பிற் கல்கிரை ஒய்யும்
அசைவில் நோன்பறை போல' (நற். 356)

என்னுமிடத்தில், சிறகு என்னும் பொருளிலும் வந்துளது.

இவற்றை நோக்குகையில், இச்சொல் (பறை), முதலில் பறத்தலை யுணர்த்தி நின்று, பின்னர், பறத்தற்குக் காரணமான சிறகினை யுணர்த்தி, அதன்பின், பறக்கும் உயிரினத்திற்குப் (புள்ளுக்குப்) பெயராக வந்திருக்கவேண்டும் எனத் தெரிகின்றது.

புணரி. புணரி என்னுஞ் சொல், (ஒன்றன் பின் ஒன்றாகச்) சேர்ந்து வருவது என்னும் பொருளில், முதற்கண் அலைக்குப் பெயராகி, பின்னர், கடலுக்குப் பெயராக வந்துளது. அலை, திரை என்னுஞ் சொற்களின் தன்மையும் இவ்வாறே யாகும். பரணர் பாட்டுக்களில் இச்சொல்,

'மலிதிரைப் பவ்வத்து
வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே' (பதிற். 42)

என்றும்,

'அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்பாய் முரசி னிரங்கும்' (குறு. 328)

என்றும் அலையைக்குறித்து வந்துளது.

மன்றம். மன்றம் என்பது வெளியிடங்களில் (பெரிய மரத்தின் அடியில்) கட்டப்பட்ட திண்ணையைக் குறிக்கும். இதற்கு, மேலே கூரை இராது. 'மன்றப் பொதியில்' (சிலப். பதிக. 40) என்பது அறியத்தக்கது. 'வெள்ளிடை மன்றம்' (சிலப். 5: 117; மணி. 6: 91) என்பது காண்க. கூரைவேயப் படின், பொதியில்(பொதிந்த இல்) எனப்படும்.

'மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்' (புறம். 76)
'மன்றப் பலவின் மாச்சினை' ( ,, 128)
'மன்ற விளவின்' ( ,, 181)
'இரத்தி நீடிய அகன்றலை மன்றத்து' ( ,, 34)
'மன்றத்துப் புன்னை போல' (அப்பர்தேவாரம். 1. 27: 8)

இவைபோல்வனவற்றால், மன்றம், யாதேனும் ஒரு மரத்தினடியிடத்தது என்பது தெளிவாகும். இச்சொல் பரணர் பாட்டுக்களில்,

'மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்கு' (பதிற். 43)

என்று, மன்றிற்குப் பெயராக வந்துளது. மன்று என்னுஞ் சொல், பிற்காலத்தே பொதியிலுக்கும் பெயராக வழங்கலாயிற்று.

வஞ்சினம். வஞ்சினம் என்னுஞ் சொல், சூள் என்னும் பொருளில் வழங்குகின்றது. ஆயினும், இச்சொல், கடுஞ்சினத்திற் கூறுஞ் சூளுக்குப் பெயராக வழங்கி, பின்னர்,

இயல்பாகக் கூறுஞ் சூளுக்கும் பெயராக வந்திருத்தல் வேண்டும் எனத் தோன்றுகின்றது. இதனை, வஞ்சினம் (வன்+சினம்) என்னும் சொல்லாலும் அறியலாகும். ஆயின், வன்சினம் என்பது வஞ்சினம் என்று வருமோ எனின், வரும்; மாந்தரன்+சேரல்= மாந்தரஞ்சேரல், உடன்+பாடு=உடம்பாடு என்பவற்றிற்போல, னகாரம், வருமொழி வல்லெழுத்திற்கு ஒத்த மெல்லெழுத்தாகத் திரிந்தது என்க. நன்செய், புன்செய் என்பவை, நஞ்செய்—புஞ்செய்—என வழங்குதலும் இவ்வாறே யாயினமை என அறிக. வஞ்சினம் என்னுஞ் சொல் பரணர் பாட்டுக்களில்,

'வஞ்சினம் முடித்த ஒன்றுமொழி மறவர்' (பதிற். 41)

என்றும்,

'நற்றேர் வழுதி நாமறை யுந்தி
நன்றல் வஞ்சினம் உரைத்தது' (குறுந். 36)

என்றும், மேற்கூறிய இரண்டு பொருளிலும் வந்துளது.

சொற்கள், தமக்கு உரிய பொருளினின்று நீங்கி, சிறிது தொடர்புடைய பொருளைக் குறித்து வழங்குதலும் உண்டு என்பதைப் பரணர் செய்யுட்களிற் சில சொற்களால் தெளிவுபடுத்தினேன். இனி, முற்காலத்தில் வழங்கிய பொருள் பிற்காலத்தில் வழக்கிறந்த சொற்களுட் சிலவற்றைக் குறிக்கின்றேன்.

| சொல் | | பழைய பொருள் | இப்போதுள்ளபொருள் |
|---|---|---|---|
| வெய்யோள் | (அகம். 226) | விருப்ப முள்ளவள் | கொடியவள் |
| வாங்கி | (பதிற். 41) | வளைத்து | விலைக்குப் பெற்று, பெற்று |
| நம்பி | (அகம். 198) | விரும்பி | விசுவாசங்கொண்டு |

என்பன காண்க.

முட்டின்று (அகம். 122)—முட்டுடையது — முட்டுஇலது

என்னும் இத்தொடரையும் ஈண்டு நோக்கிக்கொள்க.

இனி, சில சொற்களில், மொழிமுதன்மெய்யெழுத்தினை யூர்ந்து வரும் உயிரெழுத்து வேறுபடுதல் உண்டு.

| | |
|---|---|
| தளி (பதிற். 43) | துளி (புறம். 369) |
| தீம் (அகம். 266) | தேம்(ன்) (அகம். 208) |

என்பன காண்க.

சில சொற்களில், மொழிமுதன்மெய்யெழுத்து மாறுபாடுதலும் உண்டு.

| | |
|---|---|
| ஞாட்பு (அகம். 142) | நாட்பு. (பதிற். 45) |

என்பது காண்க.

ஞெண்டு (குறுந். 328) என்பது, ஞண்டு என்றாகி, நண்டு என வழங்குதல் ஈண்டு ஒப்பிடத் தகும். சில சொற்களில், இடையே மெல்லெழுத்துத் தோன்றுதலும் உண்டு.

ஊசல் (பதிற். 43)

இச்சொல், இக்காலத்தில் ஊஞ்சல் என வழங்குகின்றது. [1]ஒதி (அகம். 125)—ஒந்தி; கூடு-கூண்டு; தேடு-தேண்டு (கம்ப. கிட்கிந்தா. தானைகாண்: 39) என்பன போல்வன இவ்வாறு வந்தவை. இவ்வாறே, பரணர் செய்யுட்களில் வந்துள்ள சொற்களெல்லாவற்றைக் குறித்தும் கூறின் மிகவும் விரியுமாதலின் இதனோடு நிறுத்துகின்றேன்.

இனி, பரணர் செய்யுட்களில் வந்துள்ள சொற்களுள், கன்னடம் தெலுங்கு மலையாளம் முதலிய மொழிகளின் சொற்களோடு தொடர்புடைய சொற்கள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிட்டு, அதனோடு இப்பகுதியை முடிக்கின்றேன்:

| சொல் | வந்துள்ள இடம் | கன்னடம் | தெலுங்கு | மலையாளம் |
|---|---|---|---|---|
| அஞ்சி<br>(பயந்து) | (அகம். 142) | அஞ்சி | அஞ்சி | அஞ்சி |
| அணல் | (அகம். 125) | அணல் | — | அணல்<br>(அண்ணக்கு) |
| இருள் | (புறம். 144) | இருள் (இரவு) | இருலு | இருள் |
| இல் | (அகம். 122) | பிந்தில்[2]<br>(இல்லின்பின்னிடம்) | இல்லு | இல்லம்<br>(நம்பூதிரிமார்வீடு) |
| ஈன் | (புறம். 348) | ஈன்<br>(அஃறிணையுயிர்களுக்கு வழங்கும்) | ஈனு | — |
| உரல் | (பதிற். 43) | உரல் | ரோலு | உரல் |
| ஊசல் | (பதிற். 43) | உய்யல் | ஊயல | உழிஞ்ஞால் |
| எரி | (பதிற். 48) | உரி | — | எரி |
| ஒய்<br>(உய்) | (நற். 100) | உய் | — | உய்யுமாறு<br>(மீளும் வண்ணம்) |
| ஒன்று | (புறம். 341) | ஒந்து | ஒண்டு | ஒன்னு |

1. ஒதி என்பது, ஒந்தி என்பதன் இடைக்குறை என்று உரையாசிரியர்கள் கூறியுள்ளனராயினும், பழைய செய்யுட்களில் யாண்டும் ஒதி எனவே காணப்படுதலாலும், கன்னடத்தில், ஒதி என்றே இருத்தலாலும், அதுவே இயல்பான சொல் என்று கொள்ளப்பட்டது.

2. ஈண்டு, தமிழில் வழங்கும் முன்றில் (முன்+து+இல்=இல்லின் முன்னுள்ளது) என்னுஞ் சொல் ஒப்பிடத் தகும்.

| சொல் | வந்துள்ள இடம் | கன்னடம் | தெலுங்கு | மலையாளம் |
|---|---|---|---|---|
| ஓடு (தோற்றோடு) | (அகம். 226) | ஓடு | ஓடு (தோற்றோடு) | ஓடு |
| கழனி | (அகம். 326) | கழனி | — | கழனி |
| கேணி | (குறுங். 399) | — | — | கேணி (வட்டம் குறைந்த குளம், சிறு குளம்) |
| சுடர் (விளக்கு) | (பதிற். 47) | சொடர் (விளக்கு) | — | சுடர் (நெருப்பு, ஒளி) |
| சுற்றம் | (பதிற். 42) | சுத்தம் | சுட்டமு | சுற்றம் |
| செத்து (கருதி) | (பதிற். 41) | கெத்து (கருதி) | — | — |
| [1]சேரி | (குறுங். 298) | கேரி (தெரு) | — | சேரி (ஜனக்கூட்டம், சிற்றூர்) |
| ஞான்று | (குறுங். 328) | — | நா(ண்)டு (முனி) | ஞான்னு (முன்னாள்) |
| தந்தை | (அகம். 196) | தந்தெ | தண்ட்ரி | தந்த (கீழ்க்குலத்தவர் வழக்கு) |
| தெரு (தெருவு) | (பதிற். 47) | — | தெருவு (வழி) | தெருவு |
| தோகை (வால்) | (அகம். 122) | சோகெ (மயில் வால்) | தோக (வால்) | தோக |
| நாண் | (அகம். 266) | நாண் | நான | நாணம் |
| நிகழ் | (பதிற். 49) | நெகழ் (பிரசித்தமாகு) | — | நிகழ் (நிறைவாதல்) |
| [2]நிரப்பு | (பதிற். 50) | நெரபு (ஒருங்கு தொகுத்தல்) | — | நிரப்பு (பொருந்துதல்) |

1. இச்சொற்கு, கன்னடமொழியிலுள்ள பொருளே தமிழிலும் முன்பு வழங்கியது எனக் கொள்ளலாம். பார்ப்பனச்சேரி, பாத்தையர்சேரி என்பவற்றில், சேரி என்பதற்கு, தெரு என்னும் பொருள் சிறத்தலும், ஊர் என்னும் பொருள் சிறவாமையும் அறிக. சேரி=சேர்ந்திருப்பது. இது, பல வீடுகள் சேர்ந்திருக்குந் தெருவிற்கே முதலிற் பெயராதல் அமைதி. பின்னர், ஊர் என்னும் பொருளிலும் வந்துளது.

2. இச்சொற்கு, கன்னடமொழியி லுள்ள பொருளே சிறக்கும். 'யாதும், நிரப்பாமல் எல்லாம் நிரம்பிற்றே பொற்றேர், வரப்பாகன் புக்க மனே' (நளவெண்பா. கலிநீங்கு. 56) என்னுமிடத்தும் இப்பொருள்படுதல் அறிக.

| சொல் | வந்துள்ள இடம் | கன்னடம் | தெலுங்கு | மலையாளம் |
|---|---|---|---|---|
| நுதல் | (அகம். 135) | நொஸல் | நொஸலு | நுதல் |
| நுதி | (புறம். 4) | துதி | துத (இறுதிப்பாகம்) | — |
| நெய்த்தோர் | (பதிற். 49) | நெத்தர் | நெத்துரு | — |
| நெருநை | (அகம். 266) | நின்னெ | நின்ன | இன்னலெ |
| நெருநல் (நென்னல்) | ( ,, 6) | | | |
| பற்று | (அகம். 396) | பத்து | பட்டு | பற்று |
| புற்று | (பதிற். 45) | புத்து | புட்ட | புற்று |
| புனல் | (அகம். 266) | பொனல் | — | புனல் |
| பெயர் (பேர்) | (பதிற். 48) | பெஸர் | பேரு | பேர் |
| மனை | (அகம். 122) | மனெ (பிராமணருள் ஒரு பிரிவினர் வீடு) | — | மன |
| முந்நீர் | (அகம். 212) | முந்நீர் | முந்நீரு | — |
| மூய | (பதிற். 42) | — | மூய | — |
| மொய்ம்பு | (அகம். 222) | முய்ப்பு, முய்வு | — | முய்ப்பு |
| வெருகு | (அகம். 367) | பெக்கு | — | வெருகு (புனுகுப்பூனை) |
| வேம்பு | (பதிற். 49) | பேவு | வேமு | வேம்பு |
| [1]வைகறை | (நற். 247) | பைகு | — | வைகுந்நேரம். |

1. 'வைகறை' என்னுஞ் சொல், வைகு அறை எனப் பிரிந்து, வைகு அற்றுப்போகும் காலம் எனப் பொருள்படும். அஃது, இரவு அற்றுப்போகுங் கடையாமத்திற்குப் பெயராக வழங்குதலின், வைகு என்பது இரவினைக் குறிப்பது எனத் தெரிகின்றது.

'வைகுபுலர் விடியல்' (நற். 12 ; அகம். 37, 41.)

என வருமிடங்களை நோக்கின், வைகு என்பது, இரவு என்னும் பொருளுடையது எனத் தெளிவுறும். கன்னட மொழியிலும் மலையாள மொழியிலும் அந்திமாலை என்னும் பொருளில் வழங்குகின்ற வைகு என்னுஞ் சொல், பண்டைத்தமிழ்மொழியில் இரவினைக் குறித்து வழங்கி வந்தது என்று கொள்ளுதலில் தவறில்லை. இனி, வைகு என்னுஞ் சொல், அல் என்னும் விகுதியோடு சேர்ந்து, வைகல் என்றாகும். வைகல் என்பது, நாளுக்குப் பெயராக வழங்குகின்றது. ஆயினும், 'வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்' (நாலடி. 4: 9) என்னுமிடத்தில், வைகல் என்பதற்கு, இரவு என்னும் பொருளே சிறப்புடையதாகும் எனத் தோன்றுகின்றது.

'சூரர மகளிரிற் பெறற்கரி யோளே' (அகம் .162), 'வானர மகளிர்க்கு மேவ லாகும்' (நற். 356) என்று பரணர் செய்யுட்களில், அரமகளிர் என்னுஞ் சொல் வந்துளது. அமரமகளிர் என்பது, இடையிலுள்ள மகரம் கெட்டு, அரமகளிர் என்றாயிற்று எனக் கூறுகின்றனர். அதனை வலியுறுத்தத் தக்க [1]பிரயோகங்களும் உள்ளன. ஆயினும், இச்சொல், முற்காலத்தில் இப்பொருளுடையதன்று என அறியப்படுகின்றது. கன்னடமொழியில், அரமக்கள் என்னுந் தொடர் பல விடங்களில் வருகின்றது. அத் தொடரை, அரசு+மக்கள் எனப் பிரித்து, அதற்கு, ராஜகுமாரர்கள் எனப் பொருள் கூறுகின்றனர். அரமனை என்னுஞ் சொல், அரசு+மனை என்னும் இரண்டு சொற்களாலாகிய தொகைநிலைத் தொடர் என்றும், நிலைமொழியின் ஈறு கெட்டது என்றும் கன்னட மொழியில் உள்ள 'பாஷாபூஷணம்,' 'சப்த மணி தர்ப்பணம்' என்னும் [2]இலக்கணநூல்கள் கூறுகின்றன. இச் சொல், தமிழிலும் அவ்வாறே அரமனை என வழங்குகின்றது. 'அரமனைக் கெய்தமு னியம்பினேன்'[3] என்று செய்யுட்களிலும் காண்கின்றது. ஆயினும், அரமனை என்பது தவறு என்றும், அரண்மனை என்பதே சரியானது என்றும் கொள்கின்றோம். அரண்மனை என்பது, காவலுடைய வீடு என்றாகி, அரசர்மனையைக் குறிக்கின்றதாகலின், அஃது, அரசுமனை என்னும் பொருளுடைய அரமனை என்பதுபோல் அத்துணைத் தகுதியாதல் இல்லை. இதனால், அரமனை என்பதே தகுதியான சொல் என்பது போதரும்.

இனி, அரமகள் என்பதில் அமர என்னுஞ் சொல்லின் இடைநின்ற மகரவுயிர்மெய் கெட்டு, அர என்றாயது என்றலினும், அரசு என்னுஞ் சொல்லின் ஈற்றில் நின்ற குற்றுகரம் மெய்யொடுங் கெட்டு, அர என்றாயது என்றலே அமைதியாகும். இதனால், அரமகளிர் என்பது, அரசுமகளிர் = ராஜகுமாரிகள் என்னும் பொருளுடையது என்று கொள்ளுதல் ஏற்புடைத்தாகும்.

சூரரமகளிர் என்னுமிடத்து, அரமகளிர் என்பதன் பொருள், மேற்கூறியவற்றான் அறியப்படும். இனி, சூர் என்னுஞ் சொல்லைக் குறித்து நோக்குவோம். சூர் என்பதற்கு, தமிழில், அச்சம் என்னும் பொருள் உளது. ஆயின், இப்பொருள், ஈண்டைக்குச் சிறப்புடையதாகத் தோன்றவில்லை. கன்னட மொழியில், சூர் என்பதற்கு,

1. 'அரம டந்தையர் கற்பகம் நவநிதி' (கம்ப. பால. அகலி. 18) என்பது காண்க.

2. கர்ணாடக பாஷாபூஷணம். சூ. 148, சப்தமணிதர்ப்பணம். 187.

3. வில்லி பாரதம். கீசக: 9.

அன்பு என்னும் பொருளே யுளது. தமிழில், சகார முதன்மொழி கள், கன்னடத்தில் ககார முதன்மொழிகளாய் வழங்குகின்றன. சேய்—கேய், சிதல்—கேத்தல், என்பன போல்பவை காண்க. அதனால், ஈண்டும், சூர்—கூர் என்னும் இவ்விரண்டு சொற்களும் ஒரு சொல்லின் திரிபே எனக் கொள்ளலாம். ஆகலின், சூர் என்பதற்கு, அச்சம் என்னும் பொருள் கொள்ளுதலினும், அன்பு என்னும் பொருள் கொள்ளுதல் அமைதியாகும் எனத் தோன்றுகின்றது. இனி, அச்சம் என்னும் பொருளே கொள்வதாயின், விலங்கு முதலியவற்றைக் காணுங்கால் உண்டாதல் போன்ற அச்சம் எனக் கொள்ளாது, உள்ளங்கூசுதல் எனக் கொள்ளுதல் அமைதியாகும். இவற்றை அறிஞர் ஆராய்ந்து துணிவாராக.

வடசொற்கள். இனி, பரணர் செய்யுட்களில் காண்கின்ற [1]வடமொழிச் சொற்களை (தற்சம, தற்பவங்களை), ஈண்டுக் குறிக்கின்றேன்:

நற்றிணை

| | | | |
|---|---|---|---|
| *கூந்தல் | 6 | *மயில் | 265 |
| கானம் | 6 | கலாவம் | 265 |
| முகம் | 100 | தாமரை | 300 |
| தெய்வம் | 201 | செவி | 310 |
| தண்டு | 260 | உச்சி | 356 |
| ஆரம் | 265 | அன்னம் | 356 |

அகம்

| | | | |
|---|---|---|---|
| தோள் | 6 | கூகை | 122 |
| முகன் | 6 | கடாம் | 125 |
| பிண்டம் | 6 | *ஏமம் | 142 |
| மாயம் | 6 | உருவு | 142 |
| அவை | 76 | *இசை (புகழ்) | 152 |
| சாகாடு(சகடம்) | 116 | தனம் | 152 |
| முரசம் | 116 | வயிரம் | 178 |
| ஆவணம் | 122 | *நீலம் | 178 |
| மண்டிலம் | 122 | மகரம் | 181 |

1. நீர் (தண்ணீர்), மணி, மீன், காலை என்னுஞ் சொற்கள் ஈண்டுக் குறிக்கப்படவில்லை. ஈண்டுக் குறிக்கப்பட்டவற்றுள் சில சொற்கள் பல முறை வந்துள்ளன; அவற்றை மீண்டும் குறிக்கவில்லை. இயற்பெயர், இடப்பெயர் ஆகியவற்றையும் ஈண்டு எண்ணவில்லை.

*இக்குறி யிட்டுள்ளவற்றைத் தமிழ்ச்சொற்கள் என்பாரும் உளர்.

| | | | |
|---|---|---|---|
| சிகாம் | 181 | *ஏதம் | 236 |
| காமம் | 198 | படிவம் | 262 |
| யாமம் | 208 | கந்து | 276 |
| *பழம் | 208 | ஆரியர் | 276 |
| மட்டு (மது) | 212 | அமையம் | 367 |
| பட்டு | 236 | *நகர் | 372 |

குறுந்தொகை

| | |
|---|---|
| நிரையம் | 258 |

பதிற்

| | | | |
|---|---|---|---|
| சமம் | 41 | *அரண் | 44 |
| ஊசி | 42 | தாயம் | 44 |
| அமர் | 42 | தூணி | 45 |
| மானம் | 42 | பருதி (உருளை) | 46 |
| கவரி | 43 | *உலகம் | 50 |
| மத(மா) | 43 | *வண்ணம் | 50 |
| திசை | 43 | | |

புறம்

| | | | |
|---|---|---|---|
| இலக்கம் | 4 | கணம் | 341 |
| படாஅம் | 141 | ஏணி | 343 |
| பாரம் | 145 | பூதம் | 369 |

இனி,

நற்றிணை

| | |
|---|---|
| துகள் | 270 |
| கவின் | 350 |

அகம்

| | |
|---|---|
| சுரம் | 212 |
| அரி | 236 |
| நரந்தை | 266 |

பதிற்

| | |
|---|---|
| முச்சி | 43 |

புறம்

| | |
|---|---|
| காமர் | 63 |

இவை, தமிழ்ச் சொற்களோ, அன்றி, வடமொழிச்சொற்களின் திரிபாதல் கூடுமோ என்பது ஐயத்திற்கு இடனுயுளது.

சீர்த்தி (சீர்+து+இ) (பதிற். 41) என்னுஞ் சொல், கீர்த்தி என்பதன் திரிபாகலாமாயினும்,

'சீர்த்தி மிகுபுகழ்' (உரி. 15)

என்று ஆசிரியர் தொல்காப்பியனர் கூறியிருத்தலின், தமிழ்ச்சொல்லாகக் கொள்ளப்பட்டது.

குருதி (குரு+து+இ) (பதிற். 49) என்பது, நன்னிறமுடையது என்னும் பொருளதாதலின், அதுவும் தமிழ்ச்சொல்லே யாகும்.

'குருவுங் கெழுவும் நிறனு கும்மே' (உரி. 5)

என்னும் தொல்காப்பியம் அறிக. இதனை, ருதிரம் என்னும் வடசொல்லின் திரிபு என்பது முறைமையாகாது; ருதிரம் என்பது, உதிரம் எனத் தமிழில் வழங்குகின்றது.

குருசில் (புறம். 341) என்பது, குருஸ்ரீ என்னும் வடசொற்றிரிபு என்பாரும் உளர். நன்னூலார் ஆண்பாற் பெயர்களைக் கூறுமிடத்து,

'விடலை கோவேள் குருசில் தோன்றல்
இன்னன ஆண்பெய ராகும் என்ப' (பெய. 19)

என்று கூறியிருத்தலின், இதுவும் தமிழ்ச்சொல்லே என்று கோடல் அமைதியாகும்.

இதுகாறும், பரணரைக் குறித்து வழங்குங் கதைகளும், அவர் வரலாறும், அவர் இயற்றிய செய்யுட்களும், அச் செய்யுட்களிற் காணும் பலதிறப்பட்ட பொருள்களும், சொற்களும் ஒருவகையான் ஆராயப்பட்டன. இவ் வாராய்ச்சியினல், பரணர் வரலாறும், அவர் புலமைத்திறனும், அவரது செய்யுட்களிற் காணும் பலவகைப் பொருள்களும், பிறவும் நன்கு விளங்குவனவாகும்.

---

## பரணர் பாட்டுக்கள்

### [உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி]

1. வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப்போன்றன
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ [1]இலக்கம் போன்றன
மாவே, எறிபதத்தான் இடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்
எருத்துவவ்விய புலிபோன்றன
[2]களிறே, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, அலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவுதோன்றி
மாக்கடல் நிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ
அனையை யாகன் மாறே
தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே. (புறம். 4)

திணை - வஞ்சி ; துறை - கொற்றவள்ளை.

### [சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி, சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதன்]

2. எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி
விளைக்கும்வினை யின்றிப் படையொழிந் தனவே
விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்
மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட் டனவே

---

1. 'இலக்குப்போன்றன' என்றிருப்பின், இருசீரடி ஆகும்.

2. 'களிறு' என்னும் பாடமே தொல்காப்பிய உரையாசிரியர்களால் காட்டப்பட்டுளதாயினும், மாவே, நீயே என்று முன்னும் பின்னும் வந்துள்ள தனிச்சொற்களை நோக்கி, களிறே என்னும் பாடம் ஈண்டுக் கொள்ளப் பட்டது.

தேர்தர வந்த சான்றோ ரெல்லாந்
தோல்கண் மறைப்ப ஒருங்குமாய்ந் தனரே
விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குந ரின்மையின் இருந்துவிளிந் தனவே
சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென
[1]வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர் இனியே
என்னா வதுகொல் தானே கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவல் முக்கித் தண்புனற் பாயும்
யாண ரறாஅ வைப்பிற்
காமர் கிடக்கை அவ ரகன்றலை நாடே. (புறம். 63)

திணை - தும்பை ; துறை - தொகைநிலை.

[கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன்]

3. இரும்புமுகஞ் செறித்த ஏந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவர் எறிவன ருயர்த்த
வாள்மின் னாக வயங்குகடிப் பமைந்த
குருதிப் பலிய முரசுமுழக் காக
அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
ஈரச் செறுவயின் தேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டி
நின், செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதம் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை

---

1. ‘அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
உரைசால் சிறப்பின் முரைசொழிந் தனவே’ (புறம். 62)

என்று, கழாத்தலையார் பாடியிருத்தல் இதனை வலியுறுத்தும்.

[1]அரிக்குரற் றடாரி உருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயும் இமிழிசை யருவிப்
[2]பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
ஓடை நுதல ஒல்குத லறியாத்
துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே. (புறம். 369)

திணை - வாகை ; துறை - மறக்களவழி.

4. புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுநிய
வணரமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவும்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்
கைவல் இளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்
மழைபெயல் மாறிய கழைதிரங் கத்தம்
ஒன்றிரண் டலபல கழிந்து திண்டேர்
வசையில் நெடுந்தகை காண்குவந் திசினே
தாவ லுய்யுமோ மற்றே தாவாது
வஞ்சின முடித்த ஒன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ்சமத் தரசுபடக் கடந்து
வெவ்வ ரோச்சம் பெருகத் தெவ்வர்
மிளகெறி யுலக்கையி னிருந்தலை யிடித்து
வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பின்
எடுத்தே றேய கடிப்புடை வியன்கண்
வலம்படு சீர்த்தி யொருங்குட னியைந்து

---

1. ‘அரிக்குரற் றடாரி இரிய வொற்றி’ (புறம். 390)

2. ‘பொற்கோட் டிமயமும்’ (புறம். 2)

காலுளேக் கடும்பிசி ருடைய வாலுளேக்
கடும்பரிப் புரவி யூர்ந்த
நின், படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே. (பதிற். 41)

துறை - காட்சிவாழ்த்து.

5. இரும்பனம் புடையல் ஈகை வான்கழல்
மீன்றேர் கொட்பிற் பனிக்கயம் மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
யன்னோர் பெரும நன்னுதல் கணவ
அண்ணல் யானை அடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கைத்
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து
கோடியர் பெருங்கிளை வாழ ஆடியல்
உளையவிர் கலிமாப் பொழிந்தவை எண்ணின்
மன்பதை மருள அரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணியர்
ஒளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்த
நின், தேரொடு சுற்றம் உலகுடன் மூய
மாயிருந் தெண்கடன் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசிர் உடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே. (பதிற். 42)

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

6. கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசன் மேவற் சேயிழை மகளிர்
உரல்போற் பெருங்கால் இலகுவான்[1] மருப்பிற்
பொருங்கை மதமாப் புகுதரின் அவற்றுள்
விருந்தின் வீழ்பிடி எண்ணுமுறை பெறாஅக்
கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை அரசர்

1. 'இலகுவான் மருப்பின்' என்றிருக்கத் தகுவது.

முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
இரும்பனை திரங்கப் பெரும்பெயல் ஒளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ
அருவி யற்ற பெருவறற் காலையும்
அருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடியேர் பூட்டுநர் கடுக்கை மலைய
வரைவி லதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்
தார்கலி வானம் தளிசொரிந் தாஅங்
குறுவ ரார ஓம்பா துண்டு
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி யுழிஞை
வென்றி மேவல் உருகெழு சிறப்பிற்
கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே என்றும்
இகல்வினை மேவலை ஆகலிற் பகைவருந்
தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவின்
தொலையாக் கற்ப நின் னிலைகண் டிகுமே
நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறியா ஏரு ஏணி
நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தே நின் கலிமகி ழானே. (பதிற். 43)

துறை - இயன்மொழிவாழ்த்து.

7. நிலம்புடைப் பன்ன ஆர்ப்பொடு விசும்புதுடையூ
வான்றோய் வெல்கொடி தேர்மிசை நுடங்கப்
பெரிய ஆயினும் அமர்கடந்து பெற்ற
அரிய என்னு தோம்பாது வீசிக்
கலஞ்செலச் சுரத்த லல்லது கவினுங்
களைகென அறியாக் கசடில் நெஞ்சத்
தாடுநடை யண்ணல்நிற் பாடுமகள் காணியர்
காணி லியரோ நிற் புகழ்ந்த யாக்கை
முழுவலி துஞ்சும் நோய்தபு நோன்றொடை

நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை
சேணா ராயினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்
கரண்கடா வுறீஇ அணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரற்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை
முரசுடைத் தாயத் தரசுபல வோட்டித்
துளங்குநீர் வியலகம் ஆண்டினிது கழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே. (பதிற். 44)

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

8. பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவின் ஒடுங்கிய அம்பின்
ஒசிவுடை வில்லின் ஒசியா நெஞ்சின்
களிறெறிந்து முறிந்த கதுவா யெஃகின்
விழுமியோர் துவன்றிய அகன்க ணாட்பின்
எழுமுடி மார்பின் எய்திய சேரல்
குண்டுக ணகழிய மதில்பல கடந்து
பண்டும் பண்டுந் தாம் உள்ளழித் துண்ட
நாடுகெழு தாயத்து நனந்தலை யருப்பத்துக்
கதவங் காக்குங் கணையெழு அன்ன
நிலம்பெறு திணிதோள் உயர ஓச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடிச்
சோறுவே றென்னா ஊன்றுவை அடிசில்
ஓடாப் பீடர் உள்வழி யிறுத்து
முள்ளிடு பறியா ஏணித் தெவ்வர்
சிலைவிசை யடக்கிய மூரி வெண்டோ
லனைய பண்பிற் றானை மன்னர்
இனியா ருளரோ நின் முன்னும் இல்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடன் மறுத்திசி னோரே. (பதிற். 45)

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

9. இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி இலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபின் உழிஞை பாட
இனிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்
சுரம்பல கடவுங் கரைவாய்ப் பருதி
யூர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்
பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்
டுடைதிரைப் பரப்பிற் படுகடல் ஓட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண் டோர்
செல்குவம் என்னார் பாடுபு பெயர்ந்தே. (பதிற். 46)

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

10. அட்டா னானே குட்டுவன் அடுதொறும்
பெற்றா னாரே பரிசிலர் களிறே
வரைமிசை யிழிதரும் அருவியின் மாடத்து
வளிமுனை அவிர்வருங் கொடிநுடங்கு தெருவிற்
சொரிசுரை கவரும் நெய்வழி புராலிற்
பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல
நன்னுதல் விறலியர் ஆடுந்
தொன்னகர் வரைப்பினவ னுரையா னவே. (பதிற். 47)

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

11. பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினின் ஈயுங்
கல்லா வாய்மையன் இவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை
முனைசுடு கனையெரி எரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுல
பல்பொறி மார்ப நின் பெயர்வா ழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடன் மண்டு

மலிபுனல் நிகழ்தருந் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமோ டுண்டினிது நுகருந்
தீம்புன லாய மாடுங்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே. (பதிற். 48)

துறை - இயன்மொழி வாழ்த்து.

12. யாமுஞ் சேறுகம் நீயிரும் வம்மின்
துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்
கொளைவல் வாழ்க்கை நுங் கிளையினி துணீஇயர்
களிறுபரந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
எஃகுதுரந் தெழுதருங் கைகவர் கடுந்தார்
வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோகூர்
வலம்படு குழூஉநிலை அதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலின் அவற்பரந் தொழுகப்
படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரசம் நடுவண் சிலைப்ப
வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே. (பதிற். 49)

துறை - விறலியாற்றுப்படை.

13. மாமலை முழக்கின் மான்கணம் பனிப்பக்
கான்மயங்கு கதழுறை ஆலியொடு சிதறிக்
கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய
வளங்கெழு சிறப்பின் உலகம் புரைஇச்
செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்
காவிரி யன்றியும் பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூட லனையை
கொல்களிற், றுரவுத்திரை பிறழ வவ்வில் பிசிரப்
புரைதோல் வரைப்பின் எஃகுமீன் அவிர்வர
விரவுப்பணை முழங்கொலி வெரீஇய வேந்தர்க்
கரண மாகிய வெருவரு புனற்றார்
கல்மிசை யவ்வுங் கடலவும் பிறவும்
அருப்பம் அமைஇய அமர்கடந் துருத்த

வாண்மலி மருங்கின் நாடகப் படுத்து
நல்லிசை நனந்தலை இரிய ஒன்னார்
உருப்பற நிரப்பினை யாதலிற் சாந்துபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற
வரிமிஞிறு ஒிமிரும் மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து
கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொண் மரபின் மென்பிணி அவிழ
எவன்பல கழியுமோ பெரும பன்னாட்
பகைவெம் மையிற் பாசறை மரீஇப்
பாடரி தியைந்த சிறுதுயில் இயலாது
கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்
பீடுகெழு செல்வம் மரீஇய கண்ணே. (பதிற். 50)

துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.

வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்
கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
கானவில் கானங் கணையிற் போகி
ஆரிய அண்ணலை வீட்டிப் பேரிசை
இன்ப லருவிக் கங்கை மண்ணி
இனந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வில் இடும்பிற் புறத்திறுத்
துறுபுலி யன்ன வயவர் வீழச்
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி
அக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து
பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்
முரரை முழுமுதல் துமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தன் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல்
ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோ
ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்துக்
கெடலருந் தானை யொடு
கடல்பிறக் கோட்டிய செங்குட் டுவனைக்
காணம் அமைந்த காசறு செய்யுட்
பாணர் பாடினர் பத்துப் பாட்டு.

—ஐந்தாம் பத்தின் பதிகம்.

14. மீனெடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குறுந்து
கலந்தந்த பொற்பரிசங்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழங்குகடன் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையலள் இவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட இறுத்த ஏணி ஆயிடை
வருந்தின்று கொல்லோ தானே பருந்துயிர்த்
திடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுநெ லூரே. (புறம். 343)

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற் காஞ்சி.

15. தாவில் நன்பொன் தைஇய பாவை
விண்டவழ் இளவெயில் கொண்டுநின் றன்ன
மிகுகவின் எய்திய தொகுகுரல் ஐம்பாற்
கிளையரில் நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன [1]முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன் தைவருஞ் செவ்வழி [2]நல்யா
ழிசையோர்த் தன்ன இன்றீங் கிளவி
[3]அணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற்
றினம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
பெறலருங் குரையள் என்னுப் வைகலும்
இன்னா அருஞ்சுரம் நீந்தி நீயே
என்னை இன்னற் படுத்தனை [4]மின்னுவசி
புரவுக்கால் கடுப்ப மறலி மைந்துற்று

1. முள்ளெயிற்றுத் துவர்வாய் (அகம். 39)
2. வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே (அகம். 142)
3. அணங்குசால் அரிவை (அகம். 181)
4. அழற்கொடி யன்ன மின்னு வசிபு (அகம். 162)
மின்னு வசிபு (நற். 228, அகம். 322)

விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா விலங்கும் கடன்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய
நீர்மாண் எஃகம் நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மதன் அழியரோ நெஞ்சே ஆனா
தெளிய ளல்லோட் கருதி
[1]விளியா எவ்வந் தலைத்தந் தோயே. (அகம். 212)

அல்லகுறிப்பட்டு நீங்குந்தலைமகன், தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

[வையாவிக் கோப் பெரும்பேகன்]

16. பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை இருந்தனிர்
யாரீ ரோஎன வினவ லானாக்
காரென் ஒக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே இனியே
இன்னே மாயினேம் மன்னே என்றும்
[2]உடாஅ போரா ஆகுத லறிந்தும்
படாஅம் மஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர், வறுமை நோக்கின் றவன் கைவண் மையே.
(புறம். 141)

திணை - பாடாண் திணை ; துறை - பாணாற்றுப்படை ; புலவராற்றுப்படையுமாம்.

17. அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நிலம் ஊட்டியும்

---

1. 'ஆனா அரும்படர் தலைத்தந் தோயே' (அகம். 258.)
2. புறம். 145-ஆம் பாட்டுப் பார்க்க.
'கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திற லணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும்' (சிறுபாண். 85-87)

வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படாஅன் பிறர் படைமயக் குறினே.
திணை - பாடாண் ; துறை - இயன்மொழி. (புறம். 142)

18. அருளா யாகலோ கொடிதே இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணகம் நனைப்ப
இனைத லானு ளாக இளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனெம் வினவக் காந்தண்
முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேம் கேளினி
எம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென ஒலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே. (புறம். 144)
திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி ; தாபதநிலையுமாம்.

19. மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமும் இலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோய்என
இஃதியா மிரந்த பரிசிலஃ [1]திருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே. (புறம். 145)
திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி ; தாபதநிலையுமாம்.

[கரிகால் வளவன்]

20. [2]அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி

---

1. 'அருளின்' என்றிருப்பின் பொருள் சிறக்கும்.
2. 'அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை' (அகம். 6.)
'அரம்போ ழவ்வளை செறிந்த முன்கை' (அகம். 349.)

இரங்கா முன்ன அரும்புமுதிர் ஈங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
[1]படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅம் மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய ஓங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுட் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை ஆடுபெற
ஒன்பது குடையும் நன்பக லொழித்த
பீடில் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ எமக்கே. (அகம். 125)

தலைமகன் வினைமுற்றி மீண்டமை தோழி உணரத்
தலைமகள் சொல்லியது.

21. [2]பிணர்மோட்டு நந்தின் பேழ்வா யேற்றை
கதிர்மூக் காரல் கள்வ னுகம்
நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்
மலிநீ ரகல்வயல் யாண ரூர
போதார் கூந்தல் நீவெய் யோளொடு
தாதார் காஞ்சித் தண்பொழி லகல்யா
ருடினை என்ப நெருநை அலரே
காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்

1. 'படாஅப் பைங்கட் பாடுபெற்று' (அகம். 102.)
2. 'கதிர்க்கோடு நந்தின் சுரிமுக ஏற்றை
நாகிள வளையொடு பகல்மணம் புகூஉம்
நீர்திகழ் கழனி நாடு' (புறம். 266)

என்பது ஈண்டு அறியத்தகும்.

இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூ ரார்ப்பினும் பெரிதே. (அகம். 246)

தோழி, தலைமகற்கு வாயில் மறுத்தது.

[ஆட்டன் அத்தி ; ஆதிமந்தி]

22. மண்கணை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை யூரனெஞ் சேரி வந்தென
[1]இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு
நன்கலன் ஈயும் நாண்மகி ழிருக்கை
அவைபுகு பொருநர் பறையின் ஆனாது
கழறுப என்ப அவன் பெண்டிர் அந்திற்
கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் காண்டி ரோஎன
ஆதி மந்தி பேதுற் றினையச்
சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்
அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே. (அகம். 76)

தலைமகனை நயப்பித்துக்கொண்டாள் என்று கழறக் கேட்ட
பரத்தை, தலைமகட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

23. வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்
மேனி ஆய்கலந் தொலைதலின் மொழிவேன்
முழவுமுகம் புலராக் கலிகொள் ஆங்கட்
கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்டன் அத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னாள்

1. 'இன்கடுங் கள்ளின் அஃதை' (குறுந். 298.)

உரவுரு மேனொடு மயங்கி
இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்த ணூறே. (அகம். 222)

தலைமகன் சிறைப்புறத்தானகத் தோழி, தலைமகட்குச்
சொல்லியது.

24. மணிமருள் மலர முள்ளி யமன்ற
துணிநீ ரிலஞ்சிக் கொண்ட பெருமீன்
அரிநிறக் கொழுங்குறை வவ்வினர் மாந்தி
வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை
இடனில நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு [1]காய்ப்புறம் வரிப்பக் கழனிக்
கருங்கோட்டு மாஅத் தலங்குசினைப் புதுப்பூ
[2]மயங்குமழைத் துவலையிற் றூஅம் ஊரன்
காமம் பெருமை யறியேன் நன்றும்
உய்ந்தனென் வாழி தோழி அல்கல்
அணிகிளர் சாந்தின் அம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
அறியா மையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றியல் எழினடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்டன் அத்தியைக் காணீ ரோஎன
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரிற்
கடல்கொண் டன்றெனப் புனலொழிந் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
ஆதி மந்தி போல
ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே. (அகம். 236)

ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன்நீக்கத்துக்கண் புக்க
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

25. செல்லன் மகிழ்நிற் செய்கட னுடையென்மன்
கல்லா யானை கடிபுனல் கற்றென
மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை
ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை
ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
கருங்கச் சியாத்த காண்பின் அவ்வயின்
திரும்பொலம் பாண்டின் மணியொடு தெளிர்ப்பப்

1. 'காய்நேற் படப்பை' (அகம். 204.)
2. 'வரைசேர் மராஅத் தூழ்மலர் பெயல்சேந்து' (அகம். 199.)

புனனயந் தாடும் அத்தி யணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு மன்னே
நும்வயிற் புலத்தல் செல்லேம் எம்வயிற்
பசந்தின்று காண்டிசின் நுதலே அசும்பின்
[1]அந் தூம்பு வள்ளை யழற்கொடி மயக்கி
வண்டோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்
துய்த்தலை முடங்கிறாத் தெறிக்கும் பொற்புடைக்
குரங்குளைப் புரவிக் குட்டுவன்
மாந்தை யன்னஎன் நலந்தந்து சென்மே. (அகம். 376)

காதற்பரத்தை புலந்து சொல்லியது.

[ஆய் எயினன் ; மிஞிலி]

26. தொடுத்தென் மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் [2]புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்ச லென்ற ஆஅ யெயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன், உயிர்கொடுத் தனனே சொல்லிய தமையாது
தெறலருங் கடவுள் முன்னர்த் தோற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்
தார்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்ப
நின், மார்புதரு கல்லாய் பிறனா யினையே
இனியான் விடுக்குவெ னல்லென் மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந் துறையக்
கடுந்திற லத்தி ஆடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்கு
நின், மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ
ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னஎன் நலந்தந்து சென்மே. (அகம். 396)

காதற்பரத்தை, தலைமகற்குச் சொல்லியது.

27. இலமலா் அன்ன அஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறைபருந் தானை வெல்போர் மாந்தரன்

1. 'அந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி' (அகம். 6.)
2. 'புன்னாடு கடிந்தென' என்பதும் பாடம்.

பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே காதலி
முறையியல் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை எயினற் கொன்றுவந்
தொள்வா ளமலை யாடிய ஞாட்பிற்
பலரறி வுறுதல் அஞ்சிப் பைப்பய
நீர்த்திரள் கடுக்கும் மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறையறு லன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
[1]கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்
துருவுகிள ரேர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து
பெயலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
இயலெறி பொன்னிற் கொங்குசோர் புறைப்பத்
தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பின் தீவிய மொழிந்தே. (அகம். 142)

இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[ஆய் எயினன் ; மிஞிலி ; கூகை]

28. பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கைக்
கொலைச்சினந் தவிரா மதனுடை முன்பின்
வண்டுபடு கடாஅத் துயர்மருப் பியானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி
உறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வும் நாட
கடும்பரிக் குதிரை ஆஅ யெயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
கடும்பகல் வழங்கா தாஅங் கிடும்பை
பெரிதா லம்ம இவட்கே அதனால்
மாலை வருதல் வேண்டும் சோலை

1. மீன்கண் துஞ்சும் பொழுதும் (நற். 319.)

முளைமேய் பெருங்களிறு வழங்கும்
மலைமுத லடுக்கத்த சிறுகு லாறே. (அகம். 148)

பகல் வருவானை இரவு வருக என்றது.

[மிஞிலி ; ஆய் எயினன்]

29. [1]துன்னருங் கானமுந் துணித லாற்றாய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயின்
என்னிலை யுரைமோ நெஞ்சே ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
அடுபோர் மிஞிலி செருவிற் கூடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
[2]ஆஅ யெயினன் வீழ்ந்தென ஞாயிற்
றொண்கதி ருருப்பம் புதைய வோராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
விசும்பிடை தூர ஆடி மொசிந்துடன்
பூவிரி யகன்றுறைக் கணைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேர்யாற் றயிர்கொண் டீண்டி
எக்க ரிட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்
ஞாலம் நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வ
னால முற்றங் கவின்பெறத் தைஇப்
[3]பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்
கைசெய் பாவை துறைக்க ணிறுக்கும்
மகர நெற்றி வான்றோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்டம் நாறும் வண்டட ரைம்பாற்
பணைத்தகைத் தடைஇய காண்பின் மென்றோள்
[4]அணங்குசா லரிவை இருந்த
மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே. (அகம். 181)

இடைச்சுரத்து ஒழியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது.

---

1. ‘துன்னருங் கானம்’ (அகம். 77.)
2. ‘வண்மை எயினன்’ என்பதும் பாடம்.
3. ‘வண்டற் பாவை யுண்டுறைத் தரீஇத்
திருநுதன் மகளிர் குரவை அயரும்
பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை.’ (அகம். 269.)
4. ‘அணங்குசால் அரிவையை’ (அகம். 114.)

[மிஞிலி]

30. இறவுப்புன் மேய்ந்த வறுகோட்டு முற்றல்
அள்ள லாடிய புள்ளி வரிக்கலை
வீளை யம்பின் வில்லோர் பெருமகன்
பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்
பாரத் தன்ன ஆர மார்பிற்
சிறுகோற் [1]சென்னி யாரேற் றன்ன
மாரி வண்மகிழ் [2]ஓரி கொல்லிக்
கலிமயிற் கலாவத் தன்ன இவ
ளொலிமென் கூந்தல் நம்வயி னானே. (நற். 265.)

பின்னின்ற தலைமகன் நெஞ்சிற்கு உரைத்தது.

[மிஞிலி, நன்னன்]

31. யாம இரவில்[3] நெடுங்கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோ லகவுநர் வேண்டின் வெண்கோட்
டண்ணல் யானை ஈயும் வண்மகிழ்
வெளியன் வேண்மான் ஆஅ யெயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை இயறேர் மிஞிலியொடு
நண்பக லுற்ற செருவிற் புண்கூர்ந்
தொள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்
கங்கண் விசும்பின் விளங்கும் ஞாயிற்
றொண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்
துருவினை நன்னன் அருளான் கரப்பப்
பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தா ரருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு மிகுபெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே ஓரி




1. 'சென்னியர்' என்றிருக்கவேண்டும் போலும்.
2. 'ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி'. (அகம். 208.)
3. 'விரிகதிர், வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்'. (பொருந. 71, 72.)

பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்நுண் ணோதி மாஅ யோளே. (அகம். 208.)

புணர்ந்து நீங்குந் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[அகுதை]

32. சேரி சேர மெல்ல வந்துவந்
தரிது வாய்விட் டினிய கூறி
வைகல் தோறும் நிலம்பெயர்ந் துறையுமவன்
பைதல் நோக்கம் நினையாய் தோழி
இன்கடுங் கள்ளின் அகுதை தந்த
வெண்கடைச் [1]சிறுகோ லகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசில் மானப்
பிறிதொன்று குறித்த தவன் நெடும்புற நிலையே.
(குறுந். 298.)

கிழத்திக்குத் தோழி குறைமறுமற் கூறியது.

[கோசர் ; நன்னன்]

33. மகிழ்நன் மார்பே வெய்யை யானீ
அழியல் வாழி தோழி நன்ன
னறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே. (குறுந். 73.)

பகற்குறி மறுத்து, இரவுக் குறி நேர்ந்து, அதனையும் மறுத்தமைபடத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

[நன்னன்]

34. மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை
ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ இலளே. (குறுந். 292.)

தோழி இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகக் காப்பு மிகுதி சொல்லியது.

35. தடந்தாட் டாழைக் குடம்பை நோனுத்
தண்டலை கமழும் வண்டுபடு நாற்றத்

---

1. 'நுண்கோ லகவுநர்'. (அகம். 152.)

திருள்புரை கூந்தற் பொங்குதுக ளாடி
[1]உருள்பொலி போல வெம்முனை வருந்தல்
அணித்தகை யல்லது பிணித்தல் தேற்றாப்
பெருந்தோட் செல்வத் திவளினும் எல்லா
எற்பெரி தளித்தனை நீயே பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்த ரோட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தன் முரற்சியிற் கொடிதே
மறப்பன் மாதோ நின் விறற்றகை மையே. (நற். 270.)

தோழி வாயில்நேர்கின்றாள், தலைமகனை நெருங்கிச் சொல்லி, வாயில் எதிர்கொண்டது, உடனிலைக்கிளவி வகையால்.

[தித்தன் வெளியன் ; பிண்டன் முதலியோர்]

36. நெஞ்சுநடுங் கரும்படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறா ராங்கட்
செலீஇய பெயர்வோள் வணர்சுரி யைம்பால்
நுண்கோ லகவுநர்ப் புரந்த பேரிசைச்
சினங்கெழு தானைத் தித்தன் வெளிய
னிரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்குஞ்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்ட
னுன்முரா னுடையக் கடந்த வென்வேல்
இசைநல் லீகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவ னா [2]நன்ன
னேழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத் தன்ன தோளே
வல்வி லிளையர் பெருமகன் நள்ளி
சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த
கடவுட் காந்த ளுள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி
வல்லினும் வல்லா ராயினும் சென்றோர்க்குச்
சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும்

1. 'உருள்பொறி போல' என்றிருக்கலாம் போலும்.
2. 'நன்ன னன்னாட், டேழிற் குன்றத்து.' (அகம். 394.)
'பொன்படு கொண்கான நன்ன னன்னாட், டேழிற் குன்றம்'. (நற். 391.)

மாஅல் யானை ஆஅய் கானத்துத்
தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
[1]வேயமைக் கண்ணிடை புரைஇச்
சேய வாயினும் நடுங்குதுயர் தருமே. (அகம். 152.)

இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[வேளிர்.]

37. நன்ன னுதிய [2]னருங்கடிப் பாழித்
தொன்முதிர் [3]வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற் கறிந்தும் அன்னோட்
டுன்னலம் மாதோ எனினுமஃ தொல்லாய்
தண்மழை தவழுந் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற் றெடுக்கு நெடும்பெருங் குன்றத்து
மாய விருளளை மாய்கற் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே நாளும்
மெல்லியற் குறுமக ளுல்லகம் நசைஇ
அரவிரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவி னெய்தியும் பெறுஅய் அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்
துள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமங் கைம்மிக வுறுதர
ஆனா வரும்படர் தலைத்தந் தோயே. (அகம். 258.)

அல்லகுறிப்பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன், தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

38. திதலை மாமை தளிர்வனப் பழுங்கப்
புதலிவர் பீரி னெதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலே னாகி
எழுதெழின் மழைக்கண் கலுழ நோய்கூர்ந்
தாதி மந்தியின் அறிவுபிறி தாகிப்
பேதுற் றிசினே காதலந் தோழி
காய்கதிர் திருகலிற் கனைந்துகால் கடுகி

---

1. ‘காம்பின், கண்ணிடை புரையும் நெடுமென் பணைத்தோள்’. (அகம். 271.)

2. ‘குழி யானைச் சுடர்ப்பூண் நன்னன்
பாழி யன்ன கடியுடை வியனகர்’. (அகம். 15.)

3. ‘பாழி யாங்கண்
வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த
அருங்கல வெறுக்கையின் அரியோள்’. (அகம். 372.)

ஆடுதளி [1]ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கின் அறைமிசைத் தாஅங்
காடிறந் தனரே காதலர் அடுபோர்
வீயா விழுப்புகழ் விண்டோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
[2]கழுவுள் காமூர் போல
விளிந்தன் றுமா தவர்த் தெளிந்தவெ னெஞ்சே. (அகம். 135.)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள், தோழிக்குச் சொற்றது.

39. கொக்கினுக் கொழிந்த தீம்பழங் [3]கொக்கின்
கூம்புநிலை யன்ன முகைய ஆம்பற்
றூங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழுந்
தண்டுறை யூரன் தண்டாப் பரத்தமை
புலவா யென்றி தோழி புலவேன்
பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுடுநந் துடைக்குந்
[4]தொன்றுமுதிர் வேளிர் குன்றூ ரன்னஎன்
நன்மனை நனிவிருந் தயருங்
கைதூ வின்மையின் எய்தா மாறே. (நற். 280.)

வாயில் வேண்டிச் சென்ற தோழிக்குத் தலைமகள் மறுத்து மொழிந்தது. தலைமகனை ஏற்றுக்கொண்டு வழிபட்டாளைப் புகழ்ந்துபுக்க தோழிக்கு, தலைமகள் சொல்லியதூஉமாம்.

## தித்தன் வெளியன்.

40. உணர்குவெ னல்லேன் உரையனின் மாயம்
நாணிலை மன்ற யாண ரூர
அகலு ளாங்கண் அம்பகை மடிவைக்
குறுந்தொடி மகளிர் குரூஉப்புனல் முனையிற்

---

1. 'வெருக்கடி யன்ன குவிமுகி ழிருப்பை
மருப்புக்கடைந் தன்ன கொள்ளை வான்பூ'. (அகம். 267.)
'செங்குழை யிருப்பைக்
கோடுகடைந் தன்ன கொள்ளை வான்பூ'. (அகம். 331.)
'யாத்த தூணித் தலைதிறந் தவைபோற்
பூத்த இருப்பைக் குழைபொதி குவியிணர்
கழறாளை முத்திற் செந்நிலத் துதிர'. (அகம். 225.)
2. 'மாவண் கழுவுள் காமூ ராங்கண்'. (அகம். 365.)
3. 'மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பல்'. (நற். 100.)
4. 'தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்'. (குறுந். 164.)

பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்
வல்வி லெறுழ்த்தோட் பரதவர் கோமான்
[1]பல்வேல் மத்தி கழாஅர் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடியணி முன்கை நீவெய் யோளொடு
முன்னா ளாடிய கவ்வை இந்நாள்
வலிமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளிய னுறந்தை நாளவைப்
பாடின் தெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே. (அகம். 226.)

தலைமகற்கு, தோழி வாயின் மறுத்தது.

[பாணன், கணையன், ஆரியப்பொருநன்.]

41. [2]பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து
வாளை நாளிரை தேரும் ஊர
நாணினென் பெரும யானே பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
இறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் நாணி யாங்கு மறையினள்
மெல்ல வந்து நல்ல கூறி
மையீ ரோதி மடவோய் யானுநின்
சேரி யேனே அயலி லாட்டியேன்
நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்
தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர
நுதலுங் கூந்தலும் நீவிப்
பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே. (அகம். 386.)

தோழி, வாயில் மறுத்தது ; தலைமகட்குச் சொல்லியதுஉமாம்.

[அன்னிமிஞிலி, திதியன், கோசர்.]

42. நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து
நாட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅற்

---

1. 'பலவேல் மத்தி கழாஅர்'. (அகம். 6.)
2. 'பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉம் ஊர'. (ஐங்குறு. 63.)

றுடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி
வேட்ட மறந்துதுஞ்சுங் கொழுநர்க்குப் பாட்டி
ஆம்ப லகலிலே அமலே வெண்சோறு
தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து
விடியல் வைகறை இடூஉம் ஊர
தொடுகலம் குறுக வாரல் தந்தை
கண்கவி னழித்ததன் தப்பற் றெறுவர
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதிய னழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்
நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே. (அகம். 196.)

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி சொல்லியது.

43. முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்
இடுமுறை [1]நிரம்பிய வரகுவிளைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறு புக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்து முண்ணாள் வாலிதும் உடாஅள்
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவிய னன்மான் திதியற் குரைத்தவ
ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
அன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்
தானா வுவகையெ மாயினெம் பூமலிந்
தருவி யார்க்கும் அயந்திகழ் சிலம்பில்
நுண்பஃ றவலே புதன்மிசை நனைக்கும்
வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
கொண்டகன் மாமலை நாறி
யந்தீங் கிளவி வந்த மாறே. (அகம். 262.)

இரவுக்குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்குந் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## பசும்பூட் பாண்டியன்

44. கொளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்
தளப்பரி தாகிய குவையிருந் தோன்றல

1. ‘நிரம்பிய வரகுவிளை’ என்றிருக்கலாம் போலும்.

கடல்கண் டன்ன மாக விசும்பின்
அழற்கொடி யன்ன மின்னுவசிபு நுடங்கக்
கடிதிடி யுருமொடு கதழுறை சிதறி
விளிவிட னறியா வானுமிழ் நடுநாள்
[1]அருங்கடிக் காவல ரிகழ்பதம் நோக்கிப்
பனிமயங் கசைவளி அலைப்பத் தந்தை
நெடுநக ரொருசிறை நின்றனெ னாக
அறலென அவிர்வருங் கூந்தல் மலரென
வாண்முகத் தலமரு மாயிதழ் மழைக்கண்
[2]முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண் டிலங்கும் நலங்கெழு துவர்வாய்க்
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
காலுறு தளிரின் நடுங்கி ஆனாது
[3]நோயசா வீட முயங்கினள் வாய்மொழி
நல்லிசை தரூஉம் இரவலர்க் குள்ளிய
நசைபிழைப் பறியாக் கழறொடி அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் [4]பசும்பூட் பாண்டியன்
[5]களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர
ஒளிறுவன இழிதரும் உயர்ந்துதோன் றருவி
நேர்கொள் நெடுவரைக் கவாஅன்
சூரர மகளிரிற் பெறற்கரி யோளே. (அகம். 162.)

இரவுக்குறிக்கண், தலைமகளைக் கண்ணுற்று நீங்கிய தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

---

1. 'அருங்கடிக் காவலர் சோர்பத னொற்றி'. (அகம். 2.)
2. 'மௌவல் வான்முகைத்
   துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்'. (அகம். 21.)
3. 'நோயசா வீட முயங்குகம்'. (அகம். 47.)
4. 'பசும்பூட் செழியன்'. (புறம். 76.)
5. 'மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி
   வரைமிசை அருவியின் வயின்வயி னுடங்க. (பதிற். 76.)

   'பெருவரை யிழிதரு நெடுவெள் ளருவி
   ஓடை யானை யுயர்மிசை யெடுத்த
   ஆடுகொடி கடுப்பத் தோன்றும்
   கோடுயர் வெற்பன்'. (அகம். 358.)

45. கோடுற நிவந்த நீடிரும் பரப்பின்
அந்தீம் பராஅய்ப் புதுப்புனல் நெருநை
மைந்துமலி களிற்றிற் றலைப்புணை தழீஇ
நரந்தை நாறுங் குவையிருங் கூந்தல்
இளந்துணை மகளிரொ டீராணிக் கலைஇ
நீர்பெயர்ந் தாடிய ஏந்தெழின் மழைக்கண்
நோக்குதொறும் நோக்குதொறுந் தவிர்விலை யாகிக்
காமங் கைம்மிகச் சிறத்தலின் நாணிழந்
தாடினை யென்ப மகிழ்நனை அதுவே
யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வா [1]ளெவ்வி ஏவன் மேவார
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பெருந்திறல்
அரிமண வாயில் உறத்தூ ராங்கட்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி றுன்ன
கவ்வை யாகின்றாற் பெரிதே இனியஃ
தவல மன்றுமன் எமக்கே அயல
கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
அணங்குடை வரைப்பகம் பொலியவந் திறுக்குந்
திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொ டுற்ற சூளே. (அகம். 266.)

பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலைமகற்கு, தலைமகள் சொல்லியது.

[அதிகன் முதலியோர்]

46. மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள்தவச் சிலவே அலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் [2]கொங்க ரார்ப்பினும் பெரிதே. (குறுந். 393.)

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி அலர்மலி வுரைத்து வரைவு கடாயது.

---

1. 'பொலம்பூண் எவ்வி நீட லன்ன.' (அகம். 366.)
2. 'கொங்கரோட்டி
நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்.' (அகம். 253.)

என்பதனால், பாண்டியன் கொங்கரை வென்ற செய்தி அறியப்படுகின்றது.

[எவ்வி]

47. எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே [1]மனைமரத்
தெல்லுறு மௌவல் நாறும்
பல்லிருங் கூந்தல் [2]யாரளோ நமக்கே. (குறுந். 19.)

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண், தலைமகன் சொல்லியது.

[செழியன்]

48. எரியகைந் தன்ன தாமரை இடையிடை
அரிந்துகால் குவித்த [3]செங்நெல் வினைஞர்
கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறின்
ஆய்கரும் படுக்கும் பாய்புன லூர
பெரிய நாணிலை மன்ற [4]பொரியெனப்
புன்கவி ழகன்றுறைப் பொலிய ஒண்ணுதல்
நறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தல்
மாழை நோக்கின் காழின் வனமுலை
எஃகுடை யெழினலத் தொருத்தியொடு நெருநை
வைகுபுன லயர்ந்தனை என்ப அதுவே
பொய்புறம் பொதிந்தியாங் கரப்பவுங் கையிகந்
தலரா கின்றால் தானே மலர்தார்
மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவிற் கூடற் பறந்தலை
உடனியைந் தெழுந்த [5]இருபெரு வேந்தர்
கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி
இரங்கிசை முரசம் ஒழியப் பரந்தவ
ரோடுபுறங் கண்ட ஞான்றை
ஆடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே. (அகம். 116.)

தோழி, தலைமகனை வாயில் மறுத்தது.

---

1. 'மனைநடு மௌவல்' (நற். 115.)

2. 'யாருளர் நமக்கே' என்பது அச்சுப்புத்தகத்திற் காணும் பாடம். 'யாரளோ' என்பது, தொல்-மெய்ப். சூ. 22 உரையில் காணும் பாடாந்தரம்.

3. 'துளரெறி வினைஞர், அரிய லார்கையர்.' (அகம். 184.)

4. 'பொரிப்பூம் புன்கு'. (நற். 9.)

5. 'இருபெரு வேந்தரொடு வேளிர் சாயப், பொருதவரைச் செரு வென்றும்' (மதுரைக்-55-6) என்பதனால், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் வேந்தரிருவரை வென்றது அறியப்படுகின்றது.

[அழிசி, சேந்தன்]

49. வாரல்எஞ் சேரி தாரல்நின் தாரே
அலரா கின்றால் பெரும காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த
ஏந்துகோட் டியானைச் [1]சேந்தன் றந்தை
யரியலம் புகவி னங்கோட்டு வேட்டை
நிரைய ஒள்வா ளிளையர் பெருமகன்
அழிசி யார்க்கா டன்ன இவள்
பழிதீர் மாணலந் தொலைதல் கண்டே. (குறுந். 258.)

தோழி, தலைமகற்கு வாயில் மறுத்தது.

[தித்தன்]

50. இரும்பிழி மாரி [2]யழுங்கல் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகும்
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோ ளருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பும்
எல்லா மடிந்த காலை ஒருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே
அதனால், அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்
[3]தாதி போகிய பாய்பரி நன்மான்

1. 'சேந்தன்றந்தை, தேங்கமழ் விரிதார் இயறேர் அழிசி,...ஆர்க்காடு.' (நற். 190.)

2. 'சேறுசெய் மாரியின் அளிக்குநின், சாறுபடு திருவின் நனைமகிழானே.' (பதிற். 65.)

3. 'ஆதிக் கொளீஇ யசைவினை யாகுவை.' (கலி. 96.)

நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றால் தோழி நங் களவே. (அகம். 122.)

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்றது. தோழி சொல்லெடுப்ப, தலைமகள் சொல்லியதூஉமாம்.

51. தேளங்கொண்ட வெண்மண்டையான்
வீ..........................கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதன்முல்லைப் பூப்பறிக்குந்து
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புறவாயாற் புனல்வள............
..................நொடைநறவின்
மாவண் தித்தன் வெண்ணெல் வேலி
உறந்தை யன்ன உரைசால் நன்கலம்
கொடுப்பவுங் கொளா அனெ.........
.................ர்தந்த நாகிள வேங்கையிற்
கதிர்த்தொளி திகழும் நுண்பல் சுணங்கின்
மாக்கண் மலர்ந்த முலையள் தன்னையுஞ்
சிறுகோ லுளையும் புரவிெ............
...........................யமரே. (புறம். 352.)

திணை-காஞ்சி ; துறை-மகட்பாற்காஞ்சி.

[மத்தி, தித்தன் (ஐயை)]

52. அரிபெய் சிலம்பின் ஆம்பலந் தொடலை
அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
இழையணி பணைத்தோ ளையை தந்தை
மழைவளந் தரூஉம் மாவண் தித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை யாங்கட்
கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தம்
குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்
கேந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே இன்றவட்
தாக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் றாய்என

மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி
எம், முதுமை யெள்ளல் அஃ தமைகும் தில்ல
சுடர்ப்பூர் தாமரை நீர்முதிர் பழனத்
தந் தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேல் மத்தி கழாஅ ரன்ன
எம், இளமை சென்று தவத்தொல் லஃதே
[1]இனிமையெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே.
(அகம். 6.)

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகற்குக் கிழத்தி கூறியது.

[மலையன்]

53. உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்ளுகிர்
[2]மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
தேங்கம ழைம்பால் பற்றி என்வயின்
வான்கோல் எல்வளை வவ்விய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட் குரைப்பல் என்றலின் முனையூர்ப்
[3]பல்லா னெடுநிரை வில்லின் ஒய்யுந்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்களுர் நிலையே. (நற். 100.)

பரத்தை, தலைவிக்குப் பாங்காயினர் கேட்ப, விறலிக்குடம்படச் சொல்லியது.

[ஓரி]

54. பெறுவ தியையா தாயினும் உறுவதொன்
றுண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்

1. 'இனியெவன் செய்வது' என்றிருப்பின் சிறக்கும்.

2. 'கொக்கின்
கூம்புநிலை யன்ன முகைய ஆம்பல்.' (நற். 280.)
'கொக்கின் கூம்புமுகை யன்ன
கணைக்கா லாம்பல்.' (நற். 230.)

3. 'முள்ளூர் மன்னன் மாவூர்க்
தெல்வித் தரீஇய இனநிரைப்
பல்லான் கிழவர்.' (நற். 291.)

[1]கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழும் நெறிபடு கூந்தன்
மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை யன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை யெனவொன் றின்றி
மறுமை யுலகத்தும் மன்னுதல் பெறினே. (குறுந். 199.)

தோழி செறிப்பு அறிவுறுப்ப, நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

55. நீர்வளை ராம்பற் றாம்புடைத் திரள்கால்
நாருரித் தன்ன மதனில் மாமைக்
குவளை யன்ன ஏந்தெழின் மழைக்கட்
டிதலை யல்குற் பெருந்தோட் குறுமகட்
கெய்தச் சென்று செப்புநர்ப் பெறினே
இவர்யா ரென்குவ ளல்லள் முனாஅ
தத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சி யாகும்
வல்வில் லோரி கானம் நாறி
இரும்பல் லொலிவருங் கூந்தல்
பெரும்பே துறுவள்யாம் வந்தன மெனவே. (நற். 6.)

இரவுக்குறிப்பாற்பட்டு ஆற்றானாய தலைவன், தோழி கேட்பத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[போறையன்]

56. [2]அயத்துவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கும் எயிறுகெழு துவர்வாய்
ஆகத் தரும்பிய முலையள் பணைத்தோள்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிற் புணர்பிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்செலற் கருமையிற்
கடும்புனன் மலிந்த காவிரிப் பேர்யாற்று
நெடுஞ்சுழி நீத்த மண்ணுநீர் போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருநல்

---

1. 'மாவள் ளோரி, கைவளம்.' (நற். 52.)
'வல்வில் லோரி கானம் நாறி.' (நற். 6.)

2. 'முத்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கும் எயிறுகெழு துவர்வாய்.' (அகம். 27.)
'எயிறுகெழு துவர்வாய்.' (அகம். 29.)

ஆகம் அடைதர் தோளே வென்வேற்
களிறுகெழு தானைப் [1]பொறையன் கொல்லி
ஒளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
கடவு ளெழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே. (அகம். 62.)

அல்லகுறிப்பட்டுழி, தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

57. குணகடற் றிரையது பறைதபு நாரை
[3]திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
சேய ளரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே. (குறுந். 128.)

அல்லகுறிப்பட்டு மீளுந் தலைமகன், தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது.

[பெரும்பூட் பொறையன்]

58. பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதின் மாக்கள் நுவறலும் நுவல்ப
அழிவ தெவன்கொல் இப் பேதை யூர்க்கே
[2]பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்ன
இம், மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.
(குறுந். 89.)

தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழி, தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

[ஆஅய்]

59. கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது

---

1. 'பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லி.' (குறுந். 89.)
'பொறைய, னுரைசா லுயர்வரைக் கொல்லி.' (நற். 185.)
'பொறையன், பெருந்தண் கொல்லி.' (நற். 346.)

2. 'பசும்பூட் பொறையன். . . . கொல்லி.' (அகம். 303.)

'கோல்லிப் பொருந கொடித்தேர்ப் பொறைய' (பதிற். 73) என்பன அறியத்தக்கன.

3. 'திண்டேர்ப் பொறையன் றொண்டி.' (நற். 8.)
'கானலந் தொண்டிப் பொருநன் வென்வேற்
றெறலருந் தானைப் பொறையன்.' (நற். 18.)

நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பின்
இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படாத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
அஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பிற் சான்ற பெரிய
அம்மா அரிவையோ அல்லள் தெனாஅ
தாஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய வுருகெழு கவாஅன்
நேர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் மாதோ என்னுமென் னெஞ்சே. (அகம். 198.)

புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[அஞ்சி]

60. அருந்தெறல் மரபிற் கடவுள் காப்பப்
பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை
அணங்குடை வரைப்பிற் பாழி யாங்கண்
வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த
அருங்கல வெறுக்கையின் அரியோள் பண்புநினைந்து
வருந்தின மாதோ வெனினுமஃ தொல்லாய்
இரும்பணைத் தொடுத்த பலரா தேசல்
ஊர்ந்திழி கயிற்றிற் செலவர வருந்தி
நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி
கடுமுனை யலைத்த கொடுவி லாடவர்
ஆகொள் பூசலிற் பாடுசிறந் தெறியும்
பெருந்துடி வள்பின் வீங்குபு நெகிழா
மேய்மணி யிழந்த பாம்பின் நீநனி
தேம்பினை வாழியெ னெஞ்சே வேந்தர்
கோண்டணி யெயிலிற் காப்புச்சிறந்
தீண்டருங் குரையள் நம் மணங்கி யோளே. (அகம். 372.)

அல்லகுறிப்பட்டுப் போகாநின்ற தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[தழும்பன்.]

61. சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்
மடத்தகை ஆயங் கைதொழு தாஅங்
குறுகா லொற்ற வொல்கி ஆம்பல்
தாமரைக் கிறைஞ்சுந் தண்டுறை யூரன்
சிறுவளை விலையெனப் பெருந்தேர் பண்ணி
எம், முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே
நீயுந், தேரொடு வந்து[1]போதல் செல்லாது
நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்
இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பு
ணேஎர் தழும்பன் ஊணூ ராங்கட்
[2]பிச்சைசூழ் பெருங்களிறு போல
எம், அட்டி லோலை தொட்டனை நின்மே. (நற். 300.)

வாயில் மறுத்தது ; வரைவு கடாயதூஉமாம், மாற்றோர் னொதுமலாளர் வரைவு மேலிட்டு. மருதத்துக் களவு.

62. வெண்ணெ லரிஞர் தண்ணுமை வெரீஇக்
கண்மடற் கொண்ட தீந்தேன் இரியக்
கள்ளிரிக்குங் குயஞ்சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
வாய்மொழித் தழும்ப னூணூ ரன்ன
குவளை யுண்கண் இவளைத் தாயே
ஈனா ளாயின ளாயின் ஆனாது
நிழறொறும் நெடுந்தேர் நிற்ப வயின்றொறும்
செந்நுதல் யானை பிணிப்ப
[3]வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே. (புறம். 348.)

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற் காஞ்சி.

[விராஅன்.]

63. வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணை ருதிருந்
தேர்வண் விராஅ னிருப்பை யன்ன என்
தொல்கவின் தொலையினுந் தொலைக சார
விடேஎன் விடுக்குவெ னயிற் கடைஇக்

1. 'பேர்தல் செல்லாது' என வாசிப்பினும் அமையும்.

2. 'பொச்சை சூழ்' என்றிருக்கலாம் எனத் தோன்றுகின்றது.

3. 'வருந்தின மன்னெம் பெருந்துறை மரனே' என்பது அச்சுப்புத்தகத்துப் பாடம்.

கவவுக்கை தாங்கும் மதுகைய குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
யாசி லகலந் தழீஇயற்று
வாரல் வாழிய கவைஇநின் றோளே. (நற். 350.)

தலைமகள் ஊடல் மறுத்தாள் சொல்லியது.

64. கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை
பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்
தண்டுசேர் மள்ளரின் இயலி அயலது
குன்றுசேர் வெண்மணற் றுஞ்சும் ஊர
வெய்யை போல முயங்குதி முனையெழத்
தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்
மலிபுனல் வாயி லிருப்பை யன்ன என்
ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த
முகையவிழ் கோதை வாட்டிய
பகைவன் மன்யான் மறந்தமை கலனே. (நற். 260.)

ஊடல் மறுத்த தலைமகள் சொல்லியது.

[விச்சிக்கோன்.]

65. சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்பாய் முரசின் இரங்குந் துறைவன்
நல்கிய நாடவச் சிலவே அலரே
வில்கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரோடு பொருத ஞான்றைப் பாணர்
[1]புலிநோ குறழனிலை கண்ட
கலிகெழு குறும்பூ ரார்ப்பினும் பெரிதே. (குறுந். 328.)

வரைவிடை வேறுபட்ட கிழத்தியை, அவர் வரையும் நாள் அணித்து எனவும், அலர் அஞ்சல் எனவும் கூறியது.

[பழையன்.]

66. ஊற லவ்வாய் உருத்த தித்திப்
பேரமர் மழைக்கட் பெருந்தோட் சிறுநுதல்
நல்ல ளம்ம குறுமகள் செல்வர்
கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
[2]நெடுங்கொடி நுடங்கு மட்ட வாயில்
இருங்கதிர்க் கழனிப் பெருங்கவி னன்ன

1. ‘புலிநோக் குறழ்நிலை கண்ட’ என்றிருக்கலாம் போலும்.
2. ‘நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகின்.’ (அகம். 126.)

நலம்பா ராட்டி நடையெழிற் பொலிந்து
விழவிற் செலீஇயர் வேண்டும் வென்வேல்
இழையணி யானைச் சோழர் மறவன்
[1]கழையளந் தறியாக் காவிரிப் படப்பைப்
புனல்மலி புறவிற் [2]போஒர் கிழவோன்
பழையன் ஒக்கிய வேல்போற்
பிழையல கண்ணவள் நோக்கியோர் திறத்தே. (அகம். 326.)

தோழி, தலைமகனை வாயில் மறுத்தது.

67. வானம் மேண்டா வறனில் வாழ்க்கை
நோன்ஞாண் வினைஞர் கோளறிந் தீர்க்கும்
மீன்முதி ரிலஞ்சிக் கலித்த தாமரை
நீர்மிசை நிவந்த நெடுந்தா ளகலிலை
இருங்கயந் துளங்கக் காலுறு தோறும்
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொ
டெழுந்த கௌவையோ பெரிதே நட்பே
கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்
புனலாடு கேண்மை அனைத்தே அவனே
ஒண்டொடி மகளிர் [3]மண்டை பாழ்பட
ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்பத்
தண்ணறுஞ் சாந்தங் கமழுந் தோண்மணந்
தின்னும் பிறள்வயி னனே மனையோள்
எம்மொடு புலக்கும் என்ப வென்வேல்
மாரி யம்பின் மழைத்தோற் பழையன்
காவிரி வைப்பிற் போஒ ரன்ன என்
செறிவளை யுடைத்தலோ இலெனே உரிதினின்
யாந்தன் பகையே மல்லேம் சேர்ந்தோர்
திருநுதல் பசப்ப நீங்குங்
கொழுநன் சாலும்தன் உடனுறை பகையே. (அகம். 186.)

தலைமகட்குப் பாங்காயினர் கேட்ப, இல்விடைப் பரத்தை சொல்லி நெருங்கியது.

---

1. 'கழைமாய் காவிரி.' (அகம். 123.)

2. 'போஒர் கிழவோன்,
பழையன் வேல்வாய்த் தன்ன.' (நற். 10.)

3. 'பண்டையாழ் பாட' என்றிருக்கவேண்டும் என்று, அகநானூற்றுப் பதிப்பாசிரியர் அன்புடன் தெரிவித்தார்கள்.

[வல்லங்கிழவோன்.]

68. மேற்றுறைக் கொளீஇய கழாலிற் கீழ்த்துறை
உகுவா ரருந்தப் பகுவா யாமை[1]
கம்பு ளியவ னாக விசிபிணித்
தெண்கட் கிணையிற் பிறழும் ஊரன்
இடைநெடுந் தெருவிற் கதுமெனக் கண்டென்
[2]பொற்றொடி முன்கை பற்றின னாக
அன்னாய் என்றனென் அவன் கைவிட் டனனே
தொன்னசை [3]சொலாமை நன்னன் பறம்பிற்
[4]சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினே னாகி மற்றது
செப்பலென் மன்னால் யாய்க்கே நற்றேர்க்
கடும்பகட் டியானைச் சோழர் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லங் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவும் ஒன்னார்
[5]கதுவ முயறலும் முயல்ப அதாஅன்
றொலிபல் கூந்தல் நம்வயி னருளாது
கொன்றன னாயினும் கொலைபழு தன்றே
அருவி யாம்பல் கலித்த முன்றுறை
நன்னன் ஆய் [6]பறம் பன்ன
[7]மின்னீ ரோதி என்னைநின் குறிப்பே. (அகம். 356.)

பின்னின்ற தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி, தலைமகளைக் குறை நயப்பக் கூறியது.

[திதியன்.]

69. வயங்குவெயின் ஞெமியப் பாஅய் மின்னுவசிபு
மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல்
ஆராக் காமம் அடூஉநின் றலைப்ப
இறுவரை வீழ்நரின் நடுங்கித் தெறுவரப்
பாம்பெறி கோலிற் றமியை வைகித்

---

1. ‘வள்ளுகிர் யாமை......அகன்றுறை, பகுவாய் நிறைய நுங்கிற் கள்ளி, னுதவா ரருந்து மகிழ்பியங்கு நடை’. அகம். 256.
2. ‘வளைமுன்கை பற்றி நலிய’ (கலி. 51)
3. ‘சாலாமை’ என்பது, அச்சுப்புத்தகத்துப் பாடம்.
4. ‘சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய, கற்போல்’. (அக. 1.)
5. ‘கதவ முயறலும்’ என்பது, அச்சுப்புத்தகத்துப் பாடம்.
6. ‘பிரம்பன்ன’ என்பது அச்சுப்புத்தகத்துப் பாடம்.
7. ‘மின்னீ ரோதி.’ (நற். 339.)

தேம்புதி கொல்லோ நெஞ்சே உருமிசைக்
களிறுகண் கூடிய வான்மயங்கு ஞாட்பின்
ஒளிறுவேற் றானைக் கடுந்தேர்த் [1]திதியன்
வருபுன லிழிதரு மரம்பயி லிறும்பிற்
பிறையுறழ் மருப்பிற் கடுங்கட் பன்றிக்
குறையார் கொடுவரி குழுமுஞ் சாரல்
அறையுறு தீந்தேன் குறவ ரறுப்ப
முயலுநர் முற்றா ஏற்றரு நெடுஞ்சிமைப்
புகலரும் பொதியில் போலப்
பெறலருங் குரையள் எம் மணங்கி யோளே. (அகம். 322.)

அல்லகுறிப்பட்டுப் போகின்ற தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

70. நீளிரும் பொய்கை இரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரை
தன், அடியறி வுறுத லஞ்சிப் பையப்பையக்
கடியிலன் புகூஉங் கள்வன் போலச்
சாஅய் ஒதுங்குந் துறைகே ழூரனொ
டாவ தாக இனிநான் உண்டோ
வருகதில் லம்ம எஞ் சேரி சேர
[2]அரிவே யுண்கண்அவன் பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்
றிரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்ல[3]யாய் ஓம்பிய நலனே. (அகம். 276.)

தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

புறநானூறு

71. வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே
கடவன கழிப்பிவள் தந்தையுஞ் செய்யான்
ஒளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறும் கடிமரஞ் சேரா சேர்ந்த

---

1. ‘ பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன் ’ (அகம். 25.)
2. ‘ அரிவே யுண்கண் ’ (அகம். 27, 230.)
3. ‘ தாயோம் பாய்நலம் ’ (அகம். 146.)

ஒளிறுவேல் மறவரும் வாய்மூழ்த் தனரே
இயவரும் அறியாப் பல்லியங் கறங்க
அன்னோ, பெரும்பே துற்றன் றிவ் வருங்கடி மூதூர்
அறனிலள் மன்ற தானே விறன்மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்றா இளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்த இப் பண்பில் தாயே. (புறம். 336.)

திணை-காஞ்சி ; துறை-மகட்பாற் காஞ்சி.

72. வேந்துகுறை யுறவுங் கொடாஅன் ஏந்துகோட்
டம்பூந் தொடலை அணித்தழை யல்குற்
செம்பொறிச் சிலம்பின் இளையோள் தந்தை
எழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவின்
அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்
........................................
புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்றம் மாறான் மறலிய சினத்தன்
பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைக லாகுதல் ஒன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுதல் ஒன்றெனப்
படைதொட் டனனே குருசில் ஆயிடைக்
களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருங்கவி னிழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பின் இத் தண்பணை யூரே. (புறம். 341.)

திணை-காஞ்சி ; துறை-மகட்பாற் காஞ்சி.

73. அரைசுதலை வரினு மடங்க லானன்
நிரைகா ழெஃகம் நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை ஒய்யும்
ஊர்கவி னிழப்பும் வருவது கொல்லோ
சுணங்கணிந் தெழிலிய அணந்தேந் திளமுலை

வீங்கிறைப் பணைத்தோள் மடந்தை
மாண்பிணை யன்ன மகிழ்மட நோக்கே. (புறம். 354.)

திணை-காஞ்சி ; துறை-மகட்பாற் காஞ்சி.

குறுந்தொகை

74. கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்
தெழுகளிறு மிதித்த ஒருபழம் போலக்
குழையக் [1]கோட்டியோர்
நாம்வெங் காதலர்க் கலவென் றவ்வே. (குறுந். 24.)

பருவங் கண்டு ஆற்றாளாகிய கிழத்தி உரைத்தது.

75. துறுக லயலது [2]மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவருங் குன்ற நாடன்
நெஞ்சுகள னாக நீயலென் யானென
நற்றோள் மணந்த ஞான்றை மற்றவன்
தாவா வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே. (குறுந். 36.)

வரைவிடை வைத்துப்பிரிய, ஆற்றாள் எனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது.

76. குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருங்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே. (குறுந். 60.)

பிரிவிடை ஆற்றாமையால் தலைமகள் தோழிக்கு உரைத்தது.

77. இல்லோன் இன்பங் காமுற் றாஅங்
கரிதுவேட் டனையால் நெஞ்சே காதலி
நல்ல ளாகுதல் அறிந்தாங்
கரிய ளாகுதல் அறியா தோயே. (குறுந். 120.)

அல்லகுறிப்பட்டு மீளுந் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

---

1. ‘கொடியோர் நாவே, காதல ரகலக் கல்லென் றவ்வே’ என்றிருக்கலாம் போலும்.

2. ‘மாணையின் கொடியால் வீக்கி’. (கம்ப-யுத்த. ஒற்றுக்கேள்வி. 27.)

78. மகிழ்ந்ததன் றலையும் நறவுண் டாங்கு
விழைந்ததன் றலையும் நீவெய் துற்றனை
அருங்கரை நின்ற [1]உப்பொய் சகடம்
பெரும்பெயற் றலையவிந் தாஅங்கிவ
ளிரும்பல் கூந்தல் இயலணி கண்டே. (குறுந். 165.)

பின்னின்ற தலைமகன் மறுக்கப்பட்டுப் பெயர்ந்ததும், கூடலுறும் நெஞ்சிற்குச் சொல்லியது.

79. ஊருண் கேணி உண்டுறை தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே. (குறுந். 399.)

வரைவு நீட்டித்த விடத்து, தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

[நற்றிணை]

80. மலையுறை குறவன் காதல் மடமகள்
பெறலருங் குரையள் அருங்கடிக் காப்பினள்
சொல்லெதிர் கொள்ளாள் இனையள் அனையோ
ளுள்ளல் கூடா தென்றோய் மற்றுஞ்
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வங் காக்குந் தீதுதீர் நெடுங்கோட்
டவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினும்
உருமுடன் றெறியினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினும் திருநல வுருவின்
மாயா இயற்கைப் பாவையின்
போதல் ஒல்லாள் என் நெஞ்சத் தானே. (நற். 201.)

கழறிய பாங்கற்குத் தலைமகன் உரைத்தது.

81. [2]தொன்றுபடு துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைச் செங்கோடு கழாஅ
அழிதுளி பொழிந்த இன்குர லெழிலி
எஃகுறு பஞ்சிற் றாகி வைகறைக்
கோடுயர் நெடுவரை யாடும் நாட

---

1. 'கடல்விளை யமுதம் பெயற்கேற் றாஅங்
குருகி யுகுதல் அஞ்சுவல்.' (நற். 88.)

2. 'கொன்முரா ணிரும்புலி யரும்புழைத் தாக்கிச்
செம்மறுக் கொண்ட வெண்கோட் டியானை
கன்மிசை யருவியிற் கழூஉஞ் சால்.' (நற். 151.)

[1]நீ, நல்கா யாயினும் நயனில செய்யினும்
நின்வழிப் படூஉம்என் தோழி நன்னுத
லிருந்திறை கூடிய பசலைக்கு
மருந்துபிறி தின்மைநற் கறிந்தனை சென்மே. (நற். 247)

நீட்டியாமை வரை எனத் தோழி சொல்லியது.

82. விளக்கி னன்ன சுடர்விடு தாமரை
களிற்றுச்செவி யன்ன பாசடை தயங்க
உண்டுறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழும் ஊரற்கு நாளை
மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரொ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
களிறுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யா துமில்லதோர் போர்வையஞ் சொல்லே. (நற். 310)

வாயிலாகப் புக்க விறலியைத் தோழி சொல்லியது.
விறலியை எதிர்ப்பட்ட பரத்தை சொல்லியதூஉமாம்.

83. நிலந்தாழ் மருங்கிற் [2]றென்கடல் மேய்ந்த
விலங்குமென் றூவிச் செங்கா லன்னம்
பொன்படு நெடுங்கோட் டிமயத் துச்சி
வானர மகளிர்க்கு மேவ லாகும்
வளராப் பார்ப்பிற் கல்கிரை ஒய்யும்
அசைவில் நோன்பறை போலச் செலவர
வருந்தினை வாழிஎன் உள்ளம் ஒருநாட்
காதலி யுழைய ளாகவும்
[3]குணக்குத்தோன்று வெள்ளியின் எமக்குமார் வருமே
(நற். 356)

வரைவு மறுக்கப்பட்டு ஆற்றாளுகிய தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

---

1. 'இன்னா செயினும் இனிதுதலை யளிப்பினும்
நின்வரைப் பினளென் தோழி' (குறுந். 397)
2. 'தெண்கடல்' எனவும் பாடம்.
3. 'குணக்குத்தோன்றும் வெள்ளியின்' (நற். 230)





அகநானூறு

84. [1]வயிரத் தன்ன வையேந்து மருப்பின்
வெதிர்வேர் அன்ன பரூஉமயிர்ப் பன்றி
[2]பறைக்கண் அன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன அகலிலைச் சேம்பின்
பிண்டம் அன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கன்மிசை யூழிழி
பியாறு சேர்ந்தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்
பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்
தலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளையமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து
கண்ணினிது படுக்கும் நன்மலை நாடனொ
டுணர்ந்தனை புணர்ந்த நீயும் நின்றோட்
பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந் தென்றும்
தவலில் உலகத் துறைஇயரோ தோழி
எல்லையும் இரவும் என்னாது கல்லெனக்
கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்
தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதெனக்
கனவினும் பிரிவறி யலனே அதன்றலை
முற்றூன் கண்ட ஞான்றினும்
பிற்பெரி தளிக்கும் தன் பண்பி னானே. (அகம். 178)

தோழி, வரைவு மலிந்து சொல்லியது.

85. இலங்குசுடர் மண்டிலம் புலந்தலை பெயர்ந்து
பல்கதிர் மழுகிய கல்சே ரமையத்
தலைந்தலை மூதே றூண்குரல் விளிப்ப
மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய
முனையுழை யிருந்த வன்குடிச் சீறூர்க்
கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்
மிகுபதம் நிறைந்த தொகுகூட் டொருசிறைக்
குவியடி வெருகின் பைங்கண் ஏற்றை
ஊனசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்

---

1. 'இரும்பனஞ் செறும்பி னன்ன பரூஉமயிர்ச்
சிறுகட் பன்றி'. (அகம். 277.)

2. 'பறைக்கண் அன்ன நிறைச்சுனை'. (அகம். 324)

தளிர்புரை கொடிற்றிற் செறிமயி ரெருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ அன்ன
நெற்றிச் சேவ லற்றம் பார்க்கும்
புல்லென் மாலையும் இனிதுமன் றம்ம
நல்லக வனமுலை யடையப் புல்லுதொ
றுயிர்குழைப் பன்ன சாயற்
செயிர்தீ ரின்றுணைப் புணர்ந்திசி னோர்க்கே. (அகம். 367)

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.

---

## பிற்சேர்பு

### வடமொழியில் எழுத்துக்கள்—51.

வடமொழியில் ஐம்பத்தோரெழுத்துக்கள் உள்ளன என்பது, 'காதந்த்ரம்' என்னும் வடமொழி யிலக்கண நூலால் அறியப்படுகின்றது. அவ்வெழுத்துக்களாவன :

உயிரெழுத்துக்கள்—14
ஐந்து வருக்க எழுத்துக்கள்—25
அந்தஸ்தம்—(ய, ர, ல, வ) 4
ஊஷ்மாக்கள்—(ஶ, ஷ, ஸ, ஹ) 4
விஸர்க்கம்—1
ஜிஹ்வாமூலீயம்—1
உபத்மாநீயம்—1
அநுஸ்வாரம்—1

(காதந்த்ரம். 1: சூ. 2, 10, 14—19)

என்பன.

இனி மலையாளமொழியில் உள்ள 'பாஷாநைஷத சம்பு' என்னும் நூலினும் வடமொழி யெழுத்துக்கள் ஐம்பத்தொன்று எனக் கூறப்பட்டுளது.

'அம்பத்தொன் னக்ஷராளீ'

(பாஷாநைஷதசம்பு. 1.)

என்பது காண்க.

---

# சொல்லகராதி

## அ

ஆ



இ

ஈ



உ

பா



பி

# பரணர் என்னும் ஆராய்ச்சி நூலில் எடுத்தாளப்பட்டுள்ள நூல்களும் பிறவும்

## தமிழ்

அகநானூறு
அப்பர் தேவாரம்
இலக்கண விளக்கம்
இறையனாரகப்பொருள்—உரை
உரிச்சொல் நிகண்டு
ஐங்குறுநூறு
கடம்பவன புராணம்
கம்பராமாயணம்
கலித்தொகை
குறள்—பரிமேலழகருரை
குறுந்தொகை
சிதம்பரப் பாட்டியல்
சிலப்பதிகாரம்
சிவபெருமான் திருவந்தாதி
சீவக சிந்தாமணி
சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்
சேரன் செங்குட்டுவன்
திருத்தொண்டர் புராண சாரம்
திருமுருகாற்றுப்படை
திருவள்ளுவ மாலை
திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்
திவாகரம்
தொல்காப்பியம்—இளம்பூரணருரை, சேனாவரையருரை, தெய்வச் சிலையாருரை, நச்சினார்க்கினியருரை, பேராசிரியருரை.
நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி
நவநீதப் பாட்டியல்
நள வெண்பா
நற்றிணை
நன்னூல்
நாலடியார்
பதிற்றுப்பத்து

பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல்
பரிபாடல்
பன்னிரு பாட்டியல்
புறநானூறு
புறநானூற்றின் பழைமை
புறப்பொருள் வெண்பாமாலை
பெரிய திருமொழி—பெரிய வாச்சான் பிள்ளை வ்யாக்யானம்
பெரிய புராணம்
பொருநராற்றுப்படை
மணிமேகலை
மதுரைக் காஞ்சி
மலைபடு கடாம்
மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்
யாப்பருங்கலக் காரிகையுரை
யாப்பருங்கல விருத்தி
வச்சணந்தி மாலை
வில்லி பாரதம்
வீரசோழியவுரை

### தெலுங்கு

அப்ப கவீயம்-மேற்கோள். வரருசி வசனம்.
ஆந்த்ர ஶப்த சிந்தாமணி

### கன்னடம்

சப்த மணி தர்ப்பணம்.
பாஷா பூஷணம்

### மலையாளம்

கேரள பாணினீயம்
பாஷா நைஷத சம்பு
பாஷா பூஷணம்
ரஸஸ்வரூப நிரூபணம்
ராமனாட்டம்

### வடமொழி

அமரம்
காதந்த்ரம்
சித்ர மீமாம்ஸா
பாணினீயம்
பாணினீய ஶிக்ஷா
ஹாலாஸ்ய மாஹாத்ம்யம்

ப்ராக்ருதம்

ஷட்பாஷா சந்திரிகா—மேற்கோள்.

ஆங்கிலம்

Caldwell's Comparative Grammar
The Chronology of the Early Tamils

---

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 11 | தெரிந்த | தெரித்த |
| 59 | 17 | 226 | 262 |
| ,, | 18 | ,, ,, 4-ஆம் அடியில்ஒரு சீர் — | |
| 63 | 8 | சிந்திமின | சிந்திமின் |
| 71 | 13 | வழகாருக | வழக்காருக |
| 96 | 4 | பெருஞ்சோ | பெருஞ்சேரா |
| 111 | 31 | சர் | அரசர் |
| 121 | 29 | பெறற | பெற்ற |
| 125 | 19 | மரக்கலமும் | மரக்கலம் |
| 134 | 31 | Junga | Jinga |
| 143 | 10 | லவண | லாவண |
| 177 | 15 | தனமைப்பன்மை | தன்மைப்பன்மை |
| 179 | 12 | பெருவாய் | பெருவாய் என |
| 186 | 4 | தண்மை | தன்மை |
| 187 | 33 | இரண்டு | சில |
| 188 | 1 | என்பன | என்பவை போல்வன |
| 201 | 29 | அமைந் | அமைத் |
| 204 | 12 | முறையே, கந்து | முறையே கந்து, |
| 223 | 30 | உரையாசிரியர்களால் | ச்செய்யுளியல். சூ. 48 உரையில் பேராசிரியரால் |
| 224 | 8 | ஒம்பினர் | ஓம்பினர் |
| 246 | 18 | பெரும் | பெரும |

குறிப்பு.—பக்கம் 212-ல், 19, 20-ஆம் வரிகளிலுள்ள 'மன்றப்போதியில்' (சிலப். பதிக. 40) என்பது அறியத் தக்கது. என்னுஞ் சொற்றொடரை, 22-ஆம் வரியில், எனப்படும். என்பதன் பின் அமைத்துக்கொள்க.

261-ஆம் பக்கத்தில், 70-ஆம் பாட்டிற்கு மேல், [ஆரியர்] எனக் குறித்துக் கொள்க.

---

PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS.